# தாசியின் மோசம்

அல்லது

## கற்பின் கமை.







ஆக்கியோன்:

ஆ. சத்திவேற்பிள்ளை.

# தாசியின் மோசம்

அல்லது

## கற்பின் கமை.

இது
மருங்காபுரி சமஸ்தான வித்வானும்,
"பாரத மித்திரன்", "சுதர்மம்" பத்திரிகைகளின் ஆசிரியரும்,
சைவ சித்தாந்தப் பிரசாரகருமான
**ஆ. சத்திவேற் பிள்ளையால்**
இயற்றப்பட்டு,



மதுரை
ஹரிஸமய திவாகரம் பிரஸ்வில்
பதிப்பிக்கப்பெற்றது.



1939

விலை
அணு 0—12—0

உ

சிவமயம்

கடவுள் துணை.

# முன்னுரை.

இது, மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை ஆசிரியர்

ஸ்ரீமத். சு. நல்லசிவம்பிள்ளையவர்களால்,

வரையப்பெற்றது.

---

"தாசியின் மோசம் அல்லது கற்பின் கமை" என்னும் இந்நூல் கும்பகோணம் நகரவாசியும், மருங்காபுரி சமஸ்தான வித்வானும் "பாரதமித்திரன்" "சுதர்மம்" என்ற வாரப்பத்திரிகை, தினசரிப் பத்திரிகைகளின் ஆசிரியரும், பிரசங்க வன்மை வாய்ந்தோருமாகிய உயர் சைவத் திருவாளர் ஆ. சத்திவேற்பிள்ளையவர்களால் எழுதப்பெற்றது. இஃது ஆடவர்; பரதார கமனம், பரத்தையர் கமனம் முதலிய எத்தகைய தீயொழுக்கமுடையராயிருப்பினும் அத்தகையோரை, கற்பிற் சிறந்த பொற்புமிக்க மகளிர் தமது பொறுமையால் அத்தகைய தீயொழுக்கங்களை அறவே போக்கி தம் வயமாக்கி இல்லற தருமங்களை வழுவாது நடத்தற்குறியவரென்பதை, இக்கதாநாயகியாகிய மதனகல்யாணி, தன் நாயகனான இராஜமார்த்தாண்டன் சுந்தரசூளாமணி என்னும் காதற்கணிகையின் வயப்பட்டு, தன்னை மணம் புரிந்த மூன்றாண்டுவரை தன்முகத்தையும்

நோக்காதிருந்த அவ் அரசிளங்குமரனை, தான் பட்ட மகிஷியாகி எல்லா ஆடம்பரங்களமையப்பெற்றிருந்தும், அந்நாயகனது தீயொழுக்கத்திற்கு ஒரு சிறிதும் வெறுக்காது பொறுமையுடனிருந்து முடிவில் அக்காதற் பரத்தையின் மோகத்தை ஒரு வகையாக மாற்றச்செய்து நல்வழிப் படுத்தினளென்பதுகொண்டு நன்கு விளங்குகின்றது. இதனால் மகளிர் கற்பிற்குப் பொறுமை அவசியமென்பதும், கணிகையர் வயப்பட்டோர் அரசரேயாயினும், அறிஞரேயாயினும், தமது அறிவை முற்றும் இழப்பரென்பதும், அக்கணிகையர்; வஞ்சகத்திற்கு கொள்கலம் என்பதும் உணரற்பாலன. சொன்னயமுதலிய நன்னயங்கள் வாய்ந்த இந்நூலை, தமிழ்நாட்டாரனைவரும் வாங்கிப் படித்து மகிழ்வாராக. ஆக்கியோர்க்கு இன்னும் பல நூல் எழுதும் மனவெழுச்சியையும், மகிழ்ச்சியையும், நிறைந்த ஆயுளையும் தந்தருளும் வண்ணம் எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளாகிய மீனாட்சி சுந்தரேச்வரரை மனமொழிமெய்களால் சிந்தித்து, துதித்து, வந்திக்கின்றேன்.

---

௳

சிவமயம்.

ஸ்ரீ சண்முகநாதன் றுணை.

# பதிப்புரை.

"அரிது அரிது
மானுட ராகப் பிறத்த லரிது
மானுட ராகப் பிறந்த காலையும்
கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது."

என்று கூறிய ஔவைப்பிராட்டியாரின் திருவாக்கின்படி அருமைத்தாய மானுடப்பிறப்பை அங்கவீனமின்றிப் பெற்ற ஆடவரிற்பலர், கௌமார பருவத்தை அடைந்த காலை மோசமேபுரியுந் தாசிகளின்கண்வலைப்பட்டு அறிவுடன் கைப்பொருளையுமிழந்து அக்கினி சாக்ஷியாக மணம்புரிந்த குலமனைவியையும் பாதுகாத்தற்குச் சக்தியின்றிப் பலவகை நோய்வாய்ப்பட்டு வருந்தித் திரிவதைக் காண்கின்றோம்.

இவ்வாறு இவர்கள் கேவல நிலையை அடைதற்குக் காரணம், தாசிகளின் மோசங்களை அறிந்து கொள்ளாத தொன்றேயாகும்.

தாசிகள், தம்மனத்தில் எட்டுணையும் இரக்கமின்றி, தன்னை வந்தடுத்த ஆடவரை மருந்திடுகையினாலும், ஆபாசக் கலவிகளினாலும், வஞ்சக வார்த்தைகளினாலும் மயக்கி; அவ்வாடவர் பொருளை முற்றுங் கவர்ந்துகொண்டு உடுக்கத் துணியும், உண்ணவுணவுமில்லாத கேவல நிலையை அவ்வாடவர் பெறும்படி செய்து விரட்டிவிடுகின்றார்கள்.

பெரும் பொருள் படைத்த பல பிரபுக்கள், மணம் புரிந்த மனைவியரைத் திரும்பியும் பாராது தாசி வீடே தமக்கிருப்பிடமாகக்கொண்டு சந்தானத்தை யிழந்து பிற் காலத்திற் றத்தபுத்திரனை யடைந்து, அப்புததிரனாற் பெரிதுங் கஷ்டப்படுகின்றார்கள்.

தாசிகளையே பெரிதும் விரும்பி வாழ்ந்த பலபுருடர் கள் பச்சைவாதம், கருமேகம், குஷ்டம், இலிங்கப்புற்று, கண்டமாலை முதலிய கொடிய நோய்வாய்ப்பட்டு வருந்து வதைக் காண்கின்றோம்.

இனிக் குலமகளைப்பற்றிக் கூறுவோம்.

தன் குலத்திலுதித்த ஆடவனை அக்கினியின் முன் னர் நாயகனாகப் பெற்ற குலமகள்; அந்நாயகனுக்கடங்கி அவன் சொல்லுக்கு மாறின்றி நடக்கவேண்டும். "குல மகட்குத் தெய்வங்கொழுநனே" எனவும், "தெய்வந் தொழாள் கொழுநற்றொழுதெழுவாள்–பெய்யெனப் பெய்யு மழை" எனவுங் கூறிய ஆன்றோர் வாக்கைக் குலமகள் கடைப்பிடித்தொழுகவேண்டும். குலமகள், தன்னுடைய நாயகனிடம் ஒன்றை அறிவிக்கவேண்டுமானால், அவ னுடைய நோக்கம், காலம் முதலியவற்றை நன்கு தேர்ந்து அறிவிக்கவேண்டும். செல்வர் வீட்டிற் பிறந்த பெண்கள் பலர், தன்னாயகனை மதியாது நடக்கின்றார்கள். அவ்வாறு நடப்பது முற்றும் பிசகு. இன்னும் பல பெண்கள், தன் னாயகன் தாசி வீட்டிற்குப் போகும் கெட்ட வழக்கத்தை நிறுத்தக் கருதி, அவனுடன் அடிக்கடி கலாம் விளைத்து வருவதுடன், தன்றந்தை வீட்டிற்கும் போய்விடுகின்றார் கள். இவ்வாறுசெய்தல் பெரியபிசகாகும். மேற்கண்டவாறு

குலப்பெண்கள் நடப்பதால், அவர்கள் கணவன் தாசிகளை விரும்பிக் கெடுகின்றான்.

தாசிகளின் மோசங்களை "விறலிவிடு தூது" "நொண்டிச்சிந்து" முதலிய பலபிரபந்தங்களும், "சிலப்பதிகாரம்" போன்ற பல நூல்களும், வெளியிடுகின்றனவாயினும், அவை நூலுணர்ச்சி பெற்றார்க்கேயன்றி மற்றோர்க்குப் பயன்படுவதில்லை.

நூலுணர்ச்சி உள்ளவர், இல்லாதவராகிய பலர்க்கும் பயன்படுமாறு "தாசியின் மோசம் அல்லது கற்பின் கமை" யென்னும் இந்நூலை நாம் எளிய நடையிலெழுதி வெளியிடத் துணிந்தோம்.

இச்சரித்திரம், "நாவல்" போன்ற கட்டுக்கதையல்ல, உண்மையாகவே நடைபெற்ற சரித்திரமாகும். "காமாகயற்கண்ணி" யென்னும் முதலையுடைய பாடலை ஆதாரமாகக்கொண்டு, இச்சரித்திரம் புலவர்பரம்பரையில் நிகழ்ந்து வந்தது. இவ்வாறு நிகழ்ந்துவந்த இச்சரித்திரத்தை நாம் பல வருஷங்களுக்கு முன், நம்மால் நடத்தப்பட்டுவந்த "பாரத மித்திரன்" என்னும் வாரப்பத்திரிகையிற் சுருக்கமாக எழுதிப் பிரசுரித்தோம். பத்திரிகையில் வெளிவந்த இச்சரித்திரத்தைப் பார்த்தவரிற்பலர், மேற்படி சரித்திரத்தை விரிவாகவெழுதிப் புத்தக ரூபத்தில் வெளியிட்டால் உலகோபகாரமாக விருக்குமெனக் கடிதவாயிலாக நமக்கு அறிவித்தனர். அறிவித்த அன்பர்களின் கருத்துப்படி எழுதி அச்சிட்டு வெளிப்படுத்தற்கு, அக்காலத்தில் நமக்கிருந்த வேலைமிகுதியால் முடியாதுபோயிற்று.

தேவகோட்டை ஸ்ரீமான் உ. ராம. மெ. சுப. சேவு. மெய்யப்ப செட்டியார் அவர்கள் விருப்பத்தின்படி "திருவையாற்று மஹா கும்பாபிஷேக வைபவம்" என்னும் நூலை எழுதி அச்சிட்டுக்கொண்டிருந்த நமக்கு இடையிற் பதினைந்து தினங்கள் அவகாசங்கிடைத்தது. அக்காலத்தில் நாம் இதனை எழுதி முடித்தோம்.

இந்நூலை வாசிக்கும் ஆண்கள், தாசிகளின் மோசங்களை நன்கறிந்து அவர்களை விரும்பாது மணந்தகுலமனைவியுடன்கூடி வாழ்ந்து இகபர சுகத்தை யடைவார்கள். தாசியின் நேசத்தைப்பெற்றவர் அத்தாசியின் நேசத்தை உடனே மாற்றிக்கொண்டு உய்திபெறுவர். இந்நூலைப் படிக்கும் பெண்கள், தம்முடைய கணவனுக்கிசைய நடந்து கணவனுள்ளத்தில் தாசியின் நேசம் பிறவாவண்ணம் செய்துகொள்வதுடன், தங்கள் கணவன் தாசிநேசம் பெற்றிருந்தால் அந்நேசத்தை அவன் மறக்கும்வண்ணஞ் சமயமறிந்து புரியுஞ் செய்கையினாலும், சாதுரிய வார்த்தைகளினாலும் அவனை வசஞ்செய்துக் கொள்வார்கள். சிறுவர், சிறுமிகள் வாசித்தால் தங்களுடைய வாழ்நாளில் இல்லறத்தை முறையுடன் நடத்துதற் குதவியாகவிருக்கும்.

ஆதலால் இச்சரித்திரம் ஆண், பெண், சிறுவர், சிறுமியர் ஆகிய சகலரும் வாசித்தற்குரிய சிறந்த சரித்திரமாகும். இச்சரித்திரத்தை அச்சிடுங்காலத்தில் வேறுபல வேலைகள் நமக்கு ஏற்பட்டதால், சரியாகக் கவனிக்கப்படாமல் எழுத்துப்பிழைகள் அதிகம் நேர்ந்துள்ளன. எழுத்துப்பிழைகளுக்குத் திருத்தமெழுதி அச்சிட்டுச் சேர்த்திருக்கிறோம். அவைகளைப்பார்த்துத் திருத்தி வாசித்துக் கொள்ளவேண்டியது.

இங்ஙனம்,

ஆ. சத்திவேற்பிள்ளை.

# பிழை திருத்தம்

| பக்கம். | வரி. | பிழை, | திருத்தம், |
|---|---|---|---|
| 1 | 1 | செந்தமிழ் சிறப்பு | செந்தமிழ்ச் சிறப்பு |
| 5 | 21 | நாலா பங்களிலும் | நாலா பக்கங்களிலும் |
| 7 | 19 | காணைப்படாதன வாகும் | காணப்படாதனவாகும் |
| 9 | 11 | விக்கிரசோழன் | விக்கிரமசோழன் |
| 10 | 24 | புத்திரப்பேறடந்த | புத்திரப்பேறடைந்த |
| 11 | 17 | உறைவிடமாக விருப்பன் | உறைவிடமாக விருப்பான் |
| 13 | 20 | இவனென்றெண்ணிக் | இவனென்றெண்ணிக் |
| 14 | 21 | வரங்கிவரச்செய்து | வாங்கிவரச்செய்து |
| 25 | 1 | நோங்கி | நோக்கி |
| 25 | 23 | மற்றய | மற்றைய |
| 26 | 25 | பைந்தாடி | பைந்தொடி |
| 28 | 18 | சுந்தரசூளாமணிபின் | சுந்தரசூளாமணியின் |
| 35 | 26 | சமயற் | சமையற் |
| 39 | 5 | முறையாமை | முரையாமை |
| 42 | 7 | நிரவாணமாக்கிக் | நிர்வாணமாக்கிக் |
| 46 | 25 | பர்ர்த்துக்கொண்டு | பார்த்துக்கொண்டு |
| 48 | 22 | மிகவம் | மிகவும் |
| 53 | 4 | சுகுமாரனுக்காக | சுகுமாரனுக்காக |
| 63 | 20 | ஸ்ரீசுந்தரமூர்திகளைக் | ஸ்ரீசுந்தரமூர்த்திகளைக் |
| 64 | 3 | நாயகனாகவம் | நாயகனாகவும் |
| 64 | 7 | எள்னாருயிர் | என்னாருயிர் |
| 70 | 11 | இவ்வள | இவ்வளவு |
| 78 | 7 | தண்னீர் | தண்ணீர் |
| 88 | 14 | குதூகலததை | குதூகலத்தை |
| 89 | 17 | விடடுவிட்டோம் | விட்டுவிட்டோம் |

| | | | |
|---|---|---|---|
| 89 | 25 | இனபத்தை | இன்பத்தை |
| 92 | 17 | போட்டுக்கொன்டு | போட்டுக்கொண்டு |
| 96 | 23 | சுந்த்ரசூளாமணி | சுந்தரசூளாமணி |
| 99 | 1 | கவனிகவில்லைக் | கவனிக்கவில்லை |
| 101 | 3 | எவற்காரறையன்றி | எவற்காரரையன்றி |
| 103 | 4 | றுயறமாற | றுயரமாற |
| 112 | 21 | திருவுள்ளதிற் | திருவுள்ளத்திற் |
| 144 | 17 | பிரியமாகவுவ்ளது | பிரியமாகவுள்ளது |
| 149 | 8 | மூகப்பு | முகப்பு |
| 149 | 25 | இள்வளவு | இவ்வளவு |
| 156 | 8 | அதிகவார்வங்கொரண்டு | அதிகவார்வங்கொண்டு |
| 157 | 8 | விக்கிர சோழன் | விக்கிரம சோழன் |
| 160 | 3 | உச்ச விகையில் | உச்ச விசையில் |
| 168 | 12 | மந்திராலோசனை | மந்திராலோசனை |
| 176 | 23 | மறுவைப்பெறுபோல் | மறுவைப்பெறும்போல் |
| 176 | 24 | நல்லறிதோன்றவும் | நல்லறிவு தோன்றவும் |

## செய்யுள் பாடபேதங்கள்.

---

புக்கவிடத்தென்ற, நாலடியாரின் வெண்பாவில் "எக்காலு மச்சந் தருமா லெவன் கொலோ—வுட்கான் பிறனில் புகல்" எனவும், "படியினப்பொழு தேவதைத்திடுமென்ற செய்யுளில், "கொடுமதக்குவ டெனவதைத்திடு" மென வும், "நம்பொஞு து மெய் நம்பொஞுது மெய் நம்பொ ஞுது மெய்" எனவும், அன்னையேயனைய தோழி என்ற செய்யுளில் "எனக்குமோ ரின்ப நல்கி" எனவும், ஆழ வமுக்கிஎன்ற வெண்பாவில் "நாழிமுகவாது நாஞுழி" எனவும், பாட பேதங்களுண்டு. அன்பர்கள் எந்தப் பாடத் தைக் கொள்ளினும் இழுக்கில்லை யென்பதுணர்க.

ஆ. சீ.

உ

கடவுள் துணை.

# தாசியின் மோசம்

அல்லது

# கற்பின் கமை.



## விநாயகர் துதி.

### நேரிசை வெண்பா.

ஐங்கரனே யானைமுகத் தண்ணலே கொன்றையணி
சங்கரனார் தன்மகனே தாழாதே—யிங்கெனக்குத்
தாசியின்மோ சம்புகலத் தக்கபொருட் சொல்லுதவி
மாசில் கருணைபுரி வாய்.

## செந்தமிழ் சிறப்பு.

அகிலபுவன சராசர வுயிர்த்தொகுதிக ளனைத்தையும் ஈன்றவன்னையின் அன்புகூர்ந்து காக்குங்கருணையங்கடலாம் பாற்கடற் பாம்பணைப்பள்ளிப் பரந்தாமன் றிருமேனி வண்ணம் எவ்வண்ணமோ அவ்வண்ணமே தன்வண்ணமாக் கொண்ட வேலாவலயத்தைக் கிழக்கு தெற்கு மேற்கு என்னும் முத்திக்கினும், உமையைத் தந்த இமயவெற்பை வடக்குத் திக்கினும் எல்லையாகக்கொண்ட நாம் வாழிப்பரத கண்டம், பதினெண் பாஷைகள் பயிலும் நிலப்பரப்பினை யுடையது. இப்பாஷை பதினெட்டனுள் சுந்தரமிக்க செந்தமிழ் மொழியுமொன்று.

இச் செந்தமிழ் மொழி, எழுத்து சொல் பொருள் யாப்பு அணி யென்னும் ஐந்திலக்கணங்களும் அமையைப் பெற்ற ஆசிரியப்பா வெண்பா கலிப்பா வஞ்சிப்பா மருட்பா என்னும் ஐந்துபாக்களையும், ஆசு மதுரம் சித்திரம் வித் தாரம் என்னும் நாற்கவிகளையும் அங்கமாகப் பெற்று விளங்குவதாலும், அனலில் வேவாது நின்றும், ஆற்றுப் புனலில் எதிரேறிச்சென்றும் சைவசமயமே சமயம் என் னும் உண்மையை நிலை நாட்டியதாலும், முதலையுண்ட பாலனை அழைத்தளித்ததாலும், எலும்பைப் பெண்ணாக் கியதாலும், நீற்றறையைக் குளிரச்செய்ததாலும், கடல் வாய்ப்புக்க கருங்கல்லை மிதக்கச் செய்ததாலும், ஆற்றி லிட்ட பொன்னைக் குளத்திற் கொடுத்ததாலும், திருமறை களாற் காப்புச்செய்து திறக்கமுடியாதிருந்த கபாடத்தைத் திறந்து சாத்தியதாலும், ஆற்றுவெள்ளத்தில் ஓடத்தைச் செலுத்தியதாலும், ஆற்றுநீரைத்தடுத்துவழிதந்ததாலும், ஆண்பனைகளைப் பெண்பனைகளாக மாற்றியதாலும், விட வரவு தீண்டமாண்ட வேதியச்சிறுவனையும் வணிகனையும் உயிர்பெற்றெழச் செய்ததாலும், இன்னும் இதுபோன்ற அற்புதங்கள் பலவற்றைப் புரிந்துள்ளதாலும், இன்றும் புலவர் வாக்கிலிருந்து பாவண்ணமாக வெளிப்போந்து அப் பாவைப்பெற்றார்க்குப் புலவராற் குறித்த நன்மை தீமை களைப் பயப்பதாலும் மேற்கூறப்பட்ட பதினெண்பாஷை களுள்ளுந் தமிழ்பாஷையே மிக்கசிறப்பினையுடையதாகும்.

## சோணாட்டின் சிறப்பு.

ஆதிபகவன் அகத்தியர்க்குரைத்த அமிழ்தின் சுவையவித்தமிழ்மொழி, குணகடல் குமரி குடகம் வேங்

கடமென்னும் இந்நான்கையும் எல்லையாகக்கொண்ட நிலப் பரப்பில் வளம்பெற்று நின்று வாழ்கின்றது. சீரிய செந் தமிழ் சிறந்து வாழும் இந்நிலப்பரப்பு, பண்டைப்புலவரும் பனுவலும் செந்தமிழ் நாடெனச் செப்பவிளங்கும். செப்ப விளங்குமிச் செந்தமிழ் நாட்டைச் சேரன் சோழன் பாண் டியன் என்னும் பெயர்பெற்ற முடிமன்னர்மூவர் வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறைவிளங்கப் பூத பரம்பரை பொலியச்செங்கோல் செலுத்தித் தொன்றுதொட்டாண்டு வந்தனர். இம்முடிமன்னர் மூவராண்ட காரணத்தால், செந் தமிழ் நாடு சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு என்று வழங் கும் மூன்று பகுப்பைப்பெற்றது.

முன்னர்க் கூறப்பட்ட முடிமன்னர் மூவருள் இடை நின்ற சோழமன்னன் ஆட்சியைப்பெற்ற சோழநாடு, பாவிரி செந்நாப்படைத்த பலபுலவராற் பாராட்டிப் புகழப் பெற்ற காவிரி நதியாயும் கவின்பெற்றுள்ளது.

இமயத்துதித்து எழுநூறுகாதம் புவியிற் சென்று கடலிற்கலக்கும் கங்கை நதியை உத்தர கங்கையெனவும், உயர்வுடை நந்திவெற்புதித்து எழுபதுகாதம் புவியிற் சென்று கடலிற்கலக்குங் காவிரி நதியை மத்திய கங்கை யெனவும், பொதியப்பொருப்பிலுதித்து எழுகாதம்புவியிற் சென்று கடலிற் கலக்கும் பொருநை நதியைத் தெக்ஷண கங்கையெனவும் நூல்கள் கூறும்.

இம்மூன்று கங்கைநதியுள் மத்திய கங்கையாக விளங்குங் காவிரி நதி மற்ற நதிகளைப்போலாது, உழுநர் நீர்வேண்டுமென்று விரும்பிய காலத்து நீரைக்கொடுத்தும், நீர் வேண்டாமென்று விரும்பியகாலத்து நீரைக்கொடாது

மறாத்தும் அவ்வுழூநரை மகிழச்செய்யும் சிறந்தவண்மை பெற்றுள்ளது. இவ்வண்மையை உலகினர் பலருங்கண்டு மகிழுமாறு சொல்வலி படைத்த வில்லியென்னும் புலவர் பெருமான், தான் செய்த "பாரதமெ"ன்னும் இதிகாச புராணத்தில், நளனென்னும் நாமவேன் மன்னனைச் சிறப் பிக்குமுகத்தான்,

"நீவிரே யல்லிர் முன்னு ணிலமுழு தாண்ட நேமி
நாவிரி கீர்த்தி யாள னளனெனு நாம வேந்தன்
காவிரி யென்னத் தப்பாக் கருணையான் சூதிற்றோற்றுத்
தீவிரி கானஞ் சென்ற காதைநுஞ் செவிப்ப டாதோ"

என்னுந் திருவிருத்தால் அறிவிக்கின்றனர்.

இத்தகைய உத்தமநதிபாயும் நாடு, சோழமன்னர் ஆட்சியைப்பெற்ற காரணத்தாற் சோழநாடு சோணடெனவும், காவிரிநதி பாயுங் காரணத்தாற் காவிரிநாடு பொன்னி நாடு நீர்நாடெனவும் பெயர்களைப் பெற்று விளங்கும். இஃதன்றி, குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்னும் நாற் றிணையில்; மருதத்திணையையே இந்நாடு பெரிதும் பெற் றிருப்பதால் மருதநீர் நாடென்னும் பெயரையும் பெற் றுளது. சோழநாடு மருதத்திணையையே பெரிதும் பெற் றுள்ளதென்பதை,

"பூவிரி பொலன்கழற் புனைவி ருனையான்
காவிரி நாடன்ன கழநி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினன்"

என்னுங் கம்ப ராமாயணச் செய்யுளானுங் கண்டுதெளிக.

இப்பெருஞ் சிறப்பினைத் தனக்கணிகலனாகப் பெற்ற சோழநாட்டில் ஆயிரக்கணக்கான சிவாலயங்களும், விஷ்ணு வாலயங்களும், அடியார்களுக்கருள்புரிந்து விளங்குகின்றன. அவற்றுள் மூவர் தேவாரம் பெற்ற சிவஸ்தலங்களும், ஆழ்வார் திருவாய்மொழிபெற்ற விஷ்ணு ஸ்தலங்களும் பலவுள்ளன. கோச்செங்கட் சோழமன்னராற் கட்டப்பட்ட மாடக்கோயில்கள் எழுபானிரண்டும் இந்நாட்டில் தான் இலங்குகின்றன. இவ்வாலயங்களே யன்றி, விநாயக்கடவுள் முருகக்கடவுள் இவர்களுக்குத் தனியாலயங்களும், காளி கருப்பன் சாத்தா முதலான சிறுதெய்வங்களின் ஆலயங்களும் பலவுள்ளன.

காவிரி நதியின் புனல் கால்வழி பாய்ந்து நிரம்பிய மருத நிலங்களில் கன்னலென்னச் செந்நெல்லும், கமுகென்னக் கன்னலும் செழித்தோங்கும். வாழையென்ன மஞ்சள் வளங்கொண்டிலகும். ஏருழநர் இன்னிசைப்பாடலும், நாறு நடுவோர் குரவைப் பாடலும் கேட்போர் செவிகளுக்கு இனிமை தந்து என்றும் விளங்கும். நாறு செய்வோர் களையெடுப்போர் அறுப்போர் அடிப்போர் தூற்றுவோர் அளப்போர் அளந்த செந்நெல்லைப் பண்டியிலேற்றிச் செல்வோரது பேரொலி என்றும் தழைத்து நிற்கும். கமுகு தென்னை இவைகளடர்ந்த தோட்டங்கள் நாலாபங்களிலும் மலிந்து தோன்றும். ஆற்றின் இருபாங்கரிலும் ஓங்கி வளர்ந்து கண்களுக்குக் காட்சி தந்து விளங்கும் வாழைத் தோட்டங்களின் வனப்பு இந்நாட்டைத்தவிர வேறெந்நாட்டினுங் காண்டற்கரியதாகும். வயல்களிடத்தும் வாய்க்கால்களிடத்தும் கருநெய்தல்களும் சேதாம்பல்களும் மங்கையரின் கண்களைப்போலவும், வாயைப்போல

வும் நிறைந்து மலர்ந்திருக்கும். செந்தாமரைகள் செவ் வல்லியோடு மலர்ந்த அழகிய பொய்கைகளும், ஓடைகளும், குட்டங்களும் எவ்விடத்துங் குலவித்தோன்றும். மா பலா நாரத்தை கொய்யா எலுமிச்சை முதலிய விருக்ஷங்களடர்ந்த தோட்டங்கள் மிகுந்துள்ளன. முல்லை மல்லிகை அலரி வெட்சி இருவாட்சி ஆத்தி நந்தி யாவர்த்தம் செம்பரத்தை காக்கணம் மனோரஞ்சிதம் சம்பங்கி முதலிய செடிகொடிகளும், கோங்கு செண்பகம் மந்தாரை புன்னை வில்வம் வகுளம் பாதிரி பாரிசாதம் முதலிய தருக்களும் நிறைந்த நந்தனவனங்கள் நெடுந்தூரம் மணத்தைப்பரப்பும் மலர்களுடன் குலவித்தோன்றும். தடாகங்கள் முதலிய நீர் நிலைகளிலும், செந்நெற்கழனிகளிலும் பன்னிற மீன்கள் துள்ளி விளையாடுங் காட்சி பேரானந்தத்தை விளைக்கும். நாரை கொக்கு தாரா அன்னம் முதலிய நீர்வாழ் பறவைகள் கூட்டங்கூட்டமாகத் தடாகம் ஓடை முதலிய நீர் நிலைகளில் வதியும். சோலைகளில் குயில்கள் கூவிக்கொண்டும், கிள்ளைகளும் நாகணவாய்ப்புட்களும் ஒன்றோடொன்று உறவாடிப் பேசிக்கொண்டுமிருக்கும், அன்றில் புறா முதலிய பறவைகள் ஆண் பெண் இணைபிரியாது கூடிவாழுங்காட்சி ஒருவரைவிட்டொருவர் பிரிந்து வாழும் ஒத்த அன்பினையுடைய தம்பதிகளின் உள்ளத்தில் தணப்பருங் காதலையெழுப்பி அவர்களை வருந்தச்செய்யும். கருமுக மந்திகளும் செம்முக வானரங்களும் கூட்டம் கூட்டமாகச் சோலைகளில் மகிழ்ந்து வாழும்.

மலர்த்தடங்களின் பாங்கரில் பூசை மடங்களும், யாகசாலைகளும், திருநந்தனவனங்களும், விநாயகாலயமும் அமைந்திருக்கும். தடாகங்கள் தோறும் ஒவ்வொரு

வருணத்து ஆண் பெண்கள் தனித்தனி நீராட நீர்த்துறைகள் வகுக்கப்பட்டிருக்கும்.

ஆலயம், அன்ன சத்திரம், ஆதுலருறை விடம், வித்தியா நிலையம், சந்நியாஸிகள் திருமடம், நீரறச்சாலை, குளிர் பூஞ்சோலை முதலியன இந்நாட்டிலுள்ள ஒவ்வொரு சிற்றூரிலுங்கூடக் காணப்படும்.

இந்நாட்டு மாந்தரனைவரும் புலரிக்காலையில் நீராடித் தத்தம் சமய சின்னங்களை நெற்றியிலணிந்து வருணாச்சிரம தருமங்கள் வழுவாவண்ணங் காத்து வாழ்வார்கள். பெண்களுள்ளத்திற் கற்பும், ஆண்களுள்ளத்திற் பிறர்மனை விரும்பாப் பேராற்றலும் குடிகொண்டிருக்கும். மனைவாழ்க்கை மாந்தர்கள் தம்மியல்புக்குத் தக்கவாறு அறம் புரிந்து வாழ்வர். ஊர்கடோறுந் தேவோற்சவங்களும், திருமண மாதிய மங்களச் சடங்குகளு நடைபெற்றுக் கொண்டிருக்கும். குழந்தைகளில்லாத மாந்தரும், எற்றோர்க் கிட்டுண்ணாத வில்லமும் இந்நாட்டிலில்லை. இந்நாட்டின் ஒவ்வொரு ஊரிலும் வைக்கோற் போர்கள் காணப்படுமேயன்றி மாந்தர்களுக்குள் மனவேற்றுமைப்போர்கள் எக்காலத்துங் காணப்படாதனவாகும். நீர்வளமும் நிலவளமும் நிறைந்த பெரும் வனப்பையுடைய இந்நாட்டை உலகோற்பத்தி காலந்தொட்டுச்சோழவரசர்கள் மநுமுறை தவறாது ஆண்டு வருவாராயினர்.

## சோழமன்னர் சிறப்பு.

சோழ அரசர்கள், சூரியன் வழித்தோன்றலாகிய மநு மன்னன் சந்ததியினராகலான், அவர்கள் சூரியகுலத்

தோன்றலெனவும், மநுகுலத் தோன்றலெனவும் அழைக்கப்படுவார்கள். பொய்யொன்று புகலவஞ்சி வேதியனொருவன்பால் மைந்தனொடும் மனைவியை விற்றதன்றித், தானுமோர் புலையனுக்கடிமையாகிச் சுடலைகாத்த அரசனுக்கரசனான அரிச்சந்திரனும், பசுவினிளங்கன்றுமாயத் தேரூர்ந்த தனதொரேமைந்தனை, நிலத்திற்கிடத்தித் தேரூர்ந்து பழிக்குப்பழி வாங்கித் தருமந்தன் வழிச்செல்ல அரசுபுரிந்த மநுவேந்தனும், வேடனொருடாவஞ்சித் தன்பாலடைக்கலம் புகுந்த புறாவைக்காத்தற்பொருட்டு அவ்வேடனுக்கு அப்புறாவின் நிறைக்கு நிறை தன் சரீரத்தின் மாமிசத்தை அறுத்து நிறுத்துக்கொடுத்த சிபிச்சக்கிரவர்த்தியும், சூரியகுலத் தோன்றல்களேயாவர். குலநலத்தாற் குறைவில் புகழ்படைத்த மன்னர் சோழமன்னர்களேயாவர். சோழமன்னர்களால் ஆளப்பெற்ற சோழநாட்டின் வளத்தையும், அந்நாட்டை வளம்பெறச்செய்து செல்லும் காவிரிநதியின் சிறப்பையும், சோழமன்னர் புகழையும் அளந்துகண்ட கல்வியிற் பெரிய கம்பர்,

> "தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
> மண்ணாவதுஞ் சோழ மண்டலமே" என

அந்நாட்டின் சிறப்பையும், அந்நாட்டையாளும் அரசர் சிறப்பையும், அந்நாட்டை வளப்படுத்துங் காவிரியின் சிறப்பையும் பல்லோருந் தேர்ந்து தெளியக்கூறினர்.

## நகர்ச் சிறப்பு.

சோழ மன்னரிற் பலர் காவிரிப்பூம் பட்டினத்தையும், பலர் சேய்ஞலூரையும், பலர் திருவாரூரையும், பலர் உறையூரையும், பலர் கருவூரையும், இராஜதானியாகக்

கொண்டு அரசு புரிந்து வந்தனர். சோழமன்னர் ஒவ்வொருவரும் வேதாகம சாஸ்திரங்கள் கூறும் வண்ணம் ஆலய பூஜைகளும், வருணாச்சிரம தருமங்களும், நிகழ அரசு புரிந்து வந்தார்கள். அரசாட்சியின் சிறப்பால் அந்நாட்டில் தவறாது மாதமும்மாரி பொழிந்தன. நிலம் வளம் பெற்று விளைந்தது. குடிகள் வறுமையின்றி வாழ்ந்தனர். தருமங்கள் தலை சிறந்து விளங்கின. அரசன் அளகை வேந்தனையும் அமரர்வேந்தனையு மொத்துச் செல்வத்தாலும், போகத்தாலும் சிறப்புற்று நின்றான்.

உலகமதித்த பெரும்புகழுடன் சோணாட்டையாண்ட சோழர் குலத்தில் விக்கிரசோழன் என்னும் வேந்தனொருவன்றோன்றினன். அவ்வரசன், கல்வி செல்வம் புயவலி படைவலி துணைவலி முதலியவற்றாற் சிறந்து வீதிவிடங்கப்பிரான் மகிழ்ந்தெழுந்தருளிய செல்வத்திருவாரூரைத் தலைநகராகக்கொண்டு தன் நாட்டில் வறுமையுந் தீமையுந் தலைகாட்டாவண்ணம் அரசுபுரிந்துவந்தான். விக்கிரம சோழன் ஆட்சிக்காலத்தில், அந்நாட்டில் மாதரணிந்த சிலம்புகள் புலம்பினதன்றி, மற்றொருவரும் புலம்பவில்லை. மாதரிடைகள் சிறுத்துத்தளர்ந்ததேயன்றி, மற்றொருவருஞ் சிறுத்துத்தளரவில்லை. மாதர்கள் கூந்தல் கறுத்ததேயன்றி, மற்றொருவருங் கறுத்தாரில்லை. யாககுண்டங்களும் அட்டில்களும் தீயனவாகக்காணப் பட்டனவே யன்றி, மற்றெவையுந் தீயனவாகக் காணப்படவில்லை. இவையன்றிக் கொடுப்பாரிடம் ஏற்பாரில்லாக்குறை யொன்றுங் குடிகொண்டிருந்தது.

அரசன், அந்தப்புரத்தை யடைந்து மங்கை மாருடன் கலவிப்போர் புரிந்ததன்றி, பகைப்புலமடைந்து பகைவருடன் நிலவிப்போர் என்றும் புரிந்திலன். திருவாரூர்த் திருநகரம் விக்கிரம சோழன் ஆட்சிக் காலத்தில் இந்திரன் அமராவதி நகரத்தையும், குபேரன் அளகாபுரி நகரத்தையும் வென்று விளங்கிற்று.

## அரசன் புத்திரப் பேறடைதல்.

தன்னாட்டு வாழு மன்னுயிர்களைத் தனது கண்ணையும், உயிரையும் போல ஒப்பற்ற தன் குடை நிழலில் வைத்துக் காத்துவரும் விக்கிரமசோழ வேந்தனுக்குக் கட்டழகு படைத்த பட்டத்தரசிபாற் புத்திரனொருவன் பிறந்தான். நத்தும் புத்திர செல்வத்தைப் பெற்ற அம் மன்னன், எந்நாளைவிட அந்நாளிற்பெரிது மகிழ்ந்து, ஆண்டு மூன்றுவரை அரசிறைப் பொருளைக் குடிகளும் சிற்றரசர்களும் கொடுக்கவேண்டுவதில்லை யென்று யானைமீது முரசேற்றி அறைந்தறிவித்தான். சிறையிற் றண்டனையுற்றுழல்வாரை விடுவித்தான். பொன்னறையைத் திறந்தள்ளி இரவலரவாக்கெடப்பொழிந்தான். அரண்மனையிலும் நகரிலும் எண்ணைவிழா நிகழச் செய்தான். பூதானம், கோதானம், சுவர்னதானம், விதைதானம், அன்னதானமாதிய தானங்களை அந்தணரவாக்கெட வழங்கினான். பிறந்த தன்னிழங்குழவிக்கு மங்களவாத்திய முழங்கச் சாதகன் மாதிச் சடங்குகளை விதிமுறை புரிந்து உறவினருடன் மகிழ்மீக் கூர்ந்தான். அரசன் புத்திரப்பேறடைந்ததுணர்ந்த திருவாரூர் நகர மாந்தர் அனைவருந் தத்தமக்குப் புத்திரப்பேறு கிடைத்தாற்போன்று மகிழ்ந்து புத்திர

விழாக் கொண்டாடினார்கள். அன்றுமுதற் பன்னிருதினங் கள்வரை தேவாலயங்களில் விசேஷ பூசை நடந்து வந்தது.

"புத்திர னில்லா தாரைப் பொருவறு பாவி யென்ன
வித்தரை மாந்தர் கூறு மிகிழ்ச்சிநீத் துயர்ந்தே னென்று
நத்திய மகிழ்மீக் கூர்ந்தா னில வேந்தனன்று
னெத்தமற் புயங்க ளோடு முடலம்பூ ரித்த தன்றே".

புத்திரப் பேற்றான் மகிழ்ந்து புயங்களும் உடலும் பூரித்த மன்னன், பன்னிரு நாள்வரை புத்திர விழாவைப் பலரு மகிழ நடாத்தித் தனதருமைப் புதல்வனுக்கு "இராஜ மார்த்தாண்டன்" என்று நாமகரணமிட்டான்.

சமஸ்தானச் சோஸியர்கள் இளவரசன் ஜாதகத்தைக் கணித்து ஆராய்ந்து, அரசனை நோக்கி வெற்றிமிக்க விக்கிரமசோழ வேந்தே! நமது இளங்கோ சகல அரசர்களையும் வென்று அரசர்க்கரசனாக விருந்து ஆட்சி புரிவான். போகத்தில் இந்திரனையும், செல்வத்திற் றனதனையும் வென்று விளங்குவான். சிறந்த சந்ததிகளைப்பெற்று மகிழ்வான். கலைமகளுக்குந், திருமகளுக்கும் உறைவிடமாகவிருப்பன். தெய்வபக்தியிற் சிறந்து பூரணவாயுளுடன் பொலிந்து வாழ்வான் என்று கூறினார்கள்.

தன் புத்திரன் ஜாதகப்பலனைக்கேட்ட மன்னன், பெரிது மகிழ்ந்து விலைமிக்க ஆடையாபரணங்களையும், திரவியங்களையும் சோஸியர் மனமகிழ வழங்கினான்.

இராஜமார்த்தாண்டனைச் செவிலித்தாயர் கண்ணை இமைகாப்பதுபோற் காத்து வளர்த்து வந்தார்கள். இள

வாசனுக்குப் பிறந்து ஓராண்டு நிரம்பிற்று. அக்காலத் தவனுக்குச், சகுளச் சடங்கு நடைபெற்றது. சகுளச் சடங் கைப்பெற்ற இளவரசன், ஒன்றன்பின்றென்றாகத் தன்னைச் சார்ந்த காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் முதலிய பருவங்களைக்கடந்து நான்காவதாண்டு நிறைய, ஐந்தாவ தாண்டின் ஆரம்பத்தைப்பெற்றான். அது காலை அரசன் தன்னிளங்குமாரனுக்கு வித்தியாரம்பஞ் செய்வித்தான். வித்தைபயிலுந்துறை புக்கவேந்திளங்குமரன், வியாழ பக வானை யொத்த தன்னாசிரியன்பால் வடமொழி தென்மொ ழிகளிலுள்ள வேதநூல், ஆகமநூல், நீதிநூல், அருணூல், பொருணூல், தர்க்கம், வியாகரணம், ஆதியநூல்களையும், மநுதர்ம சாஸ்திர முதலிய தர்மசாஸ்திரங்களையும் அன் னத்தையும், ஆவையுமொத்த தலை மாணுக்கத் தன்மை பெற்றுப் பயின்றுவந்தான்.

கல்வித்துறை சார்ந்து கற்கவேண்டிய நூல்களனைத் தையுங் கசடறக் கற்றுவந்த பாலப்பார்த்திபன், தன்னு டைய எட்டாவதாண்டின் ஆரம்பத்தைப்பெற்றான். அக்கா லத்தில் அரசன், கல்விச் செல்வத்தைக்காதலித்துக் கண் ணுங்கருத்துமாகப் பயின்றுவருந் தனது புண்ணியப்புதல் வனுக்கு, வில்வேதத்திற்றலைமை வாய்ந்த நல்லாசியரைக் கொண்டு ஆயுதப்பயிற்சி செய்வித்தான்.

கட்டிளமைக்காவலன் தான் பயின்றுவருங் கல்வித் துறையுடன், படைப்பயிற்சித் துறையிலும் புக்கு வில் வித்தை, வாள்வித்தையாதிய ஆயுதவித்தைகளையும், இரத

வேற்றம், யானை யேற்றம், குதிரை யேற்றமாதிய ஏற்றங் களையும் பயின்றுவந்தான்.

கல்வித்துறை, படைப்பயிற்சித்துறை இரண்டையு மடைந்து காதல்கொண்டு பயின்றுவந்த காவலன் குமர னுக்குப் பதினைந்தாண்டுகள் நிரம்பின. கடிமணப்பருவத் துக்குரிய பதினறுவதாண்டு தோன்றிற்று. அதுகாலம் இராஜமார்த்தாண்டன், சகல கலைகளிலும் வல்லமைபெற்று இளஞ்சந்திரன் றினமொரு கலையாக வளரபெற்றுப் பதி னறுவதுதினத்திற் பூரணகலையொடும் பொலிவதுபோற் கௌமாரபருவத்தைப்பெற்றுப் பொலிந்தான். அரசர்க் குரிய இலட்சணங்கள் முப்பத்திரண்டும் இராஜமார்த்தாண் டன் உடலைத்தனக்கிருப்பிடமாகப் பெற்று வாழ்ந்தன. கண்டார், இவன் முருகனோ? மன்மதனோ? வித்தியாதரனோ? வென்றையுறும் வண்ணம் இராஜமார்த்தாண்டன் பேரெ ழிலுடன் விளங்கினன். இளவரசனைக்கண்ட ஆடவர், இவனைக்கூடியனுபவிக்கப் பிரமன் தனக்குப் பெண்ணுரு வைப்படைத்திலனேயென, அப்பிரமன்மீது குறைகூறி வருந்தினர்கள். ஆடவர் நிலை இவ்வாறாயின், பெண்களி னிலையைப்பற்றிப் பேசவும் வேண்டுமா ?

கண்டகன்னியர், காமனோ விவனென்றெண்ணிக் கற் புத்திறம்பி மால்கொண்டுழலப், பலவகை நலனும் நிலவுறப் பெற்ற தன்னருங்குமரனை விக்கிரமவேந்தன்கண்டு தன் னிருகண்ணொடு மனமுங்களித்து உடலம் பூரித்தான்.

கூன், குருடு, செவிடு, பேடு, மூங்கை நீங்கிய பேரழகு பெற்ற சிறந்த மைந்தனை ஒருவனடைவனேல், அவனுக்கு

அதைவிடப் பெருஞ்செல்வம் வேறில்லை. ஒருவன் பெறும் பேறு பலவற்றுள்ளுந் தலையாய பேறு அழகிற் சிறந்த அறிவுடைமைந்தனைப் பெறுதலேயாகும்.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற."

என்னும் பொய்யாமொழிப் புலவர் திருவாக்கும் இதனை வலியுறுத்தும்.

## திருமண ஆலோசனை.

பலவகைப் பேற்றினுஞ் சிறந்த அறிவறிந்த வழகிய புத்திரப்பேற்றைப் பெற்று மனங்களித்துடல் பூரித்த விக்கிரம சோழன், றன்னருமைப் புதல்வனுக்கு ஒத்தகுலனும் அழகும் பொருந்திய கன்னியைத் திருமணஞ்செய்யக் கருதினன், புத்திரனுக்குத் திருமணம் புரியக் கருதிய புரவலன், தனது அமச்சர்களையும், ஆன்றோர்களையுமழைத்துத் தனியிடத்திலவருடனிருந்து ஆலோசனை செய்வா னுயினன்.

ஓவியத் துறைகைபோய ஒருவனையழைத்து, இளவரச னுருவை வரைந்து, ஐம்பத்தாறு தேசங்களுக்கும் அறிவிற் சிறந்த தூதன்மூலம் அனுப்பி. அரசகுமாரனுக்கு ஒத்த வழகையுடைய அரசகன்னியின் உருவத்தை வரைந்து வாங்கிவரச்செய்து, மேற்படி படத்தைப்பார்த்துத் திருமணத்தை முடிவுசெய்து நடத்துவதென்று அனைவரு மொத்து ஆலோசித்து முடிவு செய்தார்கள். அமச்சரும் ஆன்றோரும் செய்த முடிவை அரசனங்கீகரித்தான். அங்கீகரித்த மன்னன், சித்திரம் வரைதலிற் கைதேர்ந்த சிறந்த

புலவனை சுபுத்தியை நாளுங்கோளும் நன்கமைந்த சுப முகூர்த்தத்தில் வரவழைத்து, இளவரசன் படத்தை வரைந்து தரும்படி கட்டளையிட்டான். அரசனுக்ஞைபெற்ற ஓவியப்புலவன், இளவரசனிருக்குந் தனியிடத்தைச் சார்ந்து, அவனுருவைச் சிறிதுபொழுது கூர்ந்துநோக்கித் தன்னுள்ளத்திற்பதியச் செய்து, பிரதான உறுப்புகள் சிலவற்றை அளந்து குறித்துக்கொண்டு தன்னில்லஞ் சார்ந்தான்.

இளவேற்றையொத்த இராஜமார்த்தாண்டன் கலையறிவாலும், போர்வலியாலுந் தன்னையொத்த மந்திரர் தந்திரர் இவர்களின் புத்திரர்களுடன் உறவுற்றுக்கலந்து பலப்பல நூலாராய்ச்சியிலும், படைப்பயிற்சியிலும், யானைப்போர், தகர்ப்போர், ஆண்டலைப்போர், குறும்பூழ்ப்போர்,முதலான போர்களைப்பார்ப்பதிலும், மாலைக்காலத்திற், சிங்கார வனஞ்சென்று அங்கு பூவுடன் பொலிந்து தோன்றுஞ் செடி கொடி தருக்களைக் கண்ணுற்றுக் களித்துலாவுவதிலும் பொழுதுபோக்கிவந்தான்.

## தாசி சுந்தர சூளாமணி.

தேவர், முனிவர், சித்தர், இயக்கர், நாகாதியோர் தினந்தினம் வந்து விமலமிக்க கமலாலய தீர்த்தத்தில் நீராடி வணங்கிப் போற்ற ஸ்ரீவீதிவிடங்கப்பெருமான் வீற்றிருக்கும் மாண்புடையதும், தன்பாற் பிறந்தார்க்கு மீண்டும் பிறவாப் பெரும்பதமளிக்குஞ் சிறப்பு வாய்ந்ததுமான திருவாரூர்த் திருநகரின் வடக்கிரத வீதியில் பங்கசவல்லியென்னும் இங்கிதத்தாசி வசித்துவந்தாள். சுலட்சணவதியான பங்கசவல்லியைப் பலர் காதலித்தனர். இழிபவர், உயர்ந்

தோர், மூத்தோர், இளையவர், கழியா நோயாற்கழிபவர் யாவ ராயினும், தன் கண்வலைப்பட்டு அழிபவர் பொருள்கொண்டு பழிபடுபோகம் விற்குந் தாசிகுலப் பங்கசவல்லி தன்பாற் காதல் கொண்டார் பலரையும், பார்வையாலும், பரிசத்தாலு மயக்கி அவர் பொருளையெல்லாந் தன் பொருளாகக் கவர்ந்து பெரும்பாக்கியவதியாக விளங்கினாள். மங்கை மடந்தையாகிய பருவமிரண்டினுந் தன்னுதரத்திற் கருப் பந்தரிக்கவொட்டாது தடுத்து மையல்கொண்ட வாலிபர் மனைப்பொருளைக் கவர்ந்துவந்த பங்கசவல்லிக்கு, அரிவைப் பருவமணைந்த காலத்தில், தனக்குப்பின் றன்னைசுவரியத் தையடையவும், தன்னைப்போற் பொருளீட்டவுந் தனக் கொரு பெண்குழந்தை வேண்டுமென்ற அவா, அவளுள் ளத்திற் குடிகொண்டது. மதனாகமத்தை ஐயம், திரிபு, அறியாமை நீங்கக் கற்றுத்தேர்ந்த அவள், பெண்குழந்தை கருத்தரித்தற்குரிய தினங்களையாராய்ந்து அத்தினங்களிற் பொருளாசையின்றி அழகிற் சிறந்த ஆடவர்களை வலிந்து பற்றிப் புணர்ந்து உண்மைப் போகத்தையும், உண்மை யின்பத்தையும் தன்னைப்புணர்ந்த ஆடவர்களுக்கு அளித்து வந்தாள்.

இவ்வாறு பொருள் விருப்பின்றிப் புத்திரி வேண்டு மென்னும் விருப்புற்றுப், பொற்பமைந்த புருடர்களை அற் புடன் புணர்ந்து பொய்யில் போகத்தை யளித்துவந்த பங்கசவல்லி, சில மாசங்களில் கருப்பமுற்றாள். பத்து மாதங்கள் நிரம்பின. பிரசவவேதனை தோன்றிற்று. தோ ன்றிய அப்பிரசவ வேதனையால் வருந்திய பங்கசவல்லி சில கடிகையில், தன பஞ்சம ஸ்தானாதிபதியான வியாழன்

பாக்கிய ஸ்தானத்தில் அந்த ஸ்தானபதியான சந்திரனுடன் கூடி உச்சம் பெற்றும், சப்தம விரைய ஸ்தானதிபதியான சுக்கிரன், பாக்கிய ஸ்தானத்துக்குப் பாக்கிய ஸ்தானமும், லெக்னத்துக்கு சுகஸ்தானமுமான பஞ்சமஸ்தானத்தில் அந்த ஸ்தானதிபனுடைய பார்வையோடுகூடி உச்சம் பெற்றும் விளங்குஞ் சுபவோரையில் சுவர்னவண்ணத்துடன் கூடின பெண்குழந்தை யொன்றைப் பெற்றாள். பிறந்த குழந்தை பெண்ணெனக்கேட்ட பங்கசம், பிரசவத்தாற் றானடைந்த வேதனை முற்றையு மறந்து அகங்களித்து முகமலர்ந்தாள். குழந்தை பிறந்த பதினாறுந் தினத்தில், அக்குழந்தைக்குச் "சுந்தர சூளாமணி" என்று பெயரிட்டாள்.

பன்னெடுங் காலம் அலைந்து திரிந்தும் அகப்படாத மேதகு பொருள், தன்கைவரப்பெற்றானொருவன்; அப்பொருளை எவ்வாறு வைத்துப் போற்றுவானோ, அஃதே போல் பங்கசவல்லி, தன்பாற்றோன்றிய சுந்தரசூளாமணியை, ஊட்டுவனவூட்டி, பூட்டுவனபூட்டி, சூட்டுவனசூட்டி, காட்டுவனகாட்டி அன்புடன் வளர்த்து வந்தாள்.

"பேதையு மதன்மேற் றூய
பெதும்பையுங் கழிய மிக்க
மேதைய ரறிவுந் தன்ன
வியனிலை மாறிச் சூழக்
கோதையை முகத்தைக் கொங்கைக்
குடத்தைக்கண் டிளைஞர் மாறன்
வாதையுற் றுழல வன்னாண்
மங்கையம் பருவஞ் சார்ந்தாள்"

அன்னையாற் பொன்னைப்போற் போற்றி வளர்த்து வந்த சுந்தர சூளாமணி, பேதை பெதும்பை என்று சொல்லப்பட்ட இருபருவமுமொருவ, வாலிபர்கண்டு மயங்கும் மங்கைப்பருவத்தை யடைந்தாள்.

மங்கைப்பருவத்தை யடைந்த சுந்தரசூளாமணியின் கூந்தல், மங்குல் போற் பெருகி, விடம்போற் கருகி, வரியறல்போன் மினுமினுத்து, இதழிக்காய்போற் றிரண்டு, சைவலம்போற் றழைத்து, வாசனையுற்று, சுழன்று, நெரித்து, இளைஞர் கண்கள் வழுக்க வார்ந்து, அவ்விளைஞருயிரை முடிப்பதுபோல முடிக்கப்பெற்று விளங்கிற்று. அவளது நுதல், என்றலைவியைக்காதலிக்கும் முழுமதியாளரும், அரைமதியினராவரென்பதை யறிவிப்பான் போன்று, அரைமதியுருவு கொண்டவிர்ந்தது. அன்னவள் நாசி, என் நாயகியைக்காதலிக்கும் மானமுள்ளார் கைப்பொருண் முற்றுமிழந்து உலகவசைக்கஞ்சித் தூக்கிட்டுக்கொண்டு உயிரை விடுவரெனக்காட்டுதல்போல், முத்தைத் தொங்கக்கட்டிய அணியுடன் நலம்பெற்று விளங்கிற்று. அப்பூங்கொடியின் கண்கள், எமது நோக்கிற் சிக்கி யெங்கள் தலைவியைச் சார்ந்தோர், தனது நிலையிழந்து கடைப்பட்டுழல்வரென்பதைக் காட்டுதல்போல், நிலையின்றி அங்குமிங்குமாகக் கடைப்பட்டுழன்று மிளிர்ந்தன. அவள் செவ்வாய், என்பாற்றோன்றும் இன்மொழிகளை வேட்டு, எம்முதல்வியைச் சேர்வோரை, உலகினர் இகழ்ந்து புன்னகை புரிவரென்பதைக் காட்டுதல்போல், புன்னகையுடன் பொலிந்து தோன்றிற்று. அந்நங்கையின் றனங்கள், தன்னை வேட்ட இளைஞர்கள், தத்தம் இல்லத்தின்கண்ணுள்ள தனத்தைத்

திரட்டிக் கைப்பற்றிவந்து எங்கள் மங்கை மகிழ இவ்வாறு தான் கொடுப்பனென்பதைக் காட்டுதல்போல், திரண்டுருண்டு நெஞ்சிற் றிகழ்ந்தன. அப்பாவை நல்லாளிடை, எனதணங்கு வந்தடுத்த வாலிபர்க்கு அறிவும் பொருளும் உண்டோ? இல்லையோ? வென்று உலகர் ஐயுறுமாறு செய்வளென்பதைக் காட்டுதல்போல், உண்டோ வில்லையோவெனக் கண்டார் பலருங்கருதும்படி கவினுற்றது. அவளது கரங்கள், தலைநிமிர்ந்த வாலிபரையும் எங்கள் தலைவி, தலை குனிந்து வளையவைப்பாளென்பதைக் காட்டுதல்போல், வளையுடன் விளங்கின. இவ்வாறு அணி கொண்ட அவயவங்களின் பொலிவு நிறைந்த மங்கைப் பருவத்தைப்பெற்ற அந்நங்கையை ஈன்ற தாய் கண்டின் புற்றாள்.

கண்ட காளையர்கள் மனமுடைந்து மயங்கும் மங்கைப் பருவத்தையடைந்த சுந்தர சூளாமணி, தன் குலவித்தையாகிய ஆடல் பாடல்களிலும், இசைக்கருவிகள் வாசிப்பதிலும் பலர் மதித்துமயங்க முதிர்ச்சி பெற்றதுடன், மதனுகமத்திலு மகிமையுற்றாள். காளைப்பருவத்தாடவர் வலியவந்து அவளைச் சார்தல்போல, நலங்கள் பல அவள் பால் வலியவந்து சார்ந்தன.

## அரசிளங்குமரன் விரைசேறி பூங்காமேவல்.

அரசமார்த்தாண்டன் ஓர் தினம் மாலைக் காலத்தில் தந்திரர் குமரரும், மந்திரர் குமரரும் சூழ்ந்துவரப் புதுமலர் பொதுளிய பூங்காவனத்தை யடைந்தான். அடைந்த அரசகுமரன், அவ்வனத்தின் நாப்பண் அமைக்கப்பட்ட

செந்தாமரை மலர் செறிந்த சுந்தரப் பொய்கையின் கரை புக்கு நாவாயேறி அப்பொய்கையின் மத்தியில் விளங்கும் சந்திரகாந்த மண்டபத்தைச் சார்ந்தான். சார்ந்த மன்னிளங் குமரன், ஆண்டிடப்பட்ட விசித்திர வேலைப்பாடமைந்த ஆசனங்களிற் றன்றோழர்களை இருக்கச்செய்து, அவர்கள் மத்தியிற் ருனுமோராசனத் தமர்ந்தான். அது காலை, சந்தனப்பொதியிற் றோன்றிய மந்தமாருதம் பையப்பைய வந்து அரசன் மேனியைப் பரிசித்தது. உல்லாசமாக வீற்றிருந்த அரசிளங்குமரன், அவ்வனத்தின் கண் ணமைந்த நானாவித காட்சிகளையுங் கண்குளிரக் கண்டு, அக்காட்சிகளைப் பலவிதமாக வருணித்துத் தன்றோழர் களுடன் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தான். இவ் வாறு பேசிக்கொண்டிருந்த இளங்கோமகன், அப்பொய் கையிற் பூத்துப் பொலிந்த புதிய வம்புய மலரணையில் பானிற வன்னங்கள், ஆணும் பெண்ணுஞ் சோடி சோடி யாக இணை பிரியாது கூடி இன்புற்றிருப்பதையும், மாந்தரு வின் சினைகளில் கோகிலங்கள், ஆணும் பெண்ணும் ஆர்ந்த வன்புடன் சேர்ந்திருப்பதையும், ஆண்முசுக்கள், தருக் களின் பழங்களைக் கவர்ந்து வந்து பெண் முசுக்களுக்குக் காதல் ததும்பக் கொடுத்து உண்ணச் செய்வதையுங் கண்டான். கண்டவக்கணமே மன்மதன், அவனுள்ளத்தில் காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் இன்ப மிக்க காமமுதலின் வித்தைப் பதித்தான். காமமுதலின் வித்துப் பதிய, மனநிலை சிறிதே திறம்பிய மன்னன் மார்த் தாண்டன் பொய்கையின் மற்றொரு பக்கத்தை நோக்கி னுன், ஆண்டு, மின்னலை யொத்த கன்னியர் பலர் பின்

றொடா அன்னத்தை நடையாலும், மயிலைச் சாயலாலும் வென்ற இளநலமிக்க சந்திரவதநச் சுந்தரி யொருத்தி வருதலைக் கண்டான். கண்ட அவன் கண்கள், வந்தவக்கன்னியின் எழிற்பெருங் கடலிற் பாய்ந்தழுந்தின. பாய்ந்தழுந்தினவக் கண்களைப் பறிக்க வலியற்ற கோக்குரிசில் இறும்பூதுற்றான். அதுகாலை, அவனுள்ளத்தில் உருவிலியாற் பதிக்கப்பட்ட காமமுதலின் வித்து முளைத்தது. முளைத்ததும், இராஜமார்த்தாண்டன் தன் கண் முன் நிற்கும் மங்கை மானவர் மங்கையோ? வானவர் மங்கையோ? வென ஐயுற்றான். ஐயுற்ற அவன் அம்மங்கையின் கண்களிமைத்தலையும், கால்கள் நிலத்திற் றோய்தலையுங்கண்டு, பூதல மங்கையெனத் தெளிந்தான். தெளிந்த இளமன்னனுள்ளத்தின்கண் முளைத்த காமமுதல் வளர்ந்தது. காமமுதல் வளரவே, அவன் கண்கள் வேறிடத்துச் செல்லாது அம் மங்கையையே நோக்கி நின்றது.

இராஜமார்த்தாண்டனைத் தன் கண்வலையாற் பிடித்துக் கட்டித் தானுமோர் இளவரசியாதல் வேண்டுமெனப் பலப் பல நாளாக அளப்பில தந்திரங்கள் செய்துவந்த கணிகைக் கன்னிக்கு, இந்நாள் அவள் கருத்து முற்றுப்பெறற்குரிய நன்னாளாயிற்று. மன்னிளங்குமரன் தன்னைக்கண்டு காதல் கொண்டதை, வஞ்சகங் குடிபுக்கு வாழும் நெஞ்சினையுடைய அப்பரத்தை மகள் கட்கடைப்பார்வையினோர்ந்தாள். முன்னையினு முகமலர்ந்தாள். புன்முறுவல் பூத்தாள். உள்ளங் களித்தாள். உடல் பூரித்தாள். தன்னைத்தானே மதித்தாள். நானே பாக்கியவதி யென்று பிறரறியாது தன்னுள் தானே சொல்லிக்கொண்டாள். தனதெண்ணங்

கைவரப்பெற்ற தாசி புத்திரி, இனி யிங்கு தாமதித்தல் அழகன்றெனக் கருதினள். புன்முறுவல் பொலிந்தமுகத்துடன் அரைக்கண் பார்வையை அவ்வரசிளங்குமரன் மீது செலுத்திப் பாங்குற்ற பாவையர்சூழ மின்னற்கொடிபோன் மறைந்து தன்னகம் புக்குத் தாயைக் கூடினள்.

### அரச குமரன் தாசி மோகத்தால் மயங்கல்.

பரத்தை மகளின் பார்வை, நாமிருவருஞ் சோடி அன்பாற் கலந்து கூடி அநவரதமும் விளையாடி வாழவருவா யென்று தன்னை அழைப்பதுபோல் அரசகுமாரனுக்குக் காணப்பட்டது.

உலக மூன்றையும் யானொருவனே வெல்வேனென வீரம்பேசும் மாரன், இச்சமயத்தில் வாளாவிருப்பனா? எழுந்தான். சுகத்தின்மீதேறினான். பார்த்திபன் மார்த் தாண்டன் பக்கத்திற் பறந்துவந்து சேர்ந்தான். கரும்பு வில்லையெடுத்தான். கரவேகத்தில் வளைத்தான். சுரும்பு நாணை மாட்டினான். தூயவரவிந்தக் கணையைப் பூட்டினான். அரசகுமரனகலத்துக் கூட்டினான்.

மாதரின்பத்தை மனத்திற்கூட்டும் மன்மதன் வனசக் கணை மருவப்பெற்ற மார்பினையுடைய மன்னிளங்குமரன் மனம், பிறதுறைகளிற் செல்லாது கண்டவவ் வேந்திழை பாற் சென்றது. தன் மனம் என்றும் புகாத நன்றறு நெறியிற் புதுவதாகப் புகுதலைக்கண்ட புரவலன் குமரன், அம்மனத்தை யந்நெறியிற் செல்லாது திருப்பும் ஆற்ற லற்றவனானான். நல்லாசிரியனது சட்சுதீட்சையைப் பெற்ற

பக்குவமிக்க தலைமாணுக்கன் றனதாற்றலிழந்து மௌன நிலையை மருவினாற்போன்று, தன விலைத்தாசியின் சட்சு தீட்சையால் அரசிளங்குமரன் றனதாற்றலிழந்து மௌன முற்றான்.

"ஒத்தேறு முருவமிலாப் பிரமமொன்று மேயொழிய
வுருவொன் றற்றோ
ரெத்தேவ ராயினுமோர் பூங்கணையா லிடர்ப்பட்டங்
கிழந்து போத
மத்தேறி யுடைதயிர்போன் மனங்கலங்கி யறிவிழந்து
மடவா ராசைப்
பித்தேறி யெந்நாளும் பேதையர்க்குப் பேதையராய்ப்
பின்செல் வாரால்."

என்னும் இச்செய்யுளின்படி, இந்திராதி தேவர்களையும் பிடித்தலைக்கும் மன்மதபாணம், மன்னன் குமரனைச் சும்மாவிடுமோ? கட்டிளமை வாய்ந்த அரச குமரன் மயங்குவதுமோர் ஆச்சரியமா?

அன்னமனைய கன்னியொருத்தி ஆவியின் கரையின் மேவியவதனையும், கௌமாரக் காவலன் கண்கள் அக்கன்னிபான் மருவியவதனையும், பெண்ணலமிக்கவப் பேதை நயனம் அரசகுமரன்பா லணைந்த வதனையும், என்றுமெழாத வெண்ணம் இறைவன் குமரனுள்ளத் தெழுந்து வேரூன்றி நின்ற வதனையும், கோக்குமரனுடன் கூடிவந்த தோழர்களில் ஒருசிலரொழிந்த பலரு மறிந்தனர். அதுகாலை, இரவி தன் குலத்தோன்றலான இராஜமார்த்தாண்டன் நிலைகண்டு, அவனைப்பார்க்க மனமின்றி வெறுத்துச் செல்வான்போல் உரவுநீர்க் கடல்புக் கொளித்தனன்.

மாநிலமும், மன்னன் குமரன் மனம்போன் மாலையாற் சூழப்பட்டது. அதுகண்ட அரசகுமரன் இருக்கைவிட்டெழுந்தான். அனைவருமுடனெழுந்தனர். ஓடமேறி நீர்நிலை கடந்தனர். வரவுபார்த்துக் காத்துநின்ற தத்தமூர்திகளிலேறி அரண்மனையை யடைந்து, சிற்றரசனை அவனது வாசஸ்தானத்தில் விட்டுத் தோழரனைவரும் விடைபெற்றுத் தத்தமுறைவிடஞ் சார்ந்தனர்.

"போதந் தனங்கல்வி பொன்றவருங் காலத்து
மாதர்மேல் வைப்பர் மனம்"

என்ற ஆன்றோர் வாக்கின்படி, அரசகுமரனைப் போகூழ் சார்ந்ததால், அவன் மனம் அடுத்தவர் பொருளைப் பகட்டிப் பறிக்கும் பாத்தைபால் சென்றது. நெறிதப்பிய மனத்தின் வழியே அவனறிவுஞ் சென்றது. மனமும் அறிவும் ஒன்றுகூடிச், செல்லும் நெறிதவறிச்சென்ற காலத்து, கோக்குமரன் தான் கண்ட குமரியைக் கூடியாடுங் குறிப்பொன்றையே கொண்ட சிந்தையனாய் உணவையுமறந்து கவலைகூர்ந்து சோபாவொன்றிற் சாய்ந்தவண்ணமே கிடந்தான்.

இரவு கடிகை இரண்டரை கழிந்தது. அதுகாலை, "தையலார் மயலிற் பட்டார் தமக்கொரு மதியுண்டாமோ" என்ற ஆன்றோர் வாக்கின்படி மதிமயங்கிக் கிடக்கும் மன்னவன் குமரனைக்காண, அவனதுயிர்த் தோழனும், மந்திரி குமரனுமான "சுகுமாரன்" அங்கு வந்தான். வந்த அவன், தன்றோழன் மனம் பெரியதோர் கவலையிலாழ்ந்திருக்கின்றதென அவன் முகத்தோற்றத் தாலுணர்ந்தான்.

உணர்ந்த சுகுமாரன், தன்றோழனை நோக்கி, வேந்திள வேறே! தங்களுள்ளத்தோர் கவலை தோன்றியிருப்பதாக வுணர்கின்றேன்; அக்கவலை யாது காரணமாக வெழுந்தது? மறையாது கூறுக. அடியேன் அதனை விரைந்து மாற்று வனெனக் கூறினான். மந்திரி குமரன் வார்த்தை, மன்ன வன் குமரன் மனநோய்க்குத் தக்க மருந்தாயிற்று. தனது ஆருயிர்த் துணைவன் கூறிய அமிழ்தினுமினிய வார்த்தை யைக் கேட்ட அரசகுமரன் மனம் களிப்படைந்தது. முகம் புன்முறுவலுடன் பொலிந்தது. அக்களிப்படைந்த அரச குமரன், மந்திரி குமரனை நோக்கி, எனதாருயிர்த்துணைவ! எனதருகில் வந்து இவ்வாசனத் தமர்கவென்று அன்பு ததும்பக் கூறினான். மந்திரிகுமரன் மன்னவன் குமரன் கட்டளைப்படி அவனருகேயுள்ள வாசனத்தில் உட்கார்ந் தான்,

இராஜமார்த்தாண்டன், தன்னருகிலிருந்த சுகுமாரனைப் பார்த்து, எனதிணையிலன்ப! என்னுள்ளத் தெழுந்த கவலை யைக் கள்ளமறச் சுருக்கிக் கழறுவன். அறிந்தென்னை இகழ்ந்து வெறுக்காது,

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு."

என்னுந் தெய்வப்புலவர் திருவாக்கின்படி, என் சிந்தையிற் கவலைத் தீர்ப்பாயாக.

இன்று மாலை, உன்னையொழிந்த மற்றய மந்திரர் தந் திரர் மக்களான பாங்கர்களுடன் பூங்காவனத்துக்கு உலாவச் சென்று, அவ்வனத்திடைமேய வம்புயப் பொய்கை நாப்

பண்ணுள்ள சந்திரகாந்த மண்டபத்திற் சகலருடனும் வீற்றிருந்தேன். சென்ற சிறிது நேரத்தில், பொன்னெழில் வாய்ந்த கன்னியொருத்தி நீங்காது சூழ்ந்த பாங்கியர் பலருடன் அப்பொய்கைக் கரையை யடைந்தாள். அடைந்த வம்மங்கை, சிலகணப் பொழுதில் என்னுள்ளத்தைக் கொள்ளைகொண்டு சென்றாள். அநங்கனும் மலர்க்கணை யேவி யென்னை அடர்க்கின்றான். என்னுள்ளங் கவர்ந்த அக்கள்ளவிழிக் காரிகையைக் கைகளாரக் கட்டித் தழுவிக் கலந்து களித்தாலன்றி என்னுயிர் நில்லாது. என் மனக் கவலையை மாற்ற உன்னையன்றி யுற்றதுணை வேறு கண்டிலேன். சகல லோகநாயகராகிய ஸ்ரீ வீதிவிடங்கப்பிரானுந் தன்றோழரான சுந்தரர் உள்ளத்தைச் சார்ந்த இதுபோன்ற கவலையைக் கழுதுகண் படுக்கும் நடுநிசிப்போதில் ஒருமுறைக் கிருமுறை தூதுசென்று மாற்றிய சீர் சால் சரிதத்தை உற்றுணர்ந்த வுனக்கு நான் மேலும் எடுத்துச் சொல்லவேண்டுவ தொன்றுமில்லை. வீதிவிடங்கத் தியாகேசன் இருமுறை சென்றாரே; நாம் மும்முறை செல்வோமென்று காலங் கடத்தாது, நீ ஒருமுறையிலே முடித்து வைத்தல்வேண்டும். இவ்வாறு முடித்து வைத்திலையேல் நாளை யென்னுயிர் நமன்றமர் கைப்படுமென்று நவின்றான்.

இராஜமார்த்தாண்டன் இயம்பிய வனைத்தையும் மிக்க கவனத்துடன் செவிசாய்த்துணர்ந்த சுகுமாரன், தன் றோழனை நோக்கி அரசர்க்கரச! ஆருயிர்த் தோழ!! உன துள்ளக் கவலையை யொழிப்பாயாக. உன் சிந்தையிற் கவல் தந்த பைந்தொடி மண்ணுலகாளும் மன்னன் மகளானலுஞ் சரி, அல்லது விண்ணுலகாளும் வேந்தன் மகளானலுஞ் சரி

அவளை நாளை யுன்னுடைய நாயகியாக்குவன். இன்றிர வும், நாளைப்பகலும் எனக்கவகாசம் வேண்டும். முதலில் அவள் யாரென்று கண்டு பிடித்தல் வேண்டும். பின்னர் அவளை உன்பாற் சேர்க்க முயற்சிக்கவேண்டும். ஆதலாற் கடிகை அறுபதாவது வேண்டாமா? எந்த விதத்தும் அந்த நளைமலர்க் குழலியை யுன் மனைவியாக்குவன். கவலற்கவெனச் சுகுமாரன் மொழிந்தான். அதுபொழுது, புற்றிடங்கொண்ட புராணன் பூங்கோயிலில் அர்த்தசாமப் பூசை மணி டாங் டாங்கென்று தொனித்தது, மணி யோசையைக் கேட்ட மந்திரிகுமரன், அரச குமரனைப் பார்த்து அன்ப! மணியோசை காதில் விழுந்ததா? சகு னம் நன்றாக விருக்கிறது. காரியங் கைகூடும். விடை தருகவென்று கூறி வெளியிற் சென்றான்.

## அரசகுமரனும், இராப்போதும்.

மந்திரி குமரன் பிரிந்தபோது இரவு கடிகை ஏழா யிற்று. மந்திரி குமரன் வெளியிற் செல்லட்டுமென்று காத்திருந்த பரிசாரகன் அரசகுமரன் முன் வந்தான். மன முழுதையும் சுந்தரசூளாமணியிடம் செலுத்தி மயங்கியிருக் கும் மார்த்தாண்டன், பரிசாரகனைச் சுகுமாரனென்று கருதி, நண்ப! என்ன விரைந்து திரும்பி வந்தாய்? காரியங் கைகூடிற்றோ வென்றான். அச்சொற் கேட்ட பரிசாரகன் இல்லை, நான் பரிசாரகன், போஜனத்திற்குக் காலதாமத மாகிறதே யென்றான். அதுகேட்ட இளவரசன், ஓகோ பரிசாரகனா? நீ எங்கே வந்தாய் கூறென்றான். பரிசாரக னதற்கு, மகாராஜாவை போஜனத்துக்கு அழைக்க வந்தே

னென்றான். மார்த்தாண்டன் பரிசாரகனைப் பார்த்து, அடே! எனக்குப் பசிக்கவில்லை. சாப்பாடு வேண்டாம் போ வென்றான். அதுகேட்ட பரிசாரகன் கொஞ்சம் பாலாவது கொண்டு வருகின்றேனென்றான். அஃதுணர்ந்த வரசன், நீ விடமாட்டாய். சரி, கொண்டுவந்து தொலையென்றான். பரிசாரகன் பால் கொண்டுவந்து கொடுத்தான். வாங்கி யுண்ட மன்னன் புதல்வன், இது பாலா? ஏன் கசக்கிறது? வேண்டாங் கொண்டுபோ வென்றான். அச்சத்துடன் பரி சாரகன் அதனை வாங்கிக்கொண்டு போய் விட்டான். அவன் போன பின்னர் படுக்கை தயார்செய்யும் பணியா ளன் வந்தான். இளங்கோ, அப்பணியாளனையும் பார்த்து யார்? சுகுமாரனா? வென்றான். அரச குமாரன் வினவுரை கேட்ட பணியாளன் இல்லை, நான் படுக்கை தயார்ச்செய்ய வந்தேனென்றான். சரி, சீக்கிரந் தயார்ச்செய்து வைத்துப் போவென்று கட்டளையிட்டான். பணியாளன் அச்சத் துடன் விரைந்து படுக்கையைத் தயார்ச் செய்து வைத்து உத்தரவு பெற்றுப் போய்விட்டான்.

சுந்தர சூளாமணியின் பார்வை விடத்தான் மயங்கிய இளம் பார்த்திபன் றுணையொருவருமின்றித் தனியிடத்தி லிருந்தான். இதுதான் தக்க சமயமெனக் கடைப்பிடித்த மன்மதன், இராஜமார்த்தாண்டன் மீது சூதக்கணைகளைச் சொரிந்தான். சொரிந்த அக்கணைகள் படவே, அரச குமரன் மேனியிற் பசலையுண்டாயிற்று. அதுகண்ட வநங் கன், மீண்டும் அசோகவம்பைத் தூவினன். இளமன்னன் அதனை யாற்றாது சோகமுற்றான். சோகமுற்றதைக்கண்ட சுகவாகனன், இனிக் கொற்றவன் குமரன் மீது மற்றக்

கணைகளை யேவுதல் தகுதியன்றெனக் கருதினன். தென் றற்றேரோன் விடுத்த, அரவிந்தம், சூதம், அசோகமாகிய மூவகைக் கணைகளும் இராஜமார்த்தாண்டனைச் சார்ந்ததும், அவன் சரீரங் காமத்தீயில் வேகத்தலைப்பட்டது. இதற்கு முன் காமத்தீயின் கொடுமையைச் சிறிதளவுங் கண்டிராத அரசகுமரன், இன்று தன்னைப்பற்றிய அத்தீயின் கொடு மைக்காற்றாது வருந்தினன். வருந்தியவன் இதற்கு நான் என்செய்வேன், என் சரீரமுழுதுங் காந்துகிறதே யென்று புலம்பி, அங்குள்ள சலவைக் கல்லிற்போய்ப் படுத்தான். வெப்பம் அதிகப்பட்டது. அதுகண்டு, அக்கல்லைவிட் டெழுந்து பக்கத்துள்ள ஸ்நான மண்டபத்தை யடைந்து குளித்தான். வெப்பம் மேலும் வளர்ந்தது, தன்னைப் பற்றி வருத்தும் வெப்பம் வளரவே, அதனைமாற்ற வகை யறியாது மன்னன் குமரன் மயங்கினன்,

"ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
யொளிப்பினுங் காமஞ் சுடும்."

என்றபடி, அரசகுமரன் செய்த பரிகாரமொன்றின லுங் குன்றாது, மேலு மேலும் வளர்ந்துள்ள காமத்தீ, அவனைத் தகிக்க, அதனால் வாட்டமுற்ற இளமன்னன் கண்ணெதிரே "சுந்தர சூளாமணி"யின் உருவெளித்தோற் றங் காணப்பட்டது. அதனைக்கண்ட அவ்விளவேறு, "சுந்தர சூளாமணி"யே தனதின்னல் கண்டு முன்னர் வந் தாளெனக் கருதி, ஆ, என்னாருயிர்க் காதலி! என்மீதிரக் கங்கொண்டு வந்தாயா வென்று கூறி எழுந்தோடிக் கட்டிப்

பிடித்தான். கையில் ஒன்றுந் தட்டுப்படவில்லை. கட்டிப் பிடித்த கைகள் அவன் மார்பையே சார்ந்தது. அதுகண்ட அரசிளங்குமரன், என் சிந்தையைக் கவர்ந்த சுந்தரத் தோகாய்! எங்கு ஒளிந்துகொண்டாய்? இவ்வாறு செய்வது அழகல்ல. இது சமயம், நீ என்னை ஆலிங்கனஞ் செய்து ஒரு முத்தங் கொடு. இவ்வாறு செய்ய நீ தாமதிப்பையேல், எனதுயிர் எமனுலகடையுமென்று கூறிப் புலம்பினன். இவ்வாறு "சுந்தர சூளாமணி"யின் உருவெளித் தோற்றத்தைக் கண்டு கட்டிப் பிடித்துக் காணுமற் புலம்பினது ஒருமுறை யிருமுறை யல்ல. அன்றிரா முழுவதும் அரசகுமாரனுக்கு, உருவெளித் தோற்றத்தைக் காண்பதும், அதனருகே சென்று கட்டிப் பிடிப்பதும், காணுமற் புலம்புவதுமாகவே கழிந்தது. அன்றிரவு அரசகுமாரனடைந்த துன்பத்தைக்கூற ஆதிசேடனாலும் முடியாது. மன்னன் மைந்தனுக்கு, ஒரு யுகம்போல் வளர்ந்துள்ள இராக்காலம் கழிந்தது. சூரியனும், இனி நாம் தாமதித்தால் நம் பெயர்கொண்ட நமது குலக்குமரன் இறந்து படுவானெனக் கருதி, அவனைக் காக்கக் கருணை கூர்ந்து வந்ததுபோல உதயஞ் செய்தான். இராஜமார்த்தாண்டனை யெதிர்த்தால் இனி நமக்கு வெற்றி கிடைக்காதெனக் கருதிய மதனனும், அவனை விட்டு விலகினன். அரச குமாரனுஞ் சிறிதாறுதலடைந்தான்.

## சுகுமாரன் றுப்பறிதல்.

இராஜமார்த்தாண்டனைப் பிரிந்து சென்ற சுகுமாரன் றன்னில்லஞ் சார்ந்து உணவருந்தினன், உணவருந்தி முடிந்த பின்னர், தனதில்லின் மெத்தை மீதுள்ள தன்

படுக்கையறையைச் சாய்ந்தோர் ஆசனத்திருந்து, இராஜ மார்த்தாண்டன் மனத்தை மயக்கியபெண் யாராகவிருக்கலாமென ஆலோசிக்கலானன். பற்பல துறைகளிலும் மனதைச் செலுத்தி ஆலோசித்த சுகுமாரன் ஆலோசனையில், மங்கைப் பருவத்தையுடைய ஒரு பெண், ஒரு நாயகனை மணந்து கொள்ளாதவளாக விருக்கவேதுவில்லை. மணமடைந்த பெண், தன் கணவனைத் துணை கொள்ளாது தனித்து வெளியில் வர மாட்டாள். மங்கைப்பருவ மருவப்பெற்றவள் பல பெண்களுடன் வெளிவருதல், அதிலும் மலர்ச்சோலைக்கு வருவதாக விருந்தால், அவளொரு தாசிகுலக் கன்னியாகத்தானிருக்கவேண்டுமென முடிவேற்பட்டது. முடிவேற்பட்டவுடன், இடையிற் சல்லடமணிந்தான், அதன்மீது இடைக்கச்சை யிறுக்கிக் கட்டினன். கட்டியவக்கச்சின் கண்ணே, சுரிகையொன்றை யெடுத்துச் செருகினன், கழுத்திலிருந்து கால்வரையுள்ள காவிநனைத்த அங்கியொன்றை யணிந்து கொண்டான். தலையில் சடைமுடியோடுள்ள தலைப்பாகையைத் தரித்துக்கொண்டான். முகத்தில் தாடியு மீசையுங் கட்டிக்கொண்டான். அங்கியின் மேற் றங்கிவிளங்கும்படி உருத்திராக்ஷ மாலையொன்றைக் கழுத்தின் மாட்டிக்கொண்டான். நெற்றியிற் றிரிபுண்டாமும், அதன்மேற் குங்குமத்தோடு சந்தனத்திலதம் விளங்கும்படி இட்டான். கைகளில், யோகதண்டமுந் திருவோடுந் தாங்கினன். தோளில் திருநீற்றுப்பை யொன்றைத் தொங்க மாட்டிக்கொண்டான். இவ்வாறு தான் பூண்ட சந்நியாசி வேடஞ் சரியாக யிருக்கிறதாவென்று நிலக்கண்ணுடியில் நோக்கினன். உண்மைச் சந்நியாசி வேடம் சரியாகப் பொருந்தியிருத்தலைகண்டு மகிழ்ந்தான், அறையைப்

பூட்டிச் சாவியையோர் தனியிடத்திற் பத்திரம் பண்ணி ஞன், மெத்தைப்படியிற் சத்தப்படாமலிறங்கி வீதியில் வந்தான், அதுபோது, கடிகை பத்தாயிற்று. வீட்டை விட்டு வெளிப்பட்ட சுகுமாரன், அந்நகரத்து ஒவ்வொரு வீதியிலுஞ் சென்ருன். எந்த வீதியிலும் யாதொருவித அரவமுமில்லை. வீடுகளெல்லாங் கதவு சாத்தப்பட்டு நிசப்தமாக விருந்தன. கடைசியாகத் தாசிகள் வசிக்கும் வடக்குராத வீதியை யடைந்தான். அந்த வீதியிற் பல வீடுகள் கபாட பந்தனம் பண்ணப்பட்டும், பல வீடுகள் கபாடபந்தனம் பண்ணப்படாமலுங் காணப்பட்டன. கபாட பந்தனம் பண்ணப்படாத வீட்டுத்திண்ணைகளில், புதுமணப் பெண்ணையொத்த அலங்காரத்தினையுடைய தாசிப் பெண்கள் வாலிபர் வரவை யெதிர்பார்த்து உட் கார்ந்திருந்தார்கள். கதவு சாத்தப்பட்டுள்ள சில வீடு களின் மெத்தையில், புல்லாங்குழல், வீணை முதலியன வாசிக்கப்பட்டன. இன்னுஞ் சில வீட்டு மெத்தையில், வாய்ப்பாட்டுகளும் நடைபெற்றன. திறந்துள்ள ஒவ்வொரு வீட்டின் வாயிலையும், நமது சந்நியாசியாரடைந்து, அம்மா! இந்நாய்க்குட்டிக்கு ஒரு மாங்காயளவு அன்னமகப்படுமா வென்று கேட்டார். ஒருத்தி சந்நியாசிக்குத் தாசித்தெரு வில் இராக்காலத்தில் என்னவேலை? அன்னம் வாங்கவந் தாயோ? அன்னத்தை யொத்த கன்னியைப்பார்க்க வந் தாயோ வென்ருள். மற்ருெருத்தி, பாவி மகனுக்குச் சடையைப் பாரு ஒரு கூடையிருக்கு, முன் சென்மத்திலே செமைகூலி கொடுக்காத பாவம், இந்தச் சென்மத்திலே இந்த எளவு சடையைத் தூக்கிச்செமக்கவேண்டியிருக்கிற

தென்றாள், பின்னொருத்தி, வாங்க சாமியாரே! சாதம் வாங்க வந்தியளா? சாதம் வாங்குவதுபோலச் சாலங்காட்டி பெண்டுவளேப் பாக்க வந்தியளா? சாதம் வாங்க வந்தா, சாதம் ஆப்பிடாது. மின்னேயே சாப்பிட்டுச் சாதப்பானேக் குத் தண்ணி விட்டாச்சு. பொண்டுவளேப் பாக்கவந்தாக் கையிலே பணமிருந்தாச் சொல்லுங்கப்பாத்துட்டு போவலா மென்றாள். இன்னொருத்தி, சாமி இப்படி வாங்க வெளிச் சத்திலே. நல்ல பொண்ணு சின்னப்பொண்ணு இருக்கா. அவளுக்கு ராத்திரிக்கு பத்து விராவெங் கொடுக்கணும். நீங்க சாமியாரா இருக்கீங்கோ, ஒங்களே அவளது கேக்க லாமா? அஞ்சு விராவெங் கொடுங்க, அழகழகாச் சொக மாக இருந்திட்டு நெலந் தெளியுமின்னே எளும்பிப்போகலா மென்றாள். நமது சுகுமாரச் சாமியார், இவற்றையெல்லாங் கேட்டுக்கொண்டு, தாசி பங்கசவல்லியின் வீட்டுவாசலுக்கு வந்தார். அரசகுமாரனிடத்திலிருந்து தூதாள் வருமோ வென்று எதிர்பார்த்துத் திண்ணேயில் உட்கார்ந்திருந்த பங்கசம், மிகுந்த மரியாதையும், பெருந்தன்மையுமுள்ளவ ளாதலால், சுவாமியாரைக் கண்டவுடன் இருக்கைவிட் டெழுந்து அஞ்சலி செய்து, சுவாமி! வாருங்களென்று இனிமை பொருந்தக் கூறினாள். பலதாசிகளின் கேவல வார்த்தைகளேக் கேட்டு வெறுப்படைந்து வந்த சுகுமாரச் சாமியாருக்கு, தாசி பங்கசத்தின் பணிதலோடு கூடின இனிய வார்த்தை, அவரது மனதையுஞ் செவிகளேயுங் குளிரச் செய்தது. மனமுஞ் செவிகளுங் குளிர்ந்த சாமி யார், பங்கசத்தைப் பார்த்து, அம்மா! உன்னேப் பார்த்தாற் புண்ணியவதியாகக் காணப்படுகிறது. அடியேன் பொதி

கையம் பொருப்பிற் றவஞ்செய்து கொண்டிருந்தேன். தவஞ்செய்து கொண்டிருந்த என்மனதில், திருவாரூரை யும், சிதம்பரத்தையும் தெரிசித்துக்கொண்டு காசிக்குப் போய் கங்காஸ்நானஞ் செய்யவேண்டுமென்ற எண்ண முதித்தது. உடனே பொதிகைப் பொருப்பை விட்டுப் புறப்பட்டுக் கடம்பவன க்ஷேத்திரத்தை யடைந்தேன். ஸ்ரீ மீனாக்ஷி சொக்கலிங்கத்தைத் தெரிசித்தேன். அங்கு நின்றும் புறப்பட்டு இந்நகருக்கு வந்தேன். ஸ்ரீ புற்றிடங் கொண்ட பிரானையும், ஸ்ரீ வீதிவிடங்கத் தியாகேசனையுங் கண்குளிரக்கண்டு தெரிசித்தேன். பிர்மானந்தக் காக்ஷி. இங்கு வந்து இரண்டு தினங்களாயிற்று. இந்நகரத்தை விட்டுப்பிரிய மனம் வரவில்லை. இன்று அஸ்தமனமான தும் கமலாய தீர்த்தக்கரையில் நிஷ்டை கூடிவிட்டேன். நிஷ்டை கலைந்து கொஞ்சம் நாழிதானாகிறது. பசி அகோர மாக எழும்பி யென்னை வாட்டுகிறது. நகரத்திலுள்ள ஒரு வீதிகூடப் பாக்கியில்லாமற் சுற்றி வந்தேன். ஒருவீடுகூடத் திறந்திருக்கவில்லை. கடைசியாக இந்த வீதிக்கு வந்தேன். இந்த வீதியிற்றான் பல வீடுகள் திறந்திருக்கக் கண்டேன். கண்டவென்னுள்ளத்தில் அன்னங்கிடைக்கு மென்று ஆனந்த முண்டாயிற்று. திறந்திருந்த ஒவ்வொரு வீட்டு வாசலுக்குஞ் சென்று, அன்னம் வேண்டுமென்று கேட் டேன். ஒரு வீட்டிற்கூடப் புருஷர்கள் காணப்படவில்லை. எந்த வீட்டிலும் பெண்கள் தானிருக்கிறார்கள். அவர்கள் என்னென்னமோ சொல்லி யென்னைத் திட்டினார்கள். அவற்றையெல்லாஞ் சொல்ல எனக்கு இஷ்டமில்லை. உன்னைப் பார்த்தாற் குணவதியாகவும், பாக்கியவதியாகவுங்

காணப்படுகிறது. உன் முகத்தில் அஷ்ட லெட்சுமிகளுங் கூத்தாடப் பார்க்கிறேன். நீ எனக்கு ஒரு மாங்காயளவு அன்னமிட்டு என் பசியைத் தணிக்கவேண்டும். வேறு நான் காசி பணமொன்றுங் கேட்கவில்லை யென்று கூறினர்.

சாமியார் கூறிய வார்த்தைகளைக் கேட்ட பங்கசம், மனத்தில் அன்பும் ஆதரவும் பொங்கச் சாமியாரை நோக்கி, சுவாமி! இப்படி வந்து திண்ணையிலிருங்கள். தங்களுக்கு என்னவேண்டுமென்றாலுங் கொடுத்துப் பசியை மாற்றுகிறேன். கவலை வேண்டாமென்று கூறினள். சுகுமாரச் சாமியார், பங்கசத்தின் சொற்படியே அவள் வீட்டுத் திண்ணையிற் போய் உட்கார்ந்தார். சாமியார் திண்ணையில் வந்து உட்காரக்கண்ட பங்கசம் சாமியாரைநோக்கி, சுவாமிகாள்! இப்போது நாழிகை பதினைந்தாகிறது. நான் ஒரு விஷயத்தைப் பற்றிய ஆலோசனையில் இத்தனை நாழிகை விழித்துக்கொண்டிருந்து விட்டேன். அவ்வாறு விழித்துக் கொண்டிருந்ததும்நல்லகாரியமாகவேமுடிந்தது. விழித்துக் கொண்டிராவிட்டால் புண்ணியாத்துமாவாகிய தங்களைத் தெரிசிக்கவும், தங்களுக்கு உணவளித்துத் தொண்டுசெய்வதுமான பாக்கியம் எனக்குக் கிடைக்குமா? இன்று சாப்பாடு இரவு ஐந்து நாழிகைக்குள்ளாகி விட்டது. சமயற் செய்பவள் சாதத்துக்கு நீர் பூட்டிவிட்டுத் தன் சொந்த விட்டிற்குப் போய்விட்டாள். தண்ணீரிற் சம்பந்தப்பட்ட சாதத்தைத் தாங்கள் சாப்பிடுவது நல்லதல்ல. அதனைத் தங்களுக்குப் போடுவதும் எனக்குப் புண்ணியமில்லை. சமைத்து விடுவோமென்றாற் காலமோ அகாலமாகிவிட்டது. இதுவுமன்றி, எனக்குச் சமயற் செய்யவுந்தெரியாது.

இனிச் சமயற்காரியைக் கூப்பிட்டாலும் வரமாட்டாள். ஆதலால், நல்ல வாழைப்பழம், மாம்பழ முதலியவைகளிருக்கின்றன. வற்றக்காய்ச்சிய பாலுமிருக்கிறது. கொண்டு வருகிறேன். அவற்றையுண்டு பசியை மாற்றி அடியாளுக்கு ஆசியளிக்க வேண்டுமென்று கூறினாள். பங்கசத்தின் வார்த்தையைக் கேட்ட சாமியார், தாயே! உன்னையடைந்தவென் பாக்கியமே பாக்கியம். சந்நியாசிகளுக்குரிய உணவு கந்தமூல பலங்கள்தானே. எனக்குப் பலத்தையளித்து, நீயும் நல்ல பலத்தைப் பெறுகிறாய். நாமிருவரும் இன்று நல்ல பலத்தைப் பெற்றவர்களாகிறோம். காலதாமதஞ் செய்யாது பழத்தைச் சீக்கிரங்கொண்டுவா வென்றார்.

பொதுவாகவே பங்கசம் நல்லவள். ஏழைகளிடத்தில் மனமிரக்கங்காட்டி அவர்களுக்கு வேண்டிய உதவி புரிபவள். அதிலும் சந்நியாசிகளென்றால் சொல்லவேண்டுவதில்லை. சந்நியாசிகளைக் கடவுளாகவே பாவித்துத் தொண்டு செய்யுங்குணம் படைத்தவள். இத்தகைய சற்குணவதியான பங்கசம், நமது சந்நியாசியார் வார்த்தையைக் கேட்டதும் மிகவுமகிழ்ந்து வீட்டினுள் சென்று முதலில் ஒரு சிரகத்திற் றண்ணீர் கொண்டுவந்து வைத்து, சுவாமிகள் கை கால்களைச் சுத்திசெய்து கொள்ளட்டு மென்று கூறிவிட்டு, மீண்டும் வீட்டினுள்சென்று இரண்டு பெரிய ஒட்டு மாம்பழமும், உயர்ந்த பச்சை நாடான் வாழைப்பழத்தில் ஒரு சீப்பும், ஒரு கிண்ணத்தில் நெய்யும், சர்க்கரையும் வெள்ளித்தாம்பாளத்திற் கொண்டு வந்து வைத்தாள். இதைக்கண்ட சாமியார் விடுவாரா? வாழைப்பழத்தை யுரித்துப் பிட்டுப்பிட்டு, நெய்யிலும், சர்க்கரையிலும் மாறி

மாறித்தோய்த்து, சுமார் நாலைந்து பழங்கள் வரை உள்ளே தள்ளினார். அதற்குள் பங்கசம், சுத்தமான கத்தியான் மாம்பழத்தின் தோலைச்சீவித் துண்டு துண்டாக நறுக்கி வைத்தாள். நறுக்கிய மாம்பழத் துண்டுகள் ஒரு படிக்கு மேலிருந்தன. சாமியார் மனம் வாழைப்பழத்தை விட்டு மாம்பழத்தின் மீது திரும்பிற்று. பங்கசத்தை நோக்கினார். தாயே! பாலிருக்கிறதாகச் சொன்னாயே; மாம்பழத்தைப் பாலுடன் கலந்து சாப்பிடுவது நல்லதென்றார். அவ் வார்த்தையைக் கேட்ட பங்கசம், உடனே வீட்டினுள் சென்று வெள்ளிக்கூசாவிலிருந்த பாலை, அக்கூசாவுடன் கொண்டு வந்து, கூசாவைத்திறந்து அதிலுள்ள பாலைக் கூசாத்தம்ளரில் விட்டு வைத்தாள். கண்ட சுகுமாரச்சாமி யாருக்கு ஆனந்தம் பொங்கித் ததும்பி வழிய ஆரம்பித்து விட்டது. மாம்பழத் துண்டுகளைத் தம்ளரிலுள்ள பாலிற் கலந்து கலந்து உள்ளே தள்ளினார். வீட்டில் உணவுண்டு வந்த சுகுமாரச்சாமியாருக்கு அதிகந்தள்ள முடியவில்லை. என்ன செய்வார் பாபம். எழுந்தார். கையை யலம்பினார். தாயே! மீதமுள்ளதை அங்கே உபயோகப்படுத்திக் கொள்ளட்டுமென்றார். அஃதுணர்ந்த பங்கசம் இதை மாத்திரம் சாப்பிட்டு விடுங்களென்று ஒருதம்ளர் நிறையப் பாலையூற்றிக் கொடுத்தாள். சாமியார் அதையும் உண்டு பரிபூரணம்! பரிபூரணமென்று சொல்லிக்கொண்டே ஏப்ப மிட்டார். அதுகண்ட பங்கசம் சாமியாரைப்பார்த்து, சாமி! இரவு அகாலமாகிவிட்டது; அடியாள் கிரஹத்திலேயே சயனித்திருந்து காலையிற் செல்லலாமென்று கூறி அஞ்சலி செய்தாள். பங்கசம் கூறியவதனைக்கேட்ட சாமியார்; தாயே! அவ்வாறேயாகட்டும், இதனைப்புசித்து வாவென்று

கூறினர். சாமியார் கட்டளைப்படியே பங்கசம், மீதமுள்ள பாலையும், பழத்தையுமெடுத்துக்கொண்டு உள்ளே சென்று அங்கு அரசகுமான் மீது மனதைச் செலுத்தி ஆலோசனையிலாழ்ந்திருந்த சுந்தரசூளாமணியுடனருந்தி, உயர்ந்த விரிப்பு தலையணை இவைகளுடன் விரைந்து வெளியில் வந்தாள். வந்த பங்கசத்தைச் சாமியார் புன்னகையுடன் பார்த்து, தாயே! இஃதெல்லாமிருக்கட்டும் உட்காரு. சிறிது நேரம் சத்விஷயமாகப் பேசிக்கொண்டிருப்போமென்ருர். பங்கசம் மற்ருெரு திண்ணையில் தியாகேசாவென்றுச்சரித்துக்கொண்டு உட்கார்ந்தாள்.

## சாமியாரின் சன்மார்க்கப் போதனை.

தாயே! இந்த வுலகத்தில்தான், ஏழை பணக்காரர் என்ற பேதமுண்டு. இது, மாந்தர்க்கு முற்பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகளால் ஏற்பட்டன. போன சென்மத்தில் நல்வினையாகிய புண்ணியத்தைச் செய்தவர்கள்; இந்தச் சென்மத்திற் பணக்காரர்களாகப் பிறக்கிருர்கள். பணத்தை வட்டிக்குக் கொடுத்துப் பெருக்குவதைவிடத், தரும வழியிற் செலவழிப்பதே மேலான காரியமாகும். இந்தச் சென்மத்தில் ஒருவர் தருமவழியில் ஒருவராகனைச் செலவிடுவரேல், அந்தவராகன் ஒன்றும், பலகோடி வராகனுகப் பெருகி அடுத்த சென்மத்தில் அவரிடம் வந்து சேருகிறது. இது,

"உடைப்பெரும் பொருளினை யுலகி லூதியங்
கிடைப்பதற் களித்தலிற் கிளர்மி ரப்பினு
லடுத்தவந் தேற்குநர்க் கார்வ மீதுறக்
கொடுப்பதொன் றேபல கோடி யாகுமால்,"

என்னும் நைடதச் செய்யுளாலுணர்க. ஔவைப்பிராட்டியாரும் உலகமாந்தரைப் பார்த்து, "அன்னம் இடுமின். அறநெறியைக் கைப்பிடி மின். இவ்வளவேனும் இட்டுண்மின்" என்று போதிக்கிறார். திருவள்ளுவரும்,

> "இலனென்னு மெவ்வ முறையாமை யீதல்
> குலனுடையான் கண்ணே யுள."

என்று கூறுகிறார், ஆகவே, இந்த வுலகத்திற்பிறந்த மக்கள் புண்ணிய மொன்றனையு மறவாது புரிதல் வேண்டும். புண்ணியத்தை மறவாது புரிந்தவர், சுவர்க்காதி யின்பங்களையும், மோட்சத்தையு மடைகின்றார்கள். தாயே! போன சென்மத்தில் நீ புரிந்த புண்ணியத்தால்; இந்தச் சென்மத்திற் பணக்காரியாக வந்து பிறந்திருக்கின்றாய், இந்தச் சென்மத்திற்புரியும் புண்ணியத்தால், வருஞ் சென்மத்திற் சுவர்க்கவுலகிற் றேவபதவியைப்பெற்று, போகாதியின்பங்களை யநுபவித்து, அங்கு நின்றபடியே போகத்தில் வெறுப்புற்றுமோட்சத்தையுமடைவாய்.

> "அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
> சிகர கோடிகள் செய்து முடிக்கிலென்
> பகரும் யோகி பகலுண் பலத்துக்கு
> நிகரில்லை யென்பது நிச்சயந் தானே."

என்னுந் திருமந்திரப்படி, நீ எனக்கு இப்பொழுதளித்த உணவினால்; உனக்கு விசேஷப் பலன்கள் கிடைக்கும்.

உலகிலுள்ள எண்பத்துநான்கு லட்சம் யோநி பேதங்களில், கீழுள்ள யோநி பேதங்களைக் கடந்து மானுடயோநியில் வந்து பிறத்தல் மிகவும் அருமை. மானுடராகப் பிறந்

தாலும், அங்கவீனமின்றிப் பிறத்தலருமை. அங்கவீன மின்றிப் பிறந்தாலும், கல்விகற்று உண்மை ஞானத்தோடு வாழ்தலரிது. கல்வி கற்று உண்மை ஞானத்தோடு வாழ்ந் தாலும், தானந்தவமிரண்டுஞ் செய்தலரிது. தானந்தவ மிரண்டையும் ஒருவன் செய்வனேல்; அவனைத் தன் னிடம் வரும்படி வானநாடு வழிதிறந்தழைக்கும். இதனை,

"அரிது அரிது
மானுடராகப் பிறத்த லரிது
மானுட ராகப் பிறந்த காலையுங்
கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நயத்த லரிது
ஞானமுங் கல்வியு நயந்த காலையுந்
தானமுந் தவமுந் தான்செய்த லரிது
தானமுந் தவமுந் தான் செய்வராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே."

என்னும் ஔவைப்பிராட்டியார் திருவாக்கானும் அறிந்து கொள்ளலாம்.

அருமையான மானுடப் பிறப்பைப் பெற்றவர்கள், பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாஸம் என் னும் நான்கு நிலைகளிலுமுறையே நின்று, அந்தந்த நிலை களுக்குரிய நல்வினைகளை வழுவாது செய்வரேல், மோட் சத்தைப் பெறுவார்கள். உத்தம சந்நியாசிகளின் நிலைகளை அரசர்களுணர்ந்து, அவர்கள் உணவாதியவற்றிற்குக் கஷ்ட மில்லாதிருந்து சமயவளர்ச்சி செய்துவரும்படி, அவர்

களுக்கு மடாலயங்களை அமைத்துக் கொடுத்தும், மானிப மாக நிலங்களை விட்டுக் கொடுத்தும் ஆதரித்து வந்தார்கள். வருகின்றார்கள். இந்த வகையில், சந்நியாசிகள் வசிக்கும் மடாலயங்கள் பலவேற்பட்டன. சந்நியாசிகள் உத்தம வொழுக்கத்துடன் அம்மடாலயங்களிற் றங்கியிருந்து மாணாக்கர்களைச் சேர்த்து, அவர்களுக்குச் சமயக்கல்வியை யும், சாஸ்திரக் கல்வியையும் போதித்துச் சமயவளர்ச்சி செய்து வருகிறார்கள். இவ்விதம் சமயவளர்ச்சி செய்து வருஞ் சில மடாலய கர்த்தர்களிடத்தில், ஆலயங்களின் நிர்வாகமு மிருந்து வருகின்றது. பெரும்பாலும் மடாலயங் களெல்லாம், ஒழுங்கான முறையிலேயே நடைபெற்று வரு கின்றன. இவ்வாறு நடைபெற்று வந்தாலும்; ஒழுங்கீன மான முறையில் நடைபெறுகின்ற மடாலயங்களும் இல்லை யென்று சொல்வதற்கில்லை. பழங்களைத் தரும் விருக்ஷக் கூட்டங்களின் மத்தியில், முள்ளுடைய வறட்டு மரமும் ஒன்றிரண்டு உற்றுநின்றாற்போல, சன்மார்க்க மடாலயங் களின் மத்தியில், துன்மார்க்கமடாலயங்களும் ஒன்றிரண்டு உற்று நிற்கின்றன. இத்துன்மார்க்க மடாலயத் தலைவரும், அவரது சீஷர்களாகிய போலிச் சந்நியாசிகளும், சிவத்தை இருதய பீடத்திலிருத்தி யோகஞ் செய்வதற்குப்பதிலாகப் பெண்களைத் தமது மடித்தலப் பீடத்திருத்திப் போகஞ் செய்து வருகின்றார்கள். இதுவுமன்றி, அம்மடவதிபர்கள் ஆண்களைச் சீஷர்களாகச் சேர்த்து, அவர்களுக்குச் சமயம் விசேஷம், நிர்வாணம் என்று சொல்லப்படும் மூன்றுவித மான தீட்சைகளையுஞ் செய்து வைப்பதை அறவே கை விட்டுப் பெண்களைத் தங்களுக்குக்குருவாகக்கொண்டு, தாம் அப்பெண்களுக்குச் சீடர்களாகி, அப்பெண்களைத் தனி

யிடத்துக் காணுஞ் சமயமே சமயதீட்சையாகவும், அப் பெண்களைத் தனியிடத்துக் கண்டு அவர்கள் விசேஷ வாய் மொழிகளைக் கேட்பதே விசேஷ தீட்சையாகவும், அப் பெண்களைத் தனியிடத்துக்கண்டு, அவர்கள் சரீரத்தில் வஸ்திரமில்லாமற் றங்கள் கைகளாற் களைந்து, அவர்களை நிர்வாணமாக்குவதுடன், தங்கள் சரீரத்திலுள்ள வஸ்திரங் களையுங் களைந்து தங்களையும் நிர்வாணமாக்கிக் கொள்ளு வதே நிர்வாண தீட்சையாகவும் பெற்று மகிழ்கின்றார்கள். இத்தகைய போலிமடத்தலைவரும், மடத்தடியரும் வாழும் மடமொன்றில் நடைபெறும் பலவித வைபோகங்களைக் கண்ணாரக் கண்டறிந்த கவிவாணரொருவர், அம்மடத்தடி யர்களுடையசெயலை வருணித்துப் "பஃறொடைவெண்பா" வொன்று பாடி வெளிப்படுத்தியிருக்கின்றார். அதனைச் சொல்லுகிறேன் கேள்.

"உத்தியோ கத்தி லொருமிக்கக் கொள்ளை கொண்டு
மெத்தவடி பட்டுவிடு பட்டவரும்—மெத்தப்
பெருந்தீன் கிடையாத பேரு மினிநா
மிருந்தான் முழுமோச மென்று—திருந்துமண்ணி
லோடும்பொன் னுஞ்சகத்தி லொன்றாகக் கண்டவர்போற்
றேடிப் பதினறு தீட்சைபெற்று—நாடித்
திருவா சகம்படித்துத் தேவார மோதிப்
பெரிதான காயாசம் பெற்றுப்—பரிந்துதின
மந்திசந்தி மூழ்கி யநுட்டானம் பண்ணியொளி
முந்தியகண் மூடி முணுமுணுத்து—வந்து
சிறிய வரைப் பெரியோர் தெண்டனிட்டு மன்னை
யிறுகருத்தி ராக்கமணி யிட்டுக்—கறுவு

புலியா தனம்விரித்துப் புத்தகங்கை யேந்தி
நலியாம ஞசிநுனி நாடிச்—சலியாம
லேறி யொருபலகை யிற்சாய்ந்து சொற்கமுத்திப்
பேறு தருவார் போற் பேச்சிட்டு—நூறு
செபமணி கைக் கொண்டு திருநீறு பூசிக்
கௌபீன மைந்தாறேழ் கட்டிச்—செபஞ்செய்
யிலக்கண சாமி யிலக்கிய சாமி
மலைச்சாமி வாய்மவுனச் சாமி—பிலத்தகா
பாத்திர சாமி பலகாரச் சாமிசைவ
சாத்திர சாமி சடைச்சாமி—மாத்தின்னும்
மொட்டைத் தலைச்சாமி மூண்ட விழிச்சாமி
பட்டத்துச் சாமிவற்றுப் பாற்சாமி—குட்டைக்
கருஞ்சாமி செஞ்சாமி கற்ப முறைச்சாமி
பெருஞ்சாமி யென்றுபல பேரா—யிருந்து
மறுவிலா நீண்டதலை வாழையிலை போட்டுக்
குறுணியரி சிச்சோறு கொட்டி—யறுசுவைய
பச்சடிமோர்க்குழம்பு பாங்கா மிளகுநீர்
வச்ச குழகறிது வட்டலெல்லா—முச்சூடும்
மொத்தை யடித்து முழுப்பூ சனிக்காய்போ
லத்தாள மென்றதற்கோர் பேரிட்டு—மெத்தக்
குரவளை கூத்தாடக் குலுக்கி வயிறு
பொருமிவளை வில்லேற்றம் போலப்—பருமூட்டுத்
திண்டுபோல் வாய்நிறையத் தின்ற கழுகுபோல்
விண்டிரை யெடுத்த விரியன்போ—லுண்டு
பலகாரத் தம்பிரான் பட்சணநெய் நாழி
யலகாரத் தின்னு மவல்தூணி—குலைவாழைத்
தீங்கனி நூறுபத் தாத்தேங்காய் மூந்நூறு
மாங்கனி முக்குறுணி மாப்பிட்டுத்—தேங்குழலே

ழப்ப மெழுப தரியதர மைஞ்ஞூறு
மூப்பதுளுத் தந்தோசை மொக்கிமொக்கி-யப்பப்ப
விங்கித்தி பட்டிணியு மிப்படியே யத்தாளத்
தங்கித்தி பட்டிணியு மப்படியே—யெங்குமிந்தக்
கீர்த்திவிர தம்போற் கிடையாதென் றோதுவா
மூர்த்திகும் பிட்டு முழங்கவே—யார்க்குஞ்
செவிகடிக டித்துத் திருகுதா ளஞ்செய்
தேவர்க்கும் பொடிபோட் டிணக்குஞ்—சிவத்த
உடையா ரிறுமாப் புடையார்சோ றுண்ணச்
சடையாரோர் கூடை சடையா—ரிடைவழியிற்
றூழ்ந்துகும்பிட் டார்கொன்றுஞ் சார்ந்துகும்பிட் டார்க்கொன்றும்
வீழ்ந்துகும்பிட் டார்க்கோர் விதமுமாய்—வாழ்ந்த
மணத்தா லுயர்ந்த மடாதி பதிகளெல்லாம்
பணத்தாசைக் கான பயிலே".

என்று சொல்லி முடித்தார். சாமியார் சொல்லச் சொல்லப் பங்கசம் இடையிடையே வயிறு புண்படும்படி குலுங்கக் குலுங்கச் சிரித்துக் கொண்டே கேட்டுவந்தாள். வீட்டினுள்ளிருந்த சுந்தர சூளாமணியின் சிரிப்புக்கோ அளவேயில்லை. வீட்டினுள்ளெழுந்த சிரிப்புச் சத்தத்தைக்கேட்ட சாமியார் பங்கசத்தை நோக்கி, தாயே! வீட்டிற்குள் சிரிப்பதாரென்றார்? சாமியாரின் வினவுரை கேட்ட பங்கசம், சாமி! அது நமது பெண்குழந்தை யென்றாள். அதுகேட்ட சாமியார் பங்கசத்தைப் பார்த்து, தாயே! உன்னுடைய யோகக்ஷேமத்தை விசாரியாமல் நெடுந்தூரம் பேசிவிட்டேன். அஃதிருக்கட்டும் அப்புறஞ் சொல்லுகிறேன். உனக்குக் குழந்தை எத்தனை யென்றார். அஃதுணர்ந்த பங்கசம், சாமி! நான் தாசி. என் பெயர் பங்கச

லல்லி. மற்றத்தாசிகளைப் போல அடுத்தவர்களைக் கெடுக்குங் குணம் எனக்குச் சொல்லிக் கொடுத்தாலும் வருகிறதில்லை. என்னை விரும்பிவந்த புருஷாளுக்கு நான் சொந்த மனைவி போலிருந்து அவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்து வைப்பேன். என்னுடைய குணத்தையறிந்து அவர்கள் தக்க முறையிற் பணங் கொடுப்பார்கள். இவ்வளவு பணங்கொடுக்க வேண்டுமென்று என்னிடம் வரும் புருஷாளை நான் கேட்பதே கிடையாது. என்னிடம் இன்பமனுபவிக்கும் புருஷாள், நான் எண்ணுவதை விட அதிகமான பணம் கொடுப்பார்கள். என்னிடம் வந்த பணங்களை நான் பத்திரப்படுத்தி வைக்காது, ஏழைகளுக்கும், பரதேசிகளுக்கும், சோறு போடுவதிலும், வஸ்திரம்வாங்கிக் கொடுப்பதிலும் செலவுசெய்து அவர்களை யாதரித்து வருகிறேன். நான் தருமவழியிற் செலவு செய்யாது பணத்தைப் பத்திரப்படுத்தியிருந்தால், சுமார் ஒரு கோடி வராகனுக்கு மேல் என் கைவசமிருக்கும். இப்போது வீடுவாசல், நிலம்பலம், ரொக்கமுதலிய சகலமும், முப்பது லெட்சம் வராகன்வரை யிருக்கிறது. எனக்கு நீண்ட காலம் பிள்ளை கிடையாது. பிள்ளையில்லாதவர்களை உலகினர் பெரும்பாவி யென்று சொல்லுவார்களே; அதுவுந் தவிரப் புத்தென்னும் நரக வாதனையும் உண்டேயென்று கருதிய நான், புத்திரப்பேறு கருதி விரதங்களை அநுஷ்டித்து வந்தேன். எனக்கு முப்பது வயதுக்கு மேல், ஒரு புத்திரிப்பேறு கிடைத்தது. அந்தப் புத்திரியோ, என் வயிற்றிற் பிறக்கிற புத்திரியல்ல. உயர்ந்த லெட்சணமுங் குணமும் அமைந்தவள். சாமுத்திரிகா லெட்சணத்திற் கொஞ்சங்கூடக் குறைவில்லை. இராஜாக்கள் வீட்டில் பிறக்க

வேண்டிய பெண்; என்னமோ சிறிது தவக்குறைவால் என் வீட்டில் வந்து பிறந்துவிட்டாள். பெண்ணோ சொர்ன விக்கிரஹம் போலிருக்கிறாள். இப்போது அவளுக்கு வயது பதினான்காகிறது, புஷ்பவதியாகிப் பத்துமாதங்களாகின்றன. அவளைத் தாசித் தொழிலில்விட எனக்கு மனமில்லை. நல்ல லெட்சணமும் குணமுமுள்ள மாப்பிள்ளையாகப்பார்த்துக் கலியாணஞ் செய்துகொடுத்துவிட வேண்டுமென்று எனக்கு எண்ணமிருந்துவருகிறது. பெண்ணோ கலியாணங்கூட வேண்டாம்; ஈஸ்வரத்தொண்டு செய்து கொண்டு தவசியாக இருந்துவிடுகிறேனென்கிறாள். வேறொரு தாசி வீட்டில் இந்தமாதிரி ஒருபெண்ணிருந்தால் அவ்வீட்டார் புஷ்பவதியான இந்தப் பத்துமாதங்களுக்குள்,பத்தாயிரம் வராகனாவது சம்பாதித்திருப்பார்கள். எனக்கிருக்கிற ஐவேசு போதாதா? இதற்குமேல் எனக்கென்னத்திற்கு பணம்? வீட்டைவிட்டு ஒருநாளும் வெளியிற் போகாத என் பெண், இன்றைக்கு என்னிடம் வந்து அம்மா! நம்ம தெருவிலிருந்து செண்பகம், விசாலம், காமு, நீலா முதலியவர்கள் இன்று சாயங்காலம் மகாராஜாவின் சிங்கார வனத்துக்குப் புஷ்பக் காட்சியைப் பார்க்கப் போகிறார்களாம். அவர்கள் போனால், நானும் அவர்களுடன் போய்வரட்டுமாவென்று கேட்டாள். அவள் கேட்டது எனக்கு ஆச்சரியமாகவிருந்தது. ஒருநாளும் வெளியே போகிறேனென்று சொல்லாதவள், இன்றைக்குப் போகிறேனென்று சொல்லுகிறாளே; போய் வரட்டுமென்று கருதி, அவளைப் பார்த்து அம்மா! ஜாக்கிரதையாகப் போய்ப் பார்த்துவிட்டு இருட்டுவதற்கு முன் வந்துவிடென்று குதிரைக்கோச்சில் அனுப்பிவைத்தேன், தெருக்குட்டிகளோடுபோய்ப் பார்த்துவிட்டுக்

சூரியன் அஸ்தமித்தவுடன் வந்துவிட்டாள். வந்தவள் என்னிடம் வந்து, அம்மா! கேட்கவில்லையா சங்கதியை நாங்கள் எல்லோரும் போனோம். சிங்கார வனமுழுதுஞ் சுற்றிப்பார்த்து விட்டு, அவ்வனத்தின் மத்தியிலிருக்கிற தாமரைத் தடாகக் கரைக்கு வந்தோம். அந்தத் தடாகத்தின் மத்தியிலுள்ள மண்டபத்தில் யௌவன புருஷர்கள் பலர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். அப்புருஷர்களின் மத்தியில், ஒரு வாலிபப் புருஷன் மன்மதன்போல வீற்றிருந்தார். அவர் இராஜாவீட்டுப் பிள்ளைபோல் அழகாகவும். கெம்பீரமாகவுங் காணப்பட்டார். அவர் என்னைக் கண்களிமை கொட்டாது கூர்மையாகப் பார்த்தார். அவர் பார்வை எனக்குப் பயத்தையுண்டாக்கிற்று. நான் குட்டிகளையெல்லாம் அழைத்துக்கொண்டு வேகமாக வந்து வண்டியிலேறிக்கொண்டு வந்துவிட்டேனென்று சொன்னாள். இதைக்கேட்ட வெனக்கு, ஒரு தாசிவீட்டுப்பெண் இவ்வளவு பயங்கொள்ளியாக விருக்கிறாளே யென்று ஆச்சரியமுண்டாயிற்று. இந்தவிதமான பயங்கொள்ளிப்பெண் தாசித்தொழில் எப்படிச் செய்வாள். ஆதலாற் கலியாணஞ் செய்து கொடுத்துவிட வேண்டுமென்று இன்றைக்கு உறுதிசெய்துகொண்டேன். இவ்வாறு உறுதிசெய்த காலத்தில், சுவாமிகள் தெரிசனமுங்கிடைத்தது. கடவுளே என்மீது கிருபைகூர்ந்து இந்தத் திருவேடத்துடன் வந்திருக்கிறதாக அடியாள் கருதுகின்றேன். என்னுடைய அற்பக் குடிசையில், சுவாமிகளின் பாததூளி பட்டதே எனக்குப் பாக்கியம் வந்ததாக நான் கருதுகின்றேன். சுவாமிகள் திருவாக்கால், என் புத்திரி சிறந்துவாழவேண்

டியதற்குரிய மார்க்கத்தைக் கூறுவதுடன், நாங்கள் குறை வின்றி வாழும்வண்ணம் ஆசீர்வாதமுஞ் செய்தருளவேண்டு மென்று இரு கைகளையும் நெற்றியிற் குவித்து அஞ்சலி செய்தாள்.

பங்கசம் சொல்லிய வினைத்தையுங் கவனமாகக் கேட்டு வந்த சாமியார் அவளைப்பார்த்து, தாயே! உன் பெண்ணைக் கூப்பிடு பார்ப்போமென்றார். சாமியார் சொல்லி வாய்மூடு முன் பங்கசம், மணி! இங்கே வாவென்று தன் மகளைக் கூப்பிட்டாள். சுந்தரசூளாமணி தன்றாயழைத்த வுடன் வாயிற்படிக்கு வந்து சாமியாருக்கு நமஸ்காரஞ் செய்து தலை குனிந்து நின்றாள். வந்து நின்ற சுந்தர சூளாமணியின் வனப்பைச் சாமியார் பார்த்தார். அவர் மனதில் காதல் தோன்றிற்று. தோன்றினவுடன், இப் பெண் நமது நண்பன் காதலித்த பெண்ணல்லவா வென்று கருதினார். தோன்றிய காதன் மறைந்தது. தலை குனிந்து நின்ற சுந்தரசூளாமணியைச் சாமியார் பார்த்து, குழந்தாய்! உன்னுடைய இடது உள்ளங்கையைக் காட்டென்றார். உடனே அவள் தனது இடது உள்ளங்கையைச் சாமியா ரிடங் காட்டினாள். சாமியார் தன்னிடங் காட்டப்பட்ட அக் கையைப் பார்த்துப் பங்கசத்தை நோக்கி, தாயே! இந்தக் கையில், பத்மரேகை, சௌபாக்கிய ரேகை, ஆயுள் ரேகை இவைகள் மிகவும் விசேஷ முள்ளனவாக அமைந் திருக்கின்றன. இந்த ரேகைகளின் பலன், இந்தப்பெண் சாதாரண மனிதர்களுக்குப் பாரியாக மாட்டாள். கல்வி ஞானத்தாலும், கேள்வி ஞானத்தாலுஞ் சிறந்த அழகு வாய்ந்த ஓர் அரசகுமாரனைக் காந்தர்வ மணஞ் செய்து

கொண்டு, உயர்ந்த செல்வத்தோடும், சுகத்தோடும் வாழ்வள். ஆனால் இவளுடைய இருபத்தொன்றாவது வயதில் இவளுக்கோர் கண்டமிருக்கிறது. சுக்கிரவார விரதமிருந்து ஸ்ரீ முருகப் பெருமானை வழிபட்டு வந்தால், அப்பெருமானுடைய அநுக்கிரஹத்தால், அக்கண்டமாறி எழுபத்துமூன்று வயது வரையுஞ் சுகமாக வாழ்ந்து வருவாள். இவளுடைய முப்பத்தேழாவது வயதில், நீ மரணமடைவாய். உனக்குத்தரகிரிகைகளை யெல்லாஞ் சிறப்பாகச் செய்வாள். பெண் சந்ததி இவளுக்கில்லை. இரண்டு ஆண்சந்ததிகளுண்டு. அப்புத்திரர்கள் இவளுடைய செல்வத்தை வைத்துக்கொண்டு பெரிய தனவந்தர்களாக வாழ்வார்கள். ஆனால் இன்னவொன்றுஞ் சொல்லவேண்டியதிருக்கிறது. அதாவது, இவளை மணந்து வாழுங் கணவன், இவளுடன் நெடுகவிருந்து வாழமாட்டான். சில வருஷங்களுக்குப் பிறகு இவளைவிட அழகியவொரு பெண்ணை மணந்து பிரிந்துவிடுவான். அதன்பின்னர் இவளை வெறுத்து விடுவான். இருக்கட்டுந் தாயே! ஒரு புஷ்பஞ் சொல்லு? "மல்லிகை புஷ்பம்." பேஷ்! பேஷ்!! நாளையே இவளுக்கு நாயகன் கிடைத்துவிடுகிறான் என்று கூறினார்.

சாமியார் வார்த்தைகளைக் கேட்டுவந்த பங்கசவல்லிக்கும், சுந்தர சூளாமணிக்கும் அதிக சந்தோஷ முண்டானாலும், விரும்பின நாயகன் வேறுமணஞ் செய்துகொண்டு விரைந்து பிரிந்து விடுவானென்றதிற் சிறிது கவலையுமவர்கள் மனதிலில்லாமலில்லை.

சாமியார் சுந்தர சூளாமணியைப் பார்த்து, இந்தா அம்மா! இதைவாங்கித் தரித்துக் கொள்ளென்றுசொல்லித்

தோளிற் றொங்கவிட்டிருந்த பையிற் கையைவிட்டுச் சிறிது விபூதியை யெடுத்துத் தீர்க்க சுமங்கலிபவந்து என்று சொல்லிக்கொடுத்தார். சுந்தர சூளாமணி, சாமியார் அளித்தவிபூதியை இருகைகளையும்நீட்டி வாங்கிநெற்றியிற் றரித்துக் கொண்டு நின்றாள். தன்பால் விபூதி வாங்கித் தரித்துநின்ற அவளை, மீண்டுஞ் சாமியார் பார்த்து, குழந்தாய்! நீ விழித்துக்கொண்டிருக்கவேண்டாம் போய்ப் படுத்துக் கொள்ளென்று சொன்னார். இவ்வார்த்தையைக் கேட்ட சுந்தர சூளாமணி, சரே லென்று வீட்டினுள் சென்று விட்டாள். பின்னர் சாமியார் பங்கசத்தை நோக்கி, தாயே! நான் கூறிய பாடலிற் கண்டபடி தற்காலத்திற் சாமியார்களிற் பலரும், மடத்ததிபதிகளிற் சிலரும் சாப்பாட்டுச் சாமியாராகவும், சிற்றின்பச் சாமியாராகவு மாகிவிட்டார்கள் சாமியார்களுக்குப் பெரும்பாலும் இக்காலத்தில் மதிப்புக்கிடையாது.

"பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்." என்று கூறிய

தெய்வப் புலமைத் திருவள்ளுவர் திருவாக்கின்படி ஒருவர் புகழப்படுவதும், இகழப்படுவதும் அவர் செயலைப்பொறுத்ததாகும். அடியேனைக்கூடச் சிலர் கபடசந்நியாசி யென்று நினைக்கிறார்கள். யார், எவ்விதம் நினைத்தாலும் அதுபற்றி யெனக்குக் கவலையில்லை. அடியேன் எதைக்குறித்து இந்த வேடத்தைத் தாங்கினேனோ? அதை முடிப்பதிற் பின்னடையமாட்டேன். நாளையத்தினம் இந்நகரைவிட்டுப் பிரயாணமாகிச் சிதம்பரத்துக்குச் செல்லக்கருதியுள்ளேன். இப்போது நாழிகை இருபத்திரண்டுக்கு மேலாகிறது.

இனி அடியேனுக்கு நித்திரை வராது. நான் போய்வருகி றேன். இன்றிரவு உன்னுடைய அன்புநிறைந்த உதவி யைப் பெற்றுப் பசியைத் தணித்துக்கொண்டேன். உன் னுடைய அன்புததும்பிய வார்த்தைகளைக்கேட்டுச் செவி களும், மனமுங் களிப்படைந்தன. தாயே! நீ எக்காலத்தும் யாதொரு குறைவுமின்றி வாழவேண்டு மென்று கூறி யெழுந்தார்.

சாமியார் இருக்கைவிட்டெழவே, பங்கசமும் எழுந்து சாமியார் பாதங்களில் விழுந்துவணங்கி அடியாளுடைய கவலைதீரும்படி சாமிகள் திருவுள்ளம்பற்றவேண்டுமென்று கூறிக் கொண்டெழுந்தாள். எழுந்த அவளது நெற்றியில் சாமியார் தனது கரத்தால் விபூதியை யெடுத்துப் பூசிப் பயப்படாதே நான் கூறியபடியே சகலமுமுடியுமெனச் சாற்றி, வீட்டைவிட்டு வெளியில்வந்தார். பங்கசமும் கைகளை மார்பிற்குவித்தவண்ணம் சாமியார் பின்னே வந்தாள். தன்பின் வரும் பங்கசத்தைச் சாமியார் கண் ணுற்று, தாயே! நில்லு நில்லென்று கருணையுடன் கூறினர். அதுகேட்ட பங்கசம், சாமிகளை யினி எப்பொழுது தரிசிக் கலா மென்றாள்? சாமியார் சிரித்துக்கொண்டு தாயே! அடி யேனைத் தியாகேசன் கூட்டிவைத்தவன்று பார்க்கலாம். நில்லென்று கூறிச் சாமியார் வெகுவேகமாக நடந்து தன் வீடுவந்து சேர்ந்து மெத்தைமீதேறி அறையைத்திறந்து வேடங்கொண்ட சங்கடத்தை யெல்லாங் கழற்றி அங் கொருபுறத்தில் வைத்துவிட்டுக் கட்டிலின்மேற் படுத்து நித்திரைசெய்தார்.

சாமியார் பிரிந்து சென்றபின்னர், பங்கசம் வீட்டி னுள் சென்று கதவையடைத்துத் தாள்போட்டு விட்டு,

அங்குத் தன்வருகையை யெதிர்நோக்கியிருந்த சுந்தர சூளாமணியுடன் கட்டிலில் உட்கார்ந்து, எனதருமைக் கண்மணி! நமதெண்ணம் ஸ்ரீ தியாகேசனுடைய திருவருளாற் பூர்த்தியாயிற்று. வந்தவர் சாமியாரல்ல, சாமியார் வேடந் தரித்தவோர் சாமர்த்தியசாலி. இவரை அரசகுமாரன் அனுப்பியிருக்கிறார். நாளை நீ, அரசகுமாரன் மனைவியாகி அவருடன் சேர்ந்து வாழலாம். மனச் சந்தோஷமாகப் படுத்து நித்திரைசெய் யென்றாள். தன்னுள்ளத்திற் குறித்தவதனில் எட்டுணையும் வித்தியாசமில்லாமற் றன்று யுஞ் சொல்லக்கேட்ட மதியூகியான சுந்தரசூளாமணி மலர்ந்த முகத்துடன் படுத்து நித்திரை செய்தாள். பங்கசமும் நித்திரை செய்தாள்.

## அரச குமரனிடம் சுகுமாரன் வருகை.

இராஜமார்த்தாண்டன் சூரியனுதித்த பின்னர் ஸ்நானம், சந்தியாவந்தனம், காலையுணவு முதலியவற்றை முறைப்படி செய்யாது, செய்யவேண்டுமென்னுங் கடமையைக் கழிப்பதற்காகச் செய்துமுடித்து, ஆசனத்தமர்ந்து சுகுமாரன் வருகையை ஒவ்வொரு நிமிஷமும் எதிர் பார்த்த வண்ணமாகவே இருந்தான். பகல் கடிகை பத்தாயிற்று. அதுசமயம், சுகுமாரன் கெம்பீரமான முகத் தோற்றத்துடன் வந்தான். இராஜமார்த்தாண்டன் அவனைப்பார்த்து, நண்ப! வருக. வருக. காரியங் காயோ? கனியோ? வென்றான். அஃதுணர்ந்த சுகுமாரன் அரசகுமாரனைப்பார்த்து, எனதாருயிர்த் தோழ! கவலையை யொழிக. நான் முயற்சித்துங் காரியங்கனியாகாதிருக்குமா? தாங்கள், காதலித்த காரிகையுடன் இன்றே இன்பத்தை யனுபவிக்கலாமென்றான். சுகுமாரன் சொல்லிய வார்த்

தையைக் கேட்ட அரசகுமாரன், அடங்காத ஆனந்தத்துடனெழுந்து தன் முன்னின்ற சுகுமாரனைக் கட்டித் தழுவி, நீயல்லோ நண்பன். நீயல்லோ நண்பனென்று அன்புததும்பக்கூறித் தன்முன்னர் சுகுமாரனுக்காக இடப்பட்டுள்ள ஆசனத்தில் அவனை இருக்கச்செய்து, தானுந் தனதாசனத் தமர்ந்தான்.

ஆசனத்தமர்ந்த சுகுமாரன் அரசகுமரனை நோக்கி, மாண்புமிக்க மன்னவன்புதல்வ! தங்கள் பெருநலங்கருதி ஈண்டு தங்கள்பாற் சிலவற்றைக் கூற விரும்புகின்றேன். கூறும் என் மொழிகளைப் பொன்மொழிகளாகவேற்றுப் போற்றிக் கொள்வீர்களென்று கருதுகின்றேனென்முன். அதுகேட்ட அரசகுமரன் சுகுமாரனை நோக்கி, நண்ப! தங்கள் வார்த்தையை என்றைக்காவது நான் அலச்சியஞ் செய்ததுண்டா? தங்களைவிட உற்றநண்பர் வேறியாருளர்? சொல்லவேண்டிய விஷயங்களனைத்தையுஞ் சொல்லுக வென்முன்.

அங்கண்மா ஞாலங்காக்கும் அரசிளவேறே! மாநில மன்னர்களிற் றங்கள் சூரியன் வழித்தோன்றல். சூரியன் உலகிற்செறிந்த புறவிருளை மாற்றிப் பலபொருள்களையும் மக்கள் கண்டுகளிக்கச் செய்வித்தல் போல, தங்கள் முன்னோர்கள் ஒவ்வொருவருந் தமதாட்சிக்குட்பட்ட மாந்தர்பால் வறுமையிருளும், அஞ்ஞானவிருளும் அடையாவண்ணம் அரசுபுரிந்து வந்தார்கள். தங்கள் தந்தையும் அவ்வாறே அரசுபுரிந்து வருகிறார்கள். தாங்களும் அவ்வாறே அரசுபுரிவீர்கள். தாங்கள் கல்விகேள்விகளினற் சிறப்புற்றிருக்கின்றீர்கள். உலகில் மக்கட்பிறப்பைப்பெற

ஞோர் அடையவேண்டிய பொருள் நான்கு. அவை, அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாம். இந்நான்கனுள், முன்னின்ற மூன்றும் இவ்வுலகத்தில் அடையக்கூடியன; ஈற்றிலுள்ள வெஞ்சிய வொன்றும் மறுமைக்கண் அடையக்கூடியது. முன்னுள்ள மூன்றனுள் முதற்கண்ணுள்ளது அறம். அறம் என்றதற்கு ஒழுக்கமென்பது பொருள். மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் ஒழுக்கத்தைத் தன்னுயிரைவிட மேலாகக் கருதிப் பாதுகாத்தல் வேண்டும். ஒழுக்கம், தன்னை யுடையானுக்குச் சகல நன்மைகளையும் பயக்கும். இதனை,

"ஒழுக்கம் விழுப்பந் தரலா லொழுக்க
முயிரினு மோம்பப் படும்." என்னுந்

திருவள்ளுவர் திருவாக்காலுணர்க. அறத்திற்கு அடுத்தாற்போலுள்ளது பொருள். பொருள், இவ்வுலகத்துப் பிறந்தார்க்கு அவசியமானதொன்று. பொருளில்லார்க்கு இவ்வுலகத்தில் யாதொன்றுமே இல்லையென்று சொல்லலாம். பொருளில்லார்க்கு, எண்ணிய காரியமொன்றை எண்ணியாங்கே முடித்தலரிது. பொருளில்லார்க்குச்சுகமில்லை. செல்வாக்குமில்லை. மதிப்புமில்லை.

"கல்லானே யாமாகிற் கைப்பொருளொன் றுண்டாயி
னெல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ—ரில்லானை
யில்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா தவன்வாயிற் சொல்." என்றார் ஆன்றோரும்.

ஆகலான், உலகத்துப்பிறந்தமாந்தர் அனைவரும், பொருளைப் பிரதானமாகக் கருதி யீட்டல்வேண்டும். பொருளை யீட்டுங்கால், அப்பொருளை அறவழியாலீட்டல்வேண்டும். அற

வழியாற் பொருளை யீட்டுவார்க்கே புண்ணியமும் புகழு முண்டு, பொருளுக்கு அடுத்தாற்போலுள்ளது இன்பம். இன்பம் பலவகைப் பட்டதாயினும், மாதரிடத்து அனுப விக்கும் இன்பமே பிரதானமாகவுள்ளது. பிரதானமாக வுள்ள மாதரின்பத்தை அனுபவிக்குங்கால், அதனையும் அறவழியாலேயே யனுபவித்தல் வேண்டும். அதாவது தன்னுடைய மனைவியுடன் கூடியனுபவித்தல் வேண்டும். தன்னுடைய மனைவியுடன் கூடி யனுபவியாது, பிற பெண்களுடன் கூடியனுபவிக்கும் இன்பம்; இன்பமாகாது. ஒருசாரார் அதனை இன்பமென்று கூறுவரேனும், அவ் வின்பம் மறவழி யின்பமேயன்றி, அறவழியின்பமன்று. மறவழி யின்பத்தை யனுபவிப்போர்க்கு, இம்மையில் நிந் தையும், பாவமும், மறுமையில் நரகமும் வந்தடையும். ஆகலான், இன்பத்தை அறவழியொன்றனுலேயே அனுப வித்தல் வேண்டும். அறவழியாற் பொருளை யீட்டி, அற வழியால் இன்பத்தை யனுபவிப்பவர் மறுமையில் மோட் சத்தை யடைவர்.

எனதாருயிரன்ன வன்ப! தாங்கள் காதலித்த பெண் கணிகையர் குலத்துப் பிறந்தவள். ஆனால் மிகுந்த வனப் புடையவள். அவள்பெயர் "சுந்தர சூளாமணி" அவள் தாயும் இலட்சணவதிதான். அஃதன்றி உயர்ந்த குணமும் வாய்ந்தவள். நான் நேற்றிரவு அவள் வீட்டிற்குச் சந்நியாசி வேடம்பூண்டு சென்று, சந்நியாசியாகவே நடித்தேன். அவளாற் கொடுக்கப்பட்ட பாலையும், பழத்தையு முண் டேன். சுந்தர சூளாமணியின் ருயுடன் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தேன். தங்களுக்குச் சுந்தர சூளாமணியிடத் துள்ள காதலைவிட, சுந்தர சூளாமணிக்குத் தங்கண்மீது

பதின்மடங்கு காதலிருக்கிற தென்பதை யுணர்ந்தேன். சுந்தர சூளாமணியும், அவள் தாயும் ஒவ்வொரு நிமிஷமும் தங்கள் வருகையை எதிர்பார்த்தவண்ணமாக விருந்துவரு கிறார்கள். ஆதலாற் றாங்கள் இனி மன்மதபாணத்தால் வருந்த வேண்டுவதில்லை. ஆயினும், தாங்கள் ஒரு கணி கைப்பெண்ணை விரும்பி அவளுடன் சேர்ந்திருப்பது உசித மல்லவென்றும், அதனுன், மறுவற்ற சூரியன் மரபுக்கோர் மறுவேற்படுமென்றுங் கருதுகின்றேன்.

> "கணிகையர் போகந்துய்ப்போர் கைப்பொரு ளிழப்பர் தீய
> பிணிபல மேனி சேரப் பெருந்துய ருழப்பர் நாளுந்
> தணிவிலாக் கவலை பூண்டு தளர்குவர் தவமும் பொன்றி
> யணிகிளர் முகமும் வாடி யலைவரா தரவி லாதே"

என்ற ஆன்றோர் வாக்கின்படி கணிகையரை விரும்புவோர், கைப்பொருளோடு சுகத்தையுமிழந்து, பிணியான் முக வாட்டமுற்று வருந்தி யாதரவின்றியலைவர். இது சத்தியம் சத்தியம். முக்காலும் சத்தியம். இதுவுமன்றி, தன்னை வந்தடுத்த, ஆடவரிடம் கணிகையர் அன்பைச் செலுத்தி யின்பமளிப்பது மில்லை. இது,

> "ஆடவர் முத்த மீவா ரவர்களு முத்த மீவா
> ராடவ ராசை யீவா ரவர்களு மாசை யீவா
> ராடவர் தனங்க ளீவா ரவர்களுந் தனங்க ளீவா
> ராடவர் மெய்யன் புள்ளா ரவர்களோ மெய்யன் புள்ளார்"

என்னுஞ் செய்யுளால் நன்குணர்தற் பாலதாம். கணிகையர் வஞ்சகச் செயலை விரிக்கிற் பெருகும். பொதுவாக நோக்கு மிடத்து அவர்கள் நல்லவர்களல்ல. தாசிகள், அஷ்டமத்துச் சனியன் போலிருந்து தன்னையடுத்த ஆடவர்களை யழித்து விடுவார்கள். அவர்களுக்கு இரக்கமென்பதே கிடையாது.

ஆதலாற் றுங்கள் தீர்க்காலோசனை செய்து முடிவைக் கூறுங்கள். நான், தங்கள் ஆலோசனையின் முடிவுக்கு முரண்படாது நடக்கச் சித்தமாக விருக்கின்றேனென்று சொல்லி முடித்தான்.

சுகுமாரன் சொன்ன வனைத்தையுங் கவனித்துக் கேட்ட மதிமிக்க மன்னன் குமரன், சுகுமாரனைப் பார்த்து, எனதாருயிர்த் தோழ! நீ கூறிய தனைத்தும் உண்மையே. ஆயினும், நானொன்று சொல்வேன் கேட்பாயாக.

இதுபொழுது என்மனம் காதலித்த கன்னி, கணிகையின் புத்திரி யென்றும், வனப்பு வாய்ந்தவளென்றுஞ் சொன்னாய். இதுவுமன்றி, மக்களாய்ப் பிறந்தோர் ஒவ்வொருவரும் இவ்வுலகில் அறம், பொருள், இன்பம், மூன்றையும் அடையவேண்டுமென்றும், அறமென்பது ஒழுக்கமென்றும், ஒழுக்கத்தை உயிரைவிட மேலாக ஓம்பவேண்டுமென்றும், அறவழியாற் பொருளையீட்டல்வேண்டுமென்றும், அறவழியால் இன்பத்தை யனுபவிக்கவேண்டுமென்றுஞ் சொன்னாய். அதுவுஞ் சரியே. ஆனால் ஆழ்ந்து யோசித்துப் பார்க்கில், நீ கூறிவந்ததெல்லாம்மாந்தர்க்குரிய பொது நீதிகளேயாகும். இப்பொது நீதிகளுள் அரசர்க்குரிய சிறப்பு நீதிகளும், குடிகளுக்குரிய சிறப்பு நீதிகளும் பல அடங்கியிருக்கின்றன. அரசர்க்குரிய சிறப்பு நீதிகளைக் குடிகளும், குடிகளுக்குரிய சிறப்புநீதிகளை அரசர்களும் கையாளக்கூடாது. அரசன் வேட்டைக்குச்சென்று துஷ்டமிருகங்களைக் கொல்லலாம். குடிகள் துஷ்டமிருக முதலிய எந்தவுயிரையுங் கொல்லக்கூடாது. அரசன் பகையரசர்மீது

படையெடுத்துச் சென்று போர்புரிந்து பகையரசரைக் கொன்று அவர் பொருள்களையும், நாட்டையுங் கவர்ந்து தன்னதாக்கிக் கொள்ளலாம் குடிகள் தன்னுடைய எதிரிகளுடன் போர்புரிந்து அவர்களைக்கொன்று அவர்கள் பொருளை அபகரித்துக் கொள்ளக்கூடாது. அரசன் அழகுடைய பெண்ணைக் கண்டால் அப்பெண்ணைக் கவர்ந்து வந்து மணந்து அனுபவிக்கலாம். குடிகள் அழகுடைய பெண்ணைக்கண்டால் அப்பெண்ணைக்கவர்ந்துவந்து மணந்து அனுபவிக்கக்கூடாது. அரசர்களுக்கு இதுபோன்ற சிறப்பு நீதிகள் இன்னும் பல விருக்கின்றன. அவற்றை யெல்லாஞ் சொல்லுவதென்றாற் காலதாமதமாகும்.

இஃதன்றிச், சூரியகுலத்தை மறுவற்ற குலமென்றாய். அதனை மறுப்பார் யார்? ஆனால், சூரிய குலத்தரசரிற் காதலித்த பெண்ணை மணந்தனுபவிக்காதாரில்லை. குலத்தலைவனான சூரியன், குந்திதேவியைக் காதலித்துக் கூடினான். இதுவுமன்றித் தன்றேர்ப்பாகனான அருணன் பெண்ணுரு வெடுக்கக்கண்டு; அப்பெண்ணைக்காதலித்துப் புணர்ந்தான். எங்கள் குலத்திற்றோன்றிய சிறந்த கீர்த்திவாய்ந்த இரகுமன்னன் சாதிக்கொரு பெண்ணாகத் தேர்ந்தெடுத்து அநேகம் பெண்களை மணந்து அனுபவித்தான். தசரதர் அறுபதினாயிரம் பெண்களை மணந்தார். அழகுடையபெண்களுக்கும், அரசர்களுக்கும், சுத்தவீரர்களுக்கும், வித்வான்களுக்கும், வள்ளல்களுக்கும். ஞானிகளுக்கும், குலமென்பதும், சாதியென்பதுங் கிடையாது. இதனை,

"கற்றவர்க்கு நலனிறைந்த கன்னியர்க்கும் வண்மைகை
யுற்றவர்க்கும் வீரரென் றுயர்ந்தவர்க்கும் வாழ்வுடைக்
கொற்றவர்க்கு முண்மையான கோதில்ஞான சரிதரா
நற்றவர்க்கு மொன்றுசாதி நன்மைதீமை யில்லையால்."

என்னுஞ் செய்யுளா

லறிக. ஆதிசைவ குலத்திற் பிறந்து அரசர்குலத்தில் வளர்ந்தருளிய சுந்தரர், இவ்வூர்க் கணிகையர்குலப் பெண்ணாகிய "பரவை நாச்சியாரை" மணஞ்செய்து கொள்ளவில்லையா? அடியார்களாகிய அந்தணர்களும், அரசராகிய சேரமான் பெருமாளும் சுந்தரர் இல்லத்திற் பரவை நாச்சியாராற் சமைக்கப்பட்ட உணவை யருந்த வில்லையா? ஆதலால், நான் காதலித்தபெண் கணிகைகுலப் பெண்ணல்ல. அவள் உயர்ந்த குலப்பெண்ணேயாவள். யான் மணந்து கொள்வது முறையேயாகும், ஆனால் என் றந்தையார் இதற்குச் சம்மதிக்கமாட்டார்கள். தந்தை, தாயார் சம்மதமின்றிப் புருஷனும் பெண்ணும் மனமொத்துக்கூடுங் கூட்டம், காந்தர்வமணமென்று சொல்லப்படும். நான் காதலித்த அப்பெண்ணை இன்று காந்தர்வமணஞ் செய்துகொள்ளக் கருதுகின்றேன். காந்தர்வமணத்துக்கு நாள், கோள் யாதொன்றும் பார்க்க வேண்டுமென்ற விதியில்லை. ஆதலால் என்னுருயிர் நண்ப! நான் விரும்பிய காந்தர்வ மணத்தை, நீ யாதொரு தடையுஞ் சொல்லாது பிறரறியாவண்ணம் இன்றே முடித்துவைத்தல் வேண்டும். நீ புரியும் இந்நன்றியை நானென்றுமறவேனென்று கூறினான்.

இராஜமார்த்தாண்டன் கூறிய வனைத்தையும் அமைதியுடன் கேட்டுக்கொண்டிருந்த சுகுமாரன், மீண்டும் மன்

ணன் குமரனை நோக்கி, கல்வியாற் சிறந்த காவலன் குமர! இன்னுஞ் சில விஷயங்களைத் தங்களுக்கு அறிவிக்கக் கருதுகின்றேன். அவற்றை, என்மீது கோபங்கொள்ளாது கேட்டல் வேண்டும். தாங்களோ உயர்ந்த க்ஷத்திரியகுலத் துத்தோன்றல். தாங்கள்காதலித்த பெண்தங்களிற்றாழ்ந்த தாசி குலத்தினள். தங்கள் நிலைமையையும், தாங்கள் காத லித்த தாசிப்பெண்ணின் நிலைமையையும் சீர்தூக்கிப் பார்க்கின், மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசமிருக்கின் றது. இவ்வாறிருப்பதால், தங்களுக்கும், தாசிபுத்திரிக்கும் சம்பந்தம் எவ்வாறு சமமுடையதாகும். இதுவுமன்றித், தாங்கள் எங்கள் அரசனுக்கு ஒரே புத்திரர். இன்னுஞ் சிறிது காலத்தில் இராஜ்ஜிய பாரத்தை வகித்து நடத்தும் பொறுப்பு வாய்ந்தவர்கள். பல தேசத்து அரசர்கள், தம்முடைய மகாலெட்சுமியை யொத்த வனப்பு வாய்ந்த பெண்களைத் தங்களுக்குக் கொடுக்கவேண்டு மென்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். தங்கள் தந்தையார் தங் களுக்குப் பேரழகுவாய்ந்த பெண்ணைத் தேர்ந்தெடுத்துத் திருமணஞ் செய்வித்தல் வேண்டுமெனக் கருதித், தங்கள் திருவுருவப் படத்தைப், பெண்ணை மணஞ்செய்து கொடுக்க வைத்துக்கொண்டிருக்கும் அரசர்பால் அனுப்பும்பொருட் டுத் தங்கள் திருவுருவை வரைந்து வரும்படி ஓவியப்புலவ னுக்குக் கட்டளையிட்டிருக்கின்றார்கள். அவனுஞ் சில தினங்களிற் றங்கள் திருவுருவப் படத்தைக் கொண்டு வந்து கொடுப்பான். படம் வந்தவுடன், தங்கள் தந்தை அதனைப் பெண்ணுள்ள அரசர் பார்வைக்கு அனுப்பி வைப்பார்கள். தங்கள் படத்தைப்பார்த்த அரசர்களில், தங்களழகுக் கொத்த அழகினையுடைய பெண்ணைப்பெற்ற

அரசர்கள், தமது பெண்ணின் படத்தைத் தங்கள் தந்தை யின் பார்வைக்கு அனுப்பி வைப்பார்கள். பெண்ணின் படம் வந்துசேர்ந்தவுடன் தங்கட்கு விரைந்து திருமணம் நடைபெறும். அக்கினி சாட்சியாக மணந்துள்ள அவ் வரசிளங்குமரியுடன் கூடி வாழ்வதே தங்களுக்கு உலகம் புகழும் உல்லாச வாழ்க்கையாகும். இவ்வாறு வாழ்வதை விட்டுத், தாங்கள் தாசி புத்திரியுடன் கூடி வாழ்வதை என் மனம் அங்கீகாரஞ் செய்யவில்லை. தாங்களோ சகல கலை யிலும் வல்லவர்கள். தாங்களறியாத தொன்றுமில்லை. நான் கூறியவற்றைச் செவ்வனேதேர்ந்து,எவ்வாறு கட்டளை யிடுகின்றீர்களோ? அவ்வாறு நடக்கக் காத்திருக்கின்றே னென்று கூறினான்.

தன்றோழன் சுகுமாரன் கூறிய விஷயத்தை யுணர்ந்த அரசகுமரன், உடனே சுகுமாரனை நோக்கி, நண்ப! நீ சொல்லுவதனைத்தும் உண்மையேயாயினும், யானொன்று கூறுவேன். அதனை நீ கவனித்துக் கேட்கவேண்டும். அதாவது, ஒரு புருஷன் தன் கண்களாற் பல பெண்களைப் பார்க்கின்றான். பார்த்த பெண்கள் மீதெல்லாம் அவன் காதலிப்பதில்லை. பார்த்த பெண்களில் ஒரு பெண்மீது அவனுக்குக் காதல் தோன்றுமேல்; அவ்வாறு காதல் தோன்றுவதற்குப் பிராரத்த கன்மமே முக்கிய காரண மாகும். பிராரத்த கன்மமில்லாவிடில், எவ்வளவு அழகை யுடைய பெண் தன் கண்பார்வைக்கு எதிர்ப்பட்டாலும்; அப்பெண்மீது, பார்த்த புருஷனுக்குக் காதல் தோன்றாது. எங்கள் குலத்துத் தோன்றி, உலகமுழுதையும் ஏக சக்கிர வர்த்தியாகவிருந்து அரசுபுரிந்த வள்ளலாகிய அரிச்சந்திரன்

என்னும் அரசர் பெருமான், தன் கண்களால் அளவில்லாத பெண்களைப் பார்த்தும்; பார்த்த பெண்களில் ஒருவர் மீதாவது அவருக்குக் காதல் தோன்றவில்லை. க்ஷேத்திர யாத்திரை செய்துகொண்டுவந்த முனிவர் பலர் அரிச்சந்திரனை வந்து கண்டு, மன்னர் மன்ன! கன்னோசி நாட்டையாளும் மதிதயன் என்னும் மன்னனுக்கு ஓர் புத்திரி பிறந்திருக்கின்றாள். அவள் அதிக வனப்புடையவள் "சந்திரமதி" என்று அவளுக்குப் பெயர். அவள், உனக்கு மனைவியாதற்குப் பொருத்தமுடையவள். இதனை உன்னிடம் அறிவித்தற் பொருட்டே இங்கு வந்தோம் என்று புகன்றார்கள். அழகிற் சிறந்த அனந்தம் பெண்களைக் கண்களாரக்கண்டும் காதல் தோன்றப்பெறாத அரிச்சந்திரன் உள்ளத்தில், முனிவரான் மொழியப்பெற்ற பெண்ணின் பெயரைக் காதாற் கேட்டதும் காதல் தோன்றிற்று. தோன்றிய வக்காதன் மேலுமேலும் முறுகிவளர்ந்தது. காதன் முறுகி வளரவே, அவனுள்ளத்தை இருப்பிடமாகக் கொண்டு நின்ற அறிவு, ஆற்றல், நிறை. பொறையாதிய வனைத்தும் அகன்றன. அரசன், ஒருதலைக் காமத்தால் வருந்திப் புலம்பினன். ஒரு புருஷன் கண்களாற் கண்ட பெண்மீது காதலியாது, காதுகளாற்கேட்ட பெண் மீது காதலித்தானென்பது பொருத்தமுடையதல்லவெனச் சிலர் மறுத்தல் கூடுமென்றுணர்ந்த புராணிகர், அரிச்சந்திரனுக்குச் சந்திரமதியினிடத்துக் காதல் தோன்றியதற் குரிய காரணத்தையும், அவனுள்ளத் தெழுந்த காதலின் பெருக்கத்தையும் அடியிற் காணப்படுஞ் செய்யுண் மூலம் அறிவிக்கின்றார். அச்செய்யுள் வருமாறு:—

"சந்திர கலையா னெக்குநீர் பொழிவ
சந்திர காந்தமே யல்லா
லந்தரச் சாதிச் சிலையிலுண் டாகா
வவளிவன் மனைவியென் றயனார்
முந்தவே விதித்த விதியினா லடங்கா
மோகமுந் தாபமு மாகிச்
சிந்தைநொந் தறிவு நிறைபொறை யனைத்துஞ்
சிந்தினா னறிவினாற் சிறந்தோன்."

திருவள்ளுவரும், "உறற்பால நீண்டா விடுதலரிது" என்று கூறுகின்றார். எந்த ஆணுக்கும், எந்தப்பெண்ணுக்கும் பிராரத்தகன்மத்தினாற் சரீரசம் பந்தமிருக்கின்றதோ? அந்த ஆணும், அந்தப் பெண்ணும் ஒருவரையொருவர் சந்தித்த காலத்தில், ஊழ்வினை சம்பந்தத்தால் ஆணுள்ளத்தில் அப் பெண்மீதும், பெண்ணுள்ளத்தில் அவ்வாண்மீதும் காதல் தோன்றும். இது சாஸ்திரசம்மதம். சாஸ்திரத்தைக்கற்றுங் கேட்டும் அறியாத பாமரமக்கள் இவ்வுண்மையை அறியார்கள். உண்மைஞானியான ஸ்ரீ சுந்தரமூர்த்திகளுள்ளத்தில், பரவை நாச்சியாரைக்கண்டதும் அப் பெண்மணிமீது காதல் தோன்றியதும், உயர்ந்த பதிவிரதா சிரோமணியாகிய பரவை நாச்சியாருள்ளத்தில், ஸ்ரீசுந்தரமூர்த்திகளைக் கண்டதும் அவர்மீது காதல் தோன்றியதும் பிராரத்தகன்மத்தாலென்பதை அறிஞர் பலருமறிவர். நீயும் நன்கறிவை. ஆகவே, பிரார்த்தகன்மமின்றி ஒரு ஆண்மகனுக்கு ஒரு பெண்மீதும், ஒரு பெண்ணுக்கு ஒரு ஆண்மகன்மீதும் காதல் தோன்றாதென்பது சரதம். நான் சுந்தரசூளாமணி மீது கொண்டுள்ள காதலைவிட, சுந்தரசூளாமணி என்மீது பதின்மடங்கு காதல் கொண்டிருப்பதாக நீயே என்னிடம்

கூறினாய். இவ்வாறு நான் சுந்தரசூளாமணிமீதும், சுந்தர சூளாமணி என்மீதும் காதல் கொண்டிருப்பதை ஆழ்ந்து யோசனைசெய்தால், நான் சுந்தரசூளாமணியின் நாயகனாக வும், சுந்தரசூளாமணி என் மனைவியாகவும் ஆதற்குரிய பிராரத்தகன்மம் உண்டென்பதைத் தெள்ளிதினுணரலாம். பிராரத்த கன்மத்தைப் பற்றிப் பேசப்புகின்; அது விரிந்து செல்லும். அதற்கு இது சமயமில்லை. என்னுருயிர் நண்ப! இனியும் நீ காலதாமதஞ் செய்யின், சுந்தரசூளாமணி கார ணமாக என்னுள்ளத்தெழுந்த காதல் என்னுவியை இச் சரீரத்தை விட்டுப் பிரித்துவிடும். இதிற் சிறிதுஞ் சந்தேகம் வேண்டாம். நான் விரைந்து சுந்தரசூளாமணியைக் கலந்து, அவள் பாலின்பத்தை யனுபவித்தற்குரிய மார்க்கத்தைச் செய்வாயாக. தாமதஞ் செய்யாதே யென்று மிகுந்த பரி வுடன் கூறினான்.

இனி, எந்தவிதத்தினாலும் அரசகுமரன் மனக்காதலை மாற்றற்கரிதெனத் தன்னுள்ளத்துணர்ந்த சுகுமாரன், அரச குமரனை நோக்கி, என்மனதிற்கினிய தோழராம் மன்னர் மன்ன! தங்கள் மனநோக்கம்போல் நடக்கச் சித்தமாயிருக் கின்றேன். தாங்கள் உள்ளக்கவலையை யொழித்து, இன்று பகற் பொழுதை ஆனந்தமாகப் போக்குங்கள். இரவில், மாரன் தங்களைச் சார்ந்து துன்புறுத்தாவண்ணம் அச்சுந்தர நங்கையுடன் கூடி உல்லாசமாகப் பொழுது போக்கலாம். காலதாமத மாகிறது, நான் சென்றுவருகின்றேன் உத் தரவு தந்தனுப்புங்க ளென்றான்.

இவ்வண்ணங் கூறிய சுகுமாரனை, இராஜமார்த்தாண் டன் உள்ளத்தெழுந்த பேருவகையுடன் நோக்கி, அறிவாற்

பெரிய அன்ப! நீ செய்யும் இந்நன்றியை, நானென்றும் மறவேன்! மறவேன்!! என ஒருமுறைக்கிருமுறையாகக் கூறியுபசரித்தனுப்பி வைத்தான். சுகுமாரனும், இரவு ஐந்து கடிகையளவில் வருவதாகக் கூறிச்சென்றான். சுகுமாரன் சென்ற பின்னர், மன்னன் மார்த்தாண்டன் கழி பேருவகை தங்கிய மனத்தனாய், ஆதித்தன் அலைகடலைச் சாருங்காலத்தை எதிர்நோக்கி யிருந்தான்.

சுகுமாரன், சோலையின்கண் பங்கசவல்லியைச் சந்தித்தல்.

அரசன் குமரனைப் பிரிந்த அமைச்சன் குமரன், தன்னில்லத்தை யடைந்தான். தனது குதிரை வண்டியை யோட்டும் பணியாளனை அழைத்துவரச் செய்தான். வந்து தன்னை வணங்கிய குதிரை வண்டியோட்டியைப் பார்த்து, சீக்கிரம் வண்டியைப் பூட்டிக்கொண்டுவாவென்று கட்டளையிட்டான். வண்டியோட்டி, வெகுவிரைவில் வண்டியைத் தயார்செய்து கொண்டுவந்து நிறுத்தினான். அதுகண்ட சுகுமாரன், தன்பால் உரிமையன்பு பூண்ட துங்கன் என்னும் ஏவலாளனுடன் அவ்வண்டியிலேறி ஊரின் வடபுறத்துள்ள வளமிக்க சோலையைச் சார்ந்தான். சோலையை யடைந்த சுகுமாரன், வண்டியை வீட்டிற்கு ஓட்டிச் செல்லும் படிக்கும், திரும்ப மாலை இருபத்தைந்து கடிகை யளவில் வண்டியைக் கொண்டுவரும்படிக்கும் வண்டியோட்டிக்கு உத்தரவிட்டான். மேற்படிஉத்தரவைப்பெற்றவண்டியோட்டியும், வண்டியைத் திருப்பி யோட்டிச்சென்றான். வண்டி சென்றபின்னர் சுகுமாரன் துங்கனைப்பார்த்து, துங்கா! நமது நகர் வடக்கு வீதியில் பங்கசவல்லி என்னும் பெயருடன் ஓர்தாசி யிருக்கிறாள். அவள் மிகுந்த ரூபவதி.

அவளை, நானழைத்துவரச் சொல்வதாகத் தெரிவித்து அதிசீக்கிரம் இங்கு அழைத்துக் கொண்டுவா. வரும்போது அவளுடன் வேறொருவரும் வரக்கூடாதென்று அறிவித்து, அவளைமட்டுந் தனித்தழைத்துக் கொண்டு வாவென்று கட்டளையிட்டான். தனதெசமானன் கட்டளையைப்பெற்ற துங்கன், ஓட்டமும் நடையுமாகச் சென்று பங்கசவல்லி வீட்டையடைந்து பங்கசவல்லியைக் கண்டான். அம்மா! ஒங்களைப் பெரியமந்திரிகுமரன் அழைத்துவரச்சொன்னார். அவர், ஊருக்கு வடக்கேஇருக்கிற பூஞ்சோலையில் தனியாக இருக்கிறார். ஒங்களையும் தனியாக வரச்சொன்னார். தாமச மில்லாமல் பொறப்படுங்கள் போவதற்கென்றான். துங்கன் சொல்லைக்கேட்ட பங்கசத்துக்கு மிகுந்த சந்தோஷம் உண் டாயிற்று. உள்ளேசென்றாள். தன் புத்திரியைக்கண்டாள். அம்மா! வெளியிற் கொஞ்சங் காரியமிருக்கிறது. நான் போய் வருகிறேன். நீ, கதவைத்தாளிட்டுக் கொண்டு உள் ளேதானேயிரு. நான் வரும்வரையில் யார்வந்து கூப்பிட் டாலுங் கதவைத் திறக்கவேண்டாம். சமையற் காரியைச் சீக்கிரம் சமையற் செய்யச்சொல்லு. நான் விரைந்து வந்து விடுகிறேன் என்று தன் பெண்ணிடங் கூறிவிட்டு, உயர்ந்த ஆடையாபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு விரைந்து வெளியிற் புறப்பட்டாள். வீட்டுவாசலில் வந்ததும், வாசி வலமாயிற்று. அதனைப்பார்த்த பங்கசத்துக்கு அதிகச் சந் தோஷ முண்டாயிற்று. உடனே யொரு வாடகைவண்டி யைத் திட்டஞ்செய்து, அதிற்றுங்கனுடன் ஏறினாள். வண்டியும் புறப்பட்டுச் சென்றது. வண்டி சோலையின் சமீபத்திற் சென்றதும், பங்கசம் வண்டியை நிறுத்தச் சொன்னாள். வண்டி யுடனே நின்றது. வண்டிக்காரனிடம்

வாடகையைக் கொடுத்து வண்டியைத் திருப்பி அனுப்பி விட்டுப், பங்கசம் தங்கனுடன் மந்திரி குமாரன் இருக்கு மிடத்தை அடைந்து, மந்திரி குமரன் முன் மும்முறை நமஸ்காரஞ்செய்து எழுந்து தலைவணக்கத்துடன் நின்றாள்.

சுகுமாரன் தன்முன்னர்த் தலைவணங்கி நின்ற பங்க சத்தைப் பார்த்து, பங்கசம்! உனக்கும், உன் மகளுக்கும் நல்லயோககாலம் பிறந்திருக்கின்றதென்றான். அம்மொழி யைக் கேட்ட பங்கசம் புன்முறுவல் பொலிந்த முகத்தின ளாய், தங்களையடுத்துள்ள அடியாளுக்குக் கஷ்டகாலம் ஏன் வரப்போகிறதென்று விநயமாகக் கூறினாள். அது கேட்ட சுகுமாரன், பங்கசம்! எங்கள் அரசகுமாரன், உன் புத்திரி சுந்தர சூளாமணியைக் கண்டு மோகித்துள்ளார். இன்றிரவு, அவர் உன்வீட்டிற்கு வருவார். அவர் வருகை, அரசர்க்குரிய ஆடம்பரங்களின்றி இரகசியமாகவே இருக் கும், நீ அவரை எந்த முறையில் உபசரிக்கவேண்டுமோ; அந்த முறையில் உபசரித்து விடியுமுன் அரண்மனைக்கு அனுப்பிவைத்தல் வேண்டும். நீ புத்திசாலி. உனக்கு நானதிகஞ் சொல்லவேண்டுவதில்லை. உன் வீட்டுக்கு இன்றிரவு வருபவர் உலகத்தையாளும் அரசனுடைய புத்திரர் என்பதையும், அவருக்குக் கோபமுண்டானால், அக்கோபங் குறித்த காரியத்தைச் செய்தே தீருமென் பதையும், நீயும், உன் புத்திரியும் உள்ளத்தில் உறுதியாக வெண்ணிக் கொள்ளவேண்டும். பனியதிகமுள்ள கூதிர் காலத்தில் குளிர் காய்பவன் அக்கினியின் சமீபத்திற் சென்றால், அவ்வக்கினி அவனைச் சுட்டுவிடும். அக்கினி சுடுமென்றஞ்சி விலகியிருந்தால், குளிர் துன் புறுத்தும். ஆதலால், அக்கினியை நெருங்காமலும்,

தூரத்தே விலகியிராமலும், மத்திய ஸ்தானத்திலிருந்து குளிர் காய்பவனைப் போல, அரசகுமாரனிடத்து நீயும், உன் புத்திரியும், அதிகம் நெருங்காமலும், அதிகம் விலகிச் செல்லாமலும் இருந்துவரல் வேண்டும். இதனைக் கவனத்தில் எப்போதும் வைத்துக்கொள். இன்று படுக்கையறை அலங்கார முதலியவற்றிற்கு இதனை வைத்துக் கொள்ளென்று நூறு வராகனைப் பங்கசம் கையிற்கொடுத்தான். பங்கசம், வேண்டாம் வேண்டாமென்று பல தடவைகள் கூறி, மந்திரிகுமரன் செய்த பிடிவாதத்தின் மேல், அந்த நூறு வராகனையும் பெற்றுக்கொண்டாள் சுகுமாரன், பங்கசத்தை அவள் வீட்டிற் கொண்டுபோய் விட்டுவரும்படி துங்கனுக்குக் கட்டளையிட்டான். பங்கசம், மீண்டும் மந்திரிகுமரனை நமஸ்கரித்து விடைபெற்றுத் துங்கன் பின் சென்றாள். இருவரும் நகரின் வீதியை அடைந்தார்கள். அதுபோது பங்கசம் துங்கனை நோக்கி, அப்பா! நீ நில். இனி எனக்குத் துணை வேண்டாம், நான் போய் வருகிறேன். இந்தாவிதனைப் பிடியென்று துங்கன் கையில் பாக்கு வெற்றிலையுடன் பத்துவராகன் பணத்தை வைத்துக்கொடுத்தாள். அதனைக் கையில் வாங்கிய துங்கன், தாம்பூலத்துடன் பணமிருக்கக்கண்டு, அம்மா! பணம் எனக்கு வேண்டாம். இந்தாங்கள் வாங்கிக்கொள்ளுங்களென்று கொடுக்க வந்தான். அதுகண்ட பங்கசம், அப்பா துங்கா! உனக்கு நான் கைக்கூலி கொடுக்கவில்லை. உனக்கு நான் கைக்கூலி கொடுப்பதற்கு, நீ எனக்கென்ன காரியத்தை முடித்துக் கொடுத்தாய். அதுவும் ஒன்றுமில்லையே. அப்படியிருக்கும்போது இது கைக்கூலியாகுமா? உனக்கு நான் இனாங்கொடுக்கின்றேன். இவ்வாறு கொடுப்

பது சகசம். பணம் யாருக்குச் சொந்தம். ஏழைகளுக்கு உதவிசெய்யவேண்டியது பணக்காரர்களின் கடமையாகும். உன் புண்ணியத்தில் எனக்கு யாதொரு குறையுமில்லை. என்னிடம் ஏராளமான ஐவேசியிருக்கிறது. நான் அதை என்னசெய்யப்போகிறேன். உத்தமமான உன் போன்றவர்களுக்குக் கொடுப்பது புண்ணியமல்லவா? உனக்கு இன்னும் என்னவேண்டுமென்றாலும், அதனைக்கேள் தருகிறேன். பேசாது இந்தப்பணத்தைவைத்துக்கொள். நான், உனக்குப் பணங்கொடுத்ததாக உன்எஜமானிடஞ் சொல்லமாட்டேன். நீ போய்வாவென்று, துங்கனுக்கு உத்தரவு கொடுத்து அனுப்பிவிட்டுச் சிறிதுதூரம் வந்து, அங்கு நின்ற வாடகை வண்டியிலேறிக்கொண்டு தன் வீடுவந்து சேர்ந்தாள்.

பங்கசத்தின் இனிய பசப்புமொழிகளைக் கண்டு மயங்கிப் பணத்தை அவள்பாற் பெற்றுக்கொண்ட துங்கன், விரைந்து மந்திரிகுமரன் பால் வந்து சேர்ந்தான். சுகுமாரன் தன்பால் வந்த துங்கனை நோக்கி, துங்கா! நமது அரசகுமரன், இந்தத் தாசியின் புத்திரியிடத்துக் காதல் கொண்டுள்ளார். அக்காதலை மாற்ற என்னுல் முடிந்த வரையும் சன்மார்க்க உபதேசஞ் செய்து பார்த்தேன். அது பிரயோஜனப்படவில்லை. அரசகுமாரன். இரு தினங்களாக அன்னமாதி யாகாரங்களை வெறுத்து அவள் ஞாபகமாகவே இருந்து வருகிறார். அவளைச் சேராவிட்டால், தன்னுயிர் போய்விடுமென்றுங் கூறுகிறார். அதன் மேற்றான் நானும் சரியென்று உடன்பட்டேன். இந்தக்காரியத்தை நீ வெளியில் விட்டுவிடாதே, நீ வெளியில் விட்டுவிடமாட்டாயென்றுதான் உன்னையழைத்துக்கொண்டு வந்தேன்.

ஆனால், இது எத்தனை நாளைக்கு வெளிவராமல் நிற்கும். நாளையே வெளிவந்துவிடும். ஆயினும் நமது மூலம் வெளி வரவேண்டாமென்று சொன்னான். தன் எஜமானன் சொல்லைக்கேட்ட துங்கன், தங்களுத்தரவுப்படி நடந்து கொள்ளுகிறேன் என்றான். இவ்வாறு இருவரும் பேசிக் கொண்டிருந்த சமயங் குதிரைக்கோச்சு வந்து சேர்ந்தது. சுகுமாரன், துங்கனோடும் அதனில் ஏறிக்கொண்டு தன தில்லத்தில் வந்து சேர்ந்தான்.

தாய் மகளுக்குப் புத்திகூறல்.

வெளியிற்போய் வீட்டிற்குத் திரும்பிவந்த தன் றாயைக்கண்ட சுந்தர சூளாமணி, அம்மா! இவ்வள நேரம் என்னகாரியமாக எங்குச்சென்று வந்தாயென்று வினவி னள்? அவ்வாறு வினவிய சுந்தர சூளாமணியைப் பங்கசம் நோக்கி, என் கண்ணே! எல்லாம் உன்னுடைய காரிய மாகத்தான் போய்வந்தேன். அரசகுமாரன் உன் வலையிற் சிக்கிக் கொண்டார். இன்றிரவு இங்கு வருவார். அரச குமாரன் உனக்கு நாயகனானால், நீயும் ஒரு அரசிதான். ஆராய்ந்து பார்த்தால், உன்னைப்போன்ற பெரும் பாக்கிய சாலிகள் தாசிப் பெண்களில் வேறியாருளர். நீ பெரும் பாக்கியசாலியாக விருந்தாலும், நான் உனக்கு அறிவிக்க வேண்டிய விஷயங்கள் சிலவிருக்கின்றன. அவற்றைச் சொல்லுகிறேன் கவனமாகக் கேட்டு அதன்படி நடந்து கொள். உன்னைக் காதலித்துள்ள இளவரசனுக்கு இன் னுந் திருமணம் நடைபெறவில்லை. அவர், அரசனுக்கு ஒரே புத்திரர். அரசன், அவருக்குச் சீக்கிரந் திருமணஞ் செய்யவேண்டுமென்றெண்ணி, அதற்குரிய காரியங்களைச் செய்துகொண்டிருக்கிறார். இளவரசர் சிறந்த அழகுடை

யவர். அவருக்கு, அவரினும் மேற்பட்ட அழகுடைய ஒரு பெண்ணையே மணஞ்செய்யத் தேர்ந்தெடுப்பார்கள். அப்பெண், உன்னைவிடப் பேரழகு வாய்ந்தவளாக விருப்பாள். பேரழகு வாய்ந்த பெண்ணை மணந்த அரசகுமாரர்; அப்பெண்ணைத் துறந்து உன்னைக் காதலிப்பாரென்று எண்ணமுடியுமா? ஒருக்கால் அவ்வாறு காதலித்தாரேனும், அரச காரியங்களைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்துப் பார்த்துவரும் சதுர்வித உபாயத்தினும்வல்ல மந்திரிமார்கள், அரசகுமாரரை உன்பாலின்பந்துய்க்கவிட்டு வைப்பார்களா? எந்தவித உபாயத்தாலேனும் அரச குமாரர் மனதை மாற்றிவிட மாட்டார்களா? நேற்றிரவு நமது வீட்டிற்கு வந்த சாமியாரும் உன் கையைப்பார்த்து, "இவளை மணந்து வாழுங் கணவன், இவளுடன் நெடுக விருந்து வாழமாட்டான். சில வருஷங்களுக்குப் பிறகு, இவளைவிட அழகியவொரு பெண்ணை மணந்து பிரிந்து விடுவான்" என்று சொல்லியிருக்கின்றார். ஆதலால், அரச குமாரர் உன்னைக் கைவிடாது உன்னுடன் என்றுங் கூடி யிருப்பாரென்று சொல்வதற்கில்லை. அரசகுமாரர் உன்னுடன் சிலகாலம் கூடியிருந்து பிரிந்துவிட்டால்; அவர் பிரிந்தபின், நீ வேறொரு புருஷனை இச்சிக்கக் கூடாது. ஒருக்கால் நீ இச்சித்தாலும், நீ இச்சிக்கும் புருஷன், அரச குமரனுக்குப் பயந்து உன்னை இச்சிக்கவுமாட்டான். மற்றொரு புருஷனைக் கூடித் திரவியந்தேட நீ எண்ணினால், இந்தத் தேசத்தைவிட்டு வேறொரு தேசத்துக்கு நாம் போகவேண்டியதுதான். அப்படிப் போவதென்றால், பிறந்தார்க்கு மீண்டும் பிறவாத பேரின்பப் பேற்றை யளிக்கும் நிறை செல்வத் திருவாரூரைத் துறக்க எப்படி மனந்

துணியும்? எனதருமைக் கண்மணி! இவையனைத்தையும் மனத்தின்கண் மறவாது நீ வைத்துக்கொண்டு; அரசகுமாரர் உன்மீது கொண்டுள்ள காதல்; அவருள்ளத்தில் நாடோறும் வளர்ந்து தழையும்படி கலவி வகைகளாலும், சாதுரிய வசனங்களாலும், நடையுடை பாவனைகளாலும், சங்கீத சாகித்தியங்களாலும் நீ அவருள்ளத்தைக் கவர்ந்து உன்வச மாக்கிக்கொள்ளவேண்டும். அவருள்ளம் உன் வசமாகிவிட்டால், இந்த இராஜ்ஜியமே உன்னுடையது தான். நீ எதை விரும்பிக்கேட்டாலும்; அவர் அதை மாருதளிப்பார். சிறிது காலத்தில் நீ குபேர செல்வத்தைப் பெற்றுவிடலாம். உனக்கு இந்நகர முழுதும் அஞ்சும். உன்னுடைய செல்வாக்கும், மதிப்பும் அதிகப்படும். நீ, சகல கலவிகளையும் அரசகுமாரருக்கு ஒரே நாளிற் காட்டிவிடக்கூடாது. உண்மைப் போகத்தையும் அளிக்கக் கூடாது. பிரதிதினமுஞ் சிறிதுசிறிதாகக் கலவிநயங்களையும், போகவின்பத்தையுங் காட்டிக்கொண்டே வரவேண்டும். அப்போதுதான் அவருக்கு உன்மீது காதல் வளர்ந்து கொண்டே வரும். எந்தக் காலத்தும் உண்மைப் போகத்தை முழுதும் அனுபவிக்கும்படி கொடுத்துவிடக் கூடாது. நமக்கு விலை மாதர் என்னும் பெயர் இருந்து வருகிறது. இப்பெயர் யாது காரணமாக நமக்கு ஏற்பட்டதென்று ஆராய்ந்து பார்த்தால், போகத்தை விற்பதனாலேயே ஏற்பட்டதென்று தெரியவரும் நம்மிடம் போகத்தைப்பெற ஒரு இராத்திரிக்குப் பல புருஷர்கள் வருவார்கள். எத்தனை புருஷர்கள் வந்தாலும்; அத்தனை புருஷர்களுக்கும் நாம் போகத்தை விற்கவேண்டும். ஒருவரையாவது இல்லையென்று திருப்பிவிடக்கூடாது. இவ்வாறு

போகத்தை விற்பதிலும், செக்கான் இவ்வளவு எள்ளுக்கு இவ்வளவு எண்ணெயென்று அளந்துகொடுப்பது போல நாமும் புருஷர்கள் ஒவ்வொருவரும் கொடுக்கும் பொருளுக்குத் தக்கவாறு போகத்தையும் அளந்துகொடுக்க வேண்டும். இதுதான் நமது தொழிலிலுள்ள மர்மம். இந்த மர்மம், நம்மைப்போல் போகத்தை விற்கும் மற்றய குலப் பெண்களுக்கும், இல்லறத்திலுள்ள பெண்களுக்குந் தெரியாது. அவர்கள் தன்பாலுள்ள போகத்தை ஒரே சமயத்தில் ஒரு புருஷனுக்கே கொடுப்பார்கள். நம்மைப் போல் போகத்தை விற்கும் வேறுகுலப் பெண்கள் பணக்காரர்களாகாது, என்றும் ஏழைகளாகவிருப்பதற்குஇதுவே காரணம். பலபுருஷர்கள் அக்கினி சாக்ஷியாக மணந்த அழகிய தன் மனைவியை விரும்பாது; நம்மையே பெரிதும் விரும்பிக் கைப்பொருளை இழப்பதற்குங் காரணம் இதுவேயாகும். இஃதன்றி நாம் போகத்தை விற்பதற்கு நாள், கோள், அமாவாசை, பருவம், மாசப்பிறப்பு முதலிய வொன்றனையும் பார்க்காது எந்தச்சமயத்தில்யார்வந்தாலும் தடையின்றி அவர்கொண்டுவரும் பொருளை வாங்கிக் கொண்டு போகத்தைக் கொடுக்கவேண்டும். வீட்டுக்கு விலக்கமாக விருக்குங் காலத்திலுங்கூட, நம்மை விரும்பிய நாயகன் நம்மிடங் கலவியை விரும்பினால் தடைசொல்லாது அவர் தம்இஷ்டத்தைப் பூர்த்திசெய்தல்வேண்டும். நம்மிடமுள்ள வசிய மருந்தை அரசகுமாரனுக்குப் பான் முதலியவற்றிற் கலந்து கொடுத்து; அவர் நம்மை விட்டுப்பிரியாதிருக்கும்படி செய்து விடலாமென்று நீ நினைக்கலாம். அரசகுமாரன் விஷயத்தில் அவ்வாறு நினைப்பது முற்றும் பிசகாக முடியும். வசிய மருந்திட்டால் அன்னத்துவேஷ

முண்டாகும். இரத்தவிர்த்தி குறையும். உடல் வெளுக்கும். அரசகுமரன் சரீரத்தில் இத்தகைய கெட்ட குணங்கள் ஏற்படும்பொழுது, அரசாங்கத்திலுள்ள உயர்ந்த வைத்தியர்கள் சும்மாவிருப்பார்களா? அவரது சரீரத்தைப் பலவிதப் பரீட்சைகளாலும் ஆராய்ந்து, அவருடலில் வசிய மருந்து இருக்கின்றதென்று கண்டுபிடித்து விடுவார்கள். அப்போது, அரசகுமரனுக்கு வசியமருந்திட்டது நாம்தானென்பது உறுதிப்படும். உறுதிப்பட்டவுடன் நம்முயிருக்கே ஆபத்து வந்துசேரும். ஆதலால் அந்த வழிக்கே நாம் போகக்கூடாது. அரசகுமரனைக் கலவி வகைகளினாலேயே மனோவசியஞ்செய்து மயக்கவேண்டும். அரசகுமரனை மனோவசியத்தினால் மயக்கிவைத்திருந்தாலும், எந்த நிமிஷத்திலும் அவர் உன்னை வெறுத்துப் பிரிந்து விடுவாரென்ற எண்ணம், உன்னுள்ளத்திற் பசுமரத்தாணிபோற் பதிந்திருக்கவேண்டும். உன்னிடம் அவர் உறவுகொண்ட சொற்பக்காலத்துள், பெருந்திரவியத்தையும், பெரும் விலைபெறக்கூடிய ஆடையாபரணங்களையும், கட்டட வகையராக்களையும், கிராமம் பூமிகளையும் பெறுதற்குரிய தந்திரங்களைச்செய்து நீ பெற்றுக்கொள்ள வேண்டும். இதை நீ சிறிதும் மறந்துவிடக்கூடாது. நீ மிகுந்த புத்திசாலி. இதற்குமேல் நான் உனக்கொன்றுஞ் சொல்லவேண்டுவதில்லை யென்று நினைக்கின்றேன். இன்றிரவு உன்போகத்தைவிரும்பி அரசகுமரன் நமதுவீட்டிற்கு வருகின்றார். முதன் மந்திரியின் புதல்வரான சுகுமாரர், அரசகுமாரருக்கு உதவியாக விருந்து காரியத்தை நடத்தி வைக்கிறார். அவர்தான் என்னை அழைத்துவரச்சொன்னவர். அவரிடந்தான் நான் போய்வந்தேன். அரசகுமரனுக்குப் படுக்கை

யறையை அலங்காரஞ்செய்யுஞ் செலவுக்குச் சுகுமாரன் என்னிடம் நூறு வராகன் கொடுத்தார். அதிற் பத்து வராகனை, என்னை அழைக்கவந்த தங்கன் என்னும் வேலையாளுக்குக் கொடுத்து, அவனுக்கு நம்மீது பட்சமுண்டாகும்படி செய்து வைத்திருக்கிறேன் என்று சொல்லி முடித்தாள்.

தன்றாய் சொல்லிய விஷயமனைத்தையுங் கவனத்துடன் கேட்டுக்கொண்டிருந்த சுந்தரசூளாமணி, அம்மா! நீ அறிவித்தவற்றைக் கவனித்துக்கொண்டேன். இப்படிச் செய்து விடுகிறேன், அப்படிச் செய்துவிடுகிறேனென்று இப்போது உன்மனமகிழ நான் சம்பமாகச் சொல்லுவதில் யாது பிரயோஜனம்? ஸ்ரீ தியாகராஜப் பெருமானுடைய திருவருளால் அரசகுமரன் நமது வீட்டிற்கு வரட்டும். அதன்பின் பார்த்துக்கொள் எனது சாமர்த்தியத்தை யென்று கூறினாள். சுந்தரசூளாமணியின் வார்த்தையைக் கேட்ட பங்கசம் அதிகச்சந்தோஷத்தை யடைந்தாள்.

பங்கசம், வீட்டையும் படுக்கையறையையும் அலங்கரித்தல்.

பங்கஜம், தன் வீட்டைச் சுத்தஞ்செய்து அலங்கரிக்கும்படி பல வேலைக்காரர்களைத் திட்டஞ்செய்தாள். திட்டஞ் செய்யப்பட்ட அவ்வேலைக்காரர்கள், வீடுமுழுதும் ஒட்டடை யில்லாமலடித்துக் கழுவவேண்டிய விடங்களைக் கழுவியும், மெழுகவேண்டிய விடங்களை மெழுகியுஞ் சுத்தஞ் செய்தார்கள். வீட்டின் முன்வாயிலைக் குப்பைகளில்லாமற்பெருக்கிச் சுத்தஞ்செய்து தண்ணீர் தெளித்தார்கள். முகப்புத்திண்ணைகள், வாயிற்படி, முன்வாசல் இவ்விடங்களில் விசித்திரமான வெண்சுதைக் கோலங்களை யிட்டார்கள். பாத்திரங்களை நன்றாக விளக்கிக் கழுவித்துடைத்து

வைத்தார்கள். வீட்டினுட்புறமுள்ள ஹாலில் மெல்லிய விரிப்பைத் தரைதெரியாதபடி விரித்து, அதன்மீது வேலைப்பாடமைந்த மேஜையொன்றையும், அதனருகில் நாற்காலியொன்றையும் கொண்டுவந்து போட்டார்கள். நாற் காலி தந்தங்களாற் பூவேலை செய்யப்பட்டிருந்தது. மேஜை மீது இரத்தினக்கம்பள மொன்றை விரித்து, அதன்மீது பொன்றகட்டையொத்த வெள்ளிலை, அடைக்காய், முத் துச் சுண்ணும்பு நிறைந்த வெள்ளிக்காண்டகம் இவைகள் பொருந்திய தங்கத்தாம்பாளம் ஒன்றையும், தங்கரேக்குப் பிடித்த ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, ஏலக்காய், கிராம்பு, வால்மிளகு, குங்குமப்பூ இவைகளைத் தனித்தனியுடைய தங்கக் கிண்ணங்களடங்கிய வெள்ளித் தட்டொன்றையும், காததூரம் பரிமளத்தைப் பரப்பும் கலவைச்சந்தனக் குழ ம்பைக்கொண்ட தங்கப்பேலா வொன்றையும், உயர்ந்த பன்னீர் அடைக்கப்பட்டுள்ள விசித்திர வேலைப்பாடமை ந்த வெள்ளிப் பன்னீர்ச் செம்பொன்றையும், சுகந்த புஷ்ப மாலைகள் நிறைந்த வெள்ளித்தாம்பாளம் ஒன்றையும் நிறைத்துவைத்தார்கள். மேஜையின்முன்புறத்தில் வாசனை ஊதுபத்திகளைக் கையிற்றுங்கிய பாவனையில் வெள்ளியிறைற் செய்த இரண்டு கந்தருவப் பிரதிமைகளை நிற்கவைத்தார் க்ள். நாற்காலியின்மீது வெண்பட்டாற்செய்து பஞ்சடை த்த மிருதுவான மெத்தையிட்டார்கள். மேஜையின் கீழ் நாற்காலியின் இடதுபுறத்தில் தங்கத்தாற்செய்த தாம்பூல எச்சிற் படிக்கத்தை வைத்தார்கள். ஹாலின் மேற்பா கத்தை விசித்திர வேலைசெய்யப்பட்ட அஸ்மானகிரியைக் கட்டி மறைத்துப் பலவித கலர்க் குளோப்பர்களைத் தொங்கவிட்டார்கள். ஹாலின் நாற்புறச் சுவர்களிலும் நிலைக்

கண்ணாடிகளை நிறுத்திவைத்தார்கள். இவ்விதம் அலங்கா ரஞ் செய்யப்பட்ட அந்த ஹால், இந்திரன் கொலுமண்டபம் போற் பிரகாசித்தது.

மேன்மாடியிலுள்ள படுக்கையறையையும், நிலாமுற் றத்தையும், அம்முற்றத்திலுள்ள பளிங்குக்கல் மேடை யையுஞ் சுத்தஞ்செய்து, பளிங்குக்கல் மேடைமீது உயர்ந்த இரத்தினக் கம்பளத்தை விரித்து, அதன்மீது சுத்தவெண் பட்டாற் செய்த மிருதுவான மெத்தையையிட்டு, விசித் திரப் பூவேலை செய்த தலையணை, திண்டு, கொட்டை முதலியவற்றை அம்மெத்தையின் மேல் அழகாகப் போட்டு வைத்தார்கள். மேடையின் மேற்பாகத்திற் சுகந்த புஷ்பக்காவணமிட்டுப் பன்னீர் தெளித்து அலங் கரித்தார்கள்.

படுக்கையறைக்குள் தந்தக்கட்டிலொன்றையும், கட்டிலின் இருபுறத்தும் சோபாக்களையும் கொண்டுவந்து போட்டார்கள். கட்டிலின் மேற்பாகத்தில் பலகலர் மணிக் கோர்வைச் சாலர்களையுடைய மேற்கட்டியைக் கட்டினார்கள். கட்டிலின்மீது உயர்ந்தபட்டாற்செய்தமிருது வான மெத்தையை விரித்து, அதன்மேல் காம்பரிந்த முல்லை மலர்களை ஓரங்குலவுயரங் கொட்டிப்பரப்பி, அதன் மீது அரவுரியினும் மெல்லிய சல்லாவை விரித்து, அதன் மேல் மிருதுவான தலையணை கொட்டை முதலியவற்றை யிட்டுவைத்தார்கள். அறையின் நாற்புறங்களிலும் குமாரப் பருவத்தையுடைய ஆடவர்களும், மங்கைப் பருவத்தையுடைய பெண்களும் மதனகமத்திற் கூறப் பட்ட லீலை வகைகளைச் செய்யும் பாவனையில் வரையப் பட்ட நிர்வாணப் படங்களை அலங்காரமாக ஆணிகளில்

தூக்கினார்கள். இஃதன்றி அறையின் நாற்புறத்தும் நிலைக் கண்ணாடிகளையும், பாவை விளக்குகளையும் நிறுத்திவைத் தார்கள். சாளரங்களைப் பூமாலைகளால் அலங்கரித்தார்கள். அறை முழுதும் நறுமணப் பன்னீரைத் தெளித்தார்கள். அறையின் வெளிப்பக்கத்தில் ஒரு பெரிய வெள்ளிக் கொப்பரையில் தண்ணீரை நிறைத்து வைத்து, அதனருகில் ஓர் முக்காலியிட்டு அதன்மீது தண்ணீர் நிறைந்த வெள்ளிச் செம்பொன்றை வைத்தார்கள். இன்னும் இதுபோன்ற பல அலங்காரங்களையுஞ் செய்தார்கள். படுக்கையறைக்குள்ளும், பளிங்குமேடையின் பக்கத்திலும் எச்சிற்றம்பலப்படிக்கங்களை வைத்தார்கள். இவ்விதஉந்நத அலங்காரங்களனைத்தையும் வெகு விரைவிற் செய்து முடித்தார்கள்.

### பட்சணந் தயாரித்தல்.

சிறந்த உயர்குலச் சமையற்காரர்களை வரவழைத்து, அவர்கள் கேட்டவண்ணம் நெய், பால், தேன், சர்க்கரை முதலிய சாமான்களையும், பட்சணஞ் செய்தற்குரிய தனியிடத்தையுங் கொடுத்து, உயர்ந்த பட்சணவகைகளையும், பாயசங்களையும், திரட்டுப்பால் முதலியவற்றையுஞ் செய்து வைக்கும்படி பங்கசம் திட்டஞ்செய்தாள். சமையற்காரர்களும், தேவாமிர்தம் இவ்வாறுதானிருக்குமோவென உண்டோர் ஐயுறும் வண்ணம் பட்சண முதலியவற்றைச் செய்து வைத்தார்கள்.

### சுந்தர சூளாமணி தன்னைத்தானே அலங்கரித்துக் கொள்ளல்.

சுந்தர சூளாமணி நறுமலரும், பன்னீருங்கலந்த நீர் நிறைக்கப் பட்டுள்ள ஸ்நான அறைக்குட் சென்று, சுகந்த

ஸ்நானப் பொடியைக் குழைத்துச் சரீரமெங்கும் பூசித் தேய்த்து ஸ்நானஞ்செய்து, சரீரத்தையும், கூந்தலேயும் உலர்ந்த வஸ்திரத்தால் ஈரமறத்துவட்டினுள். கூந்தலே வாசனைப்புகைகொண்டு புலர்த்தினுள். புலர்ந்த அக்கூந்தலில் வாசனைத்தைலத்தை இலேசாகத்தடவிவாரி அழகாகப் பின்னிப் பின்புறந் தொங்கவிட்டாள். சடையின் அடிப்பாகத்தில் இரத்தினங்கள் பதித்துச்செய்த செம்பொற் சடைபில்லேயை வைத்துத்திருகி அதன் மேற்பாகத்திற் பூவைச் சூட்டி அலங்கரித்தாள். கண் புருவங்களில் இலேசாக மையிட்டு, நெற்றியில் அழகாக ஜவ்வாதுப் பொட்டிட்டாள். காதுகளில் சூரியனைப்போற் பிரகாசிக்கும் வைரத்தோடுகளேயும், மூக்கில் நட்சத்திரத்தைப்போற் பிரகாசிக்கும் நத்தையும், பேசரியையும் இட்டாள், கழுத்தில் வைரப்பதக்கத்துடன் கூடிய அட்டிகை, ஆணிமுத்துக்கோவை, இரத்தினங்களாற் செய்த பொன்னரிமாலிகை இவற்றைப் பூட்டினுள். உயர்ந்த விலேபெற்ற கச்சைப்புனேந்தாள். இரு முழங்கைகளின்மேல் இரத்தின வலயங்களேயும், மணிக்கட்டில் இரத்தின வளேயல்களேயும், விரல்களில் இரத்தின மோதிரங்களேயும் பூட்டினுள். கால்களில் பாதசாலங்களே அணிந்தாள். விலேமதித்தற்கரிய உயர்ந்த பட்டுப்புடவையை இடையில் அழகுறவணிந்து, அதன் தலேப்பை உத்தரியமாக மார்மீதுபோக்கிப் பின்புறந்தொங்கவிட்டாள். இடையில் விலேயுயர்ந்த மேகலாபரணத்தைப் பூட்டினுள். இவ்வாறு அலங்காரஞ்செய்து முடிந்தவுடன், நிலேக்கண்ணுடியின் முன்சென்று தன்னலங்காரத்தையும், தன்னழகையுங்கண்டு, தன்னைத்தானே மெச்சிக்கொண்டாள், ஊர்வசியோ? அல்லது திலோத்தமையோ? என்று கண்டார் சந்

தேகிக்கும் வண்ணம் அன்று சூளாமணி காணப்பட்டாள். தன்மகள் அலங்காரத்தையும், அழகையும் பார்த்துப் பங்கசம் மனம் பூரித்தாள். அதுசமயம் சூரியன் அஸ்தமனமானன். வீட்டிலுள்ள சகல தீபங்களும் ஏற்றப்பட்டுப் பிரகாசித்தன. அரசகுமாரனுக்குச்சுற்ற நீராஞ்சனம் தயாரித்து வைத்தார்கள். சில தோழிமார்கள் அரசகுமாரனுக்கு உபசாரஞ்செய்வதற்கு அலங்காரத்துடன் நின்றுகொண்டிருந்தார்கள். இரவு கடிகை இரண்டாயிற்று. பங்கசமும், சுந்தரசூளாமணியும் அரசகுமாரன் வருகையை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்த வண்ணமாக இருந்தார்கள்.

## இராஜமார்த்தாண்டன் சுந்தரசூளாமணியின் வீட்டிற்கு விஜயஞ் செய்தல்.

தன் வீட்டையடைந்த சுகுமாரன், துங்கனேடும் மேன்மாடத்துள்ள தன்னறையைச் சார்ந்தோராசனத்தமர்ந்தான். துங்கன், சுகுமாரனுக்கு முன் கையைக் கட்டிக்கொண்டு நின்றான். சுகுமாரன் துங்கனைநோக்கி, துங்கா! இன்று நீ அரசகுமாரனுக்குத் துணையாக அவர்பின் பங்கசத்து வீட்டிற்குப் போகவேண்டும். அங்கு அரசகுமாரன் இருக்கும் வரையும் நீயுமிருக்கவேண்டும். அவர் அங்கிருந்து திரும்பும்போது, அவரை அழைத்துவந்து அரண்மனையிற் சேர்க்கவேண்டும். இதோவிருக்கிற தடிக்கம்பை நீ வைத்துக்கொள்ளவேண்டும். இதனுள் குற்றுவாளிருக்கிறது. ஏதேனும் ஆபத்து நேரிடுமேல், அக்காலம் கொஞ்சமும் முன்பின் யோசியாது எதிர்த்தவர்களைக் கொன்றுவிடவேண்டும். அரசகுமாரன் தாசி புத்திரியோடு கூடி

யிருக்கும்போது நீ பங்கசத்தை அழைத்து, விடிய ஐந்து நாழிகையளவில் அரசகுமாரனை எழுப்பிவிடவேண்டுமென்று அவளிடம் கண்டிப்பாகச் சொல்லவேண்டும். இந்தா, இந்தப்பையைக் கெட்டியாக வைத்துக்கொள். இதனுள் ஆயிரம் வராகனிருக்கிறது. அரசகுமாரன் குறிப்பை யறிந்து, எவ்வளவு பணம் வேண்டுமென்று கேட்கின்றாரோ அப்பணத்தைத் தடைசொல்லாது கொடு. அரசகுமாரனுடைய இந்த விஷயம் அணுவளவேனும் வெளியில் வரக்கூடாதென்று பங்கசத்தினிடம் கண்டிப்பாகச் சொல்லிவிடு என்று கட்டளை யிட்டான். அதுபோது, சூரியன் அஸ்தமித்துக் கடிகை யொன்றாயிற்று. அன்று பூர்வபட்சந் தசமி திதியானதால், சந்திரன் அதிகப்பிரகாசத்துடன் தாரகா கணங்களின் மத்தியில் விளங்கினான். சுகுமாரன் சாதாரண மனிதனைப்போல உடைதரித்துக் கொண்டெழுந்தான். துங்கன் ஆயிரம் வராகனடங்கிய பணப்பையுடனும், உள்ளாயுதத் தடிக்கம்புடனும் சுகுமாரன்பின் தயாராக நின்றான். சுகுமாரன் றன்னறையைச் சாத்திப் பூட்டிக்கொண்டு துங்கனுடன் அரண்மனையை அடைந்து இராஜமார்த்தாண்டனைக் கண்டான். மந்திரி குமரன் இன்னும் வரவில்லையே யென்று கவலையுடன் எதிர்நோக்கியிருந்த இராஜமார்த்தாண்டன் வதனம், சூரியனைக்கண்ட தாமரை போல மலர்ந்தது. இராஜமார்த்தாண்டன், சுகுமாரனை மிக்க உபசாரமொழிகூறிப் புகழ்ந்து ஆசனத்திலிருக்கச் செய்தான். சுகுமாரனுடைய மனம், இராஜமார்த்தாண்டன் கூறிய உபசார மொழிகளைச் சிறிதுங்கவனியாது, அப்பொழுது நடக்கவேண்டிய காரியங்களையே கவனித்தபடியால், சுகுமாரன் இராஜமார்த்தாண்டனை நோக்கி, எனது

ருயிர்க்குரிய அரசரேறே! சீக்கிரஞ் சந்தியாவந்தனத்தைச் செய்து போசனத்தை முடித்துக்கொள்ள வேண்டுமென்றான். தன்றோழன் வாய்மொழியை யோர்ந்த இளமன்னன், சீக்கிரம் நான்குபேர்களுக்குச் சாப்பாடு கொண்டுவரச் சொல்லென்று அங்கு காத்துநின்ற தன்னேவலாளனுக்குக் கட்டளை யிட்டுச் சந்தியாவந்தனஞ் செய்யச்சென்றான். அரசகுமான் கட்டளையைப்பெற்ற பணியாளன், சமையற் சாலையையடைந்து அரசகுமரன் ஆக்ஞையை அங்குள்ள பரிசாரகர்களிடம் அறிவித்தான். பரிசாரகர்கள், பணியாளன் கூறிய சொல்லைக்கேட்ட அந்தட்சணமே, அன்னம் கறிவகையாதிய சகல உணவுபதார்த்தங்களையும் எடுத்துக் கொண்டு விரைந்து வந்துசேர்ந்தார்கள். சந்தியாவந்தனஞ் செய்யச்சென்ற மார்த்தாண்டன் மனம், சுந்தரசூளாமணியையே சார்ந்துநின்றதால், விபூதியைத் தரித்துச் சுந்தர சூளாமணி நாமத்தையே மந்திரமாகச் செபித்து, அவளையே தியானஞ் செய்துகொண்டு வெகுவிரைவில் வந்துசேர்ந்தான். பரிசாரகர்கள் இரண்டு தலைவாழையிலையைப் போட்டு, அதில் அன்னமாதி பதார்த்தங்களைப் பரிமாறினார்கள். அரசகுமரனும், மந்திரிகுமரனும் சாப்பிட்டுக் கையலம்பினார்கள். கையலம்பிய சுகுமாரன், துங்கனுக்குச் சாப்பாடு போடும்படி பரிசாரகர்களுக்குக் கட்டளையிட்டான். துங்கன் சாப்பிடச் சென்றான். சுகுமாரன் அரசகுமரனை நோக்கி, மன்னர் மன்ன! தாங்கள் ஆடம்பரமின்றி என்னைப் போலச் சாதாரண உடை தரித்துக்கொள்ள வேண்டுமென்று அறிவித்தான். இராஜமார்த்தாண்டனும், தனது நண்பன் சொற்படியே சாதாரண உடைதரித்துக் கொண்டான், துங்கனும் சாப்பாட்டை முடித்துக்கொண்டு உள்

ளாயுதத்தடியுடன் வந்து நின்றான். சுகுமாரன், இளவரசன் வசிக்கும் வாசஸ்தானத்தின் வாயில் காவலர்களை நோக்கி, நாங்கள் நகர் பரிசோதனைக்குச் செல்லுகின்றோம். திரும்பி வர அதிக நாழிகை செல்லும். நீங்கள் நித்திரைசெய்யாது பத்திரமாகக் காவல்புரியவேண்டு மென்று கட்டளையிட்டு அரசகுமாரனுடனும், துங்கனுடனும் வெளியிற் புறப்பட்டான். வெளிப்பட்ட மூவரும் வீதியை யடைந்தார்கள். அதுபோது, இரவு கடிகை ஐந்தாயிற்று. சுகுமாரன் இளவரசனை நோக்கி, என்னிருகண்ணினுஞ் சிறந்த இராசசிங்கமே! துங்கன், பாதுகாப்பாளனாகத் தங்களுடன் வருகின்றான். அவனிடம் ஆயிரம் வராகனிருக்கிறது, தங்களுக்கு வேண்டுமான வராகனை வாங்கிக்கொள்க. சுந்தரசூளாமணியும், அவள்தாயும் தங்கள் வருகையை எதிர்நோக்கிக் கொண்டிருக்கின்றார்கள் தங்கள் மனம் விரும்பிய யுவதியுடன் ஆனந்தமாகக் கூடியிருந்து இன்பத்தை யனுபவித்து இரவு கடிகை இருபத்தைந்தளவிற் புறப்பட்டு, யாரும் அறியா வண்ணம் அரண்மனைக்குவந்து சேரவேண்டும். நானும், தங்கள் வருகையை எதிர்நோக்கி இந்தவிடத்திற் காத்திருப்பேனென்றான். சுகுமாரன், இவ்வார்த்தையைச் சொல்லி வாய்மூடுமுன் அங்கொரு குதிரைவண்டி வந்து நின்றது. சுகுமாரன், அரசகுமாரனை அவ்வண்டியினுள் ஏறிக்கொள்ளும்படி கூறினான். அரசகுமாரனும் அவ்வாறே ஏறிக்கொண்டான். துங்கன் தன் எஜமானுக்கு வந்தனஞ்செய்து உத்தரவு பெற்று வண்டிப்பாகனுடன் ஏறிக்கொண்டான். இருவரும் ஏறிக்கொண்டதும் வண்டி புறப்பட்டது. சுகுமாரன் றன் வீட்டையடைந்து, அரண்மனையிற் சாப்பிட்டுவிட்டதாகப் பரிசாரகரிடம் அறிவித்துவிட்டு மேன்மாடியிலுள்ள

தன்னறையைச் சார்ந்து படுத்து நிம்மதியாக நித்திரை செய்தான்.

சுகுமாரனைத் தனியே விட்டுப் புறப்பட்ட குதிரை வண்டி பலதெருக்களைக்கடந்து வடக்கு வீதியையடைந்து பங்கசத்தின் வீட்டுவாசலில் வந்து நின்றது. துங்கன் வேகமாகக் கீழிறங்கி வண்டியின் கதவைத்திறந்தான். கதவு திறக்கப்பட்டதும், அரசகுமரன் கீழிறங்கினன். இளமன்னன் இறங்கினவுடன், குதிரைவண்டி மாயமாகப் பறந்துவிட்டது. துங்கன் பின்றுடர்ந்துவர, அரசகுமான் நடந்து சென்று பங்கசத்தின் வீட்டுவாயிற் படியின்மீது எறினன். அதுசமயம், மஞ்சட்கரைத்த நீரில் அறுகிடப்பட்ட தங்கத் தாம்பாளத்துடன் இரண்டிளம்பெண்கள் வந்து அரசகுமானுக்கு ஆலாத்தியெடுத்தார்கள். அரசகுமரன் துங்கனைக் கடைக்கண்ணுல் நோக்கினன். இளவரசன் குறிப்பையுணர்ந்த துங்கன், நூறுவராகனை அம்மன்னனின் கரத்திற் கொடுத்தான். அரசகுமரன், துங்கன்கொடுத்த நூறு வராகனையும் நீராஞ்சனத் தாம்பாளத்திற் போட்டுவிட்டு உள்ளேசென்ருன். சென்ற அரசகுமரன் இருபுறத்திலும் சிறந்த அலங்காரத்துடன் கூடிய இரண்டிளம் பெண்கள் வந்து கைலாகுகொடுத்து அரசகுமரனை அழைத்துக் கொண்டு ஹாலுக்குட்சென்று அங்கு மேஜையினிடத்து இடப்பட்டிருந்த அழகிய நாற்காலியில் உட்காரச்செய்தார்கள். நாற்காலியில் உட்கார்ந்த குமார அரசன், பங்கசத்தின் வீட்டினது அமைப்பையும், அலங்காரத்தையுங் கண்ணிமையாது நோக்கி இறும்பூதுற்ருன். அதுசமயம், பங்கசம் வந்து அரசகுமாரனுக்கு நமஸ்காரஞ்செய்தாள். நமஸ்கரித்த

பங்கசத்தைக் கண்ட அரசகுமரன், இவள்தானே சுந்தர சூளாமணியென ஐயுற்றான். நமஸ்கரித்த பங்கசம் எழுந்து தலைகவிழ்ந்து நின்று, மகாமாட்சிமைபொருந்திய இராசாதி ராச! இராஜகெம்பீர! சோழமண்டலாதிபதியின் புத்திர ரத்தினமாகிய தாங்கள், எனது சிறு குடிசைக்கு எழுந்தருள நானும், எனது புத்திரி சுந்தரசூளாமணியும் பூர்வ சென்மத்தில் என்ன புண்ணியஞ்செய்தோமோ அறிகிலேன்; ஸ்ரீமுருகனிலும், மன்மதனிலும் அழகுவாய்ந்த தாங்கள், எனதருமைப் புத்திரியாகிய சுந்தரசூளாமணியுடன், திருமால் இலக்குமி, இந்திரன் இந்திராணி, முருகன் வள்ளி, மன்மதன் இரதி, இவர்களைப்போலக் கலந்திருந்து, ஏழையாகிய வென்னைப் பாதுகாத்தருள வேண்டுமென்று கூறிப் பிரார்த்தித்து மீண்டும் நமஸ்கரித்து உள்ளே சென்றாள்.

பின்னர் இரண்டு யுவதிகள் அரசகுமாரனிருந்த இடத்திற்கு வந்தார்கள். வந்த பெண்களில் ஒருத்தி பன்னீரை யெடுத்து அரசகுமரன்மீது தெளித்தாள். மற்றொருத்தி சந்தனத்தை யெடுத்து அரசகுமரனிடம் நீட்டினாள். அரசகுமரன் சந்தனத்தைக் கையால் தொட்டுத் தலையை யசைத்தான். துங்கன் இதனையெல்லாம் பார்த்துக்கொண்டு ஹாலுக்கு வெளியில் நின்றுகொண்டிருந்தான். பன்னீர் தெளித்துச் சந்தனமளித்த யுவதிகளில் ஒருத்தி போய் விட்டாள். மற்றொருத்தி மயிலிறகாற் செய்யப்பட்ட விசிறியை எடுத்துச் சிறுகாற்றெழும்பும் வண்ணம் விசிறிக் கொண்டு நின்றாள். சிறிது நேரத்திற் பரிசாரகனொருவன் மூடப்பட்ட வெள்ளித் தட்டம் ஒன்றையும், வெள்ளிச் செம்பிற் றண்ணீரையும் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்

தான். அரசகுமாரன், வந்த பரிசாரகனை நோக்கி, இவை களென்னவென்று மெல்லிய குரலிற் கேட்டான். பரிசாரகன் பட்சணமென்றான். அஃதுணர்ந்த அரசகுமாரன் இப்பொழுது யாதொன்றும் வேண்டாமென்றான். கொஞ்சம் பாலாகிலும் சாப்பிட வேண்டும்: ஏதாவது சாப்பிட வேண்டுவது முறையென்று பரிசாரகன் மொழிந்தான். அரசகுமாரனுக்குத் தாசிவீட்டின் நடபடிக்கைகள் தெரியாததினால் தனக்கு அங்கு நடந்து கொண்டிருக்கிற ஒவ்வொரு உபசாரங்களையும் நோக்க நோக்க, அவனுக்கு வியப்புண்டாயிற்று. வியப்படைந்த அரசகுமாரன், கொஞ்சம் பாலென்றாற் கொடுவென்றான். பரிசாரகன் ஒரு வெள்ளி லோட்டா நிறையப் பாலையூற்றிக் கொடுத்தான். அரசகுமாரன் அப்பாலை வாங்கியுண்டான். உண்ட அரசகுமாரன், பாலின் ருசியையும், அப்பால் காய்ச்சப்பட்டிருந்த பக்குவத்தையும் மெச்சிக்கொண்டான். பரிசாரகன், கொண்டுவந்த பட்சணங்களைத் திரும்ப எடுத்துக்கொண்டு உள்ளே சென்றான். பரிசாரகன் சென்ற சில நிமிஷத்தில் மற்றொரு யுவதி வந்தாள். வந்தயுவதியும், அரசகுமாரனுக்கு விசிறிக்கொண்டு நின்ற யுவதியும் அரசகுமாரனுடைய இருபக்கத்திலும் நின்று அரசகுமாரனுக்குக் கைலாகு கொடுத்தார்கள். அரசகுமாரன், அவர்கள் கையைப் பிடித்துக்கொண்டெழுந்தான். எழுந்த இளவரசனை அந்த யுவதிகள் மேன்மெத்தைக்கு அழைத்துச்சென்று அங்கு நிலாமுற்றத்தில் விசேஷ அலங்காரஞ் செய்யப்பெற்ற பளிங்குமேடையில் இடப்பட்ட விரிப்பின்மீது உட்காரவைத்தார்கள். அரசகுமாரன் அம்மேடையின் அமைப்பையும், பொலிவையும் கண்களிமையாது நோக்கி மனக்களிப்படைந் திருந்தான்.

துங்கனிடம் ஒருபெண் வந்து, அரசன் அந்தப்புரத்துக்குச் செல்லுகிறார், நீ முகப்புத் திண்ணையிலே தானே இருக்க வேண்டுமென்று அறிவித்தாள். அப்பெண் வாய்ச்சொல்லை யுணர்ந்த துங்கன், அவ்வாறே வெளித்திண்ணையில் உட்கார்ந்திருந்தான். அரசகுமரன் பளிங்கு மேடையை யடைந்தவுடன் தாம்பூலம், சந்தனம், பன்னீர், புஷ்பம் முதலிய சகலமும் யுவதிகளால் அம்மேடையிற் கொண்டு வந்து வைக்கப்பட்டன.

சுந்தர சூளாமணி பளிங்குமேடையை யடைதல்.

தனது நண்பனான சூரியனுடைய குலத்திற் பிறந்த அரசகுமரன், புதுவதாக உலகவின்பத்தை யனுபவிக்க வந்திருக்கின்றான்; அவனுக்கு நாம் இதஞ்செய்யவேண்டு மென்றுணர்ந்த சந்திரன், தனது குளிர்ந்த கிரணங்களைப் பரப்பினான். மன்மதனுடைய இரதமாகிய இளந்தென்றல் வீசிக்கொண்டிருந்தது. அரசகுமரனுள்ளம், சுந்தரசூளா மணி நம்முன் வந்து தெரிசனந்தருதற்கு இன்னுங்கால தாமத மாகுமோவென்று கருதிக் கவலையுற்றது. அது சமயம், அழகிய இருயுவதிகள் சுந்தர சூளாமணியை அழைத்துக்கொண்டு வந்தார்கள். சுந்தரசூளாமணி, தலை குனிந்தவண்ணம் அன்னம்போல் அடிபெயர்த்து மின்னற் கொடிபோல் இடைநுடங்க நடந்துவந்தாள். இவ்வாறு வரும் சுந்தரசூளாமணியை அரசகுமரன் றெரிசித்தான். அவள் அழகையும், அவள் நடையையும் பார்த்த அரச குமரன், இவள் இவ்வுலகத்துப் பெண்ணல்ல, தேவலோ கத்துப் பெண்ணே யாவளென்று கருதினான், சுந்தரசூளா

மணியை அழைத்துவந்த யுவதிகளிருவரும், அவளை அரசகுமாரன் முன்னர்ச் சமீபத்தில் நிறுத்தினார்கள். சுந்தரசூளாமணி தன்காற்பெருவிரலைப் பார்த்துக்கொண்டு தலைகவிழ்ந்த வண்ணம் நின்றாள். சுந்தரசூளாமணியை அழைத்துவந்த யுவதிகளில் ஒருத்தி, பன்னீர்ச்செம்பை யெடுத்துச் சுந்தரசூளாமணியின் கையிற் கொடுத்தாள். சுந்தரசூளாமணி அதனைவாங்கி அரசகுமாரன்மீது பன்னீரைத் தெளித்தாள். தெளித்தவுடன் பன்னீர்ச்செம்பை வாங்கிக்கொண்டு சந்தனப் பேலாவை யெடுத்துச் சுந்தரசூளாமணி முன் ஏந்தினாள். சுந்தரசூளாமணி, தன் வலக்கரத்தாற் சந்தனக்குழம்பை யெடுத்து அரசகுமாரனுடைய மார்பின்மீதும், புயங்களின்மீதும் பூசினாள். சுந்தரசூளாமணியின் கரம் மேலிற்படவே, அரசகுமாரன் சரீரம் புளகாங்கிதமுற்றது. அதுசமயம், அவன் மனமடைந்த குதூகலத்தை ஆதிசேடனாலும் அளவிட்டுக் கூறமுடியாது. அரசகுமாரன் மனம் சுந்தரசூளாமணியை ஆலிங்கனஞ்செய்து முத்தமிடக்கருதிற்று. அவ்வாறு செய்தற்கு, அங்குள்ள யுவதிகள் தடையாக விருந்தார்கள். சந்தனம்பூசி முடிந்ததும், சிறந்ததோர் மல்லிகை மலர்மாலையைச் சுந்தரசூளாமணி கையில் ஓர் யுவதி கொடுத்தாள். கையிற்பெற்ற அம்மலர்மாலையைச் சுந்தரசூளாமணி, அரசன் கழுத்திற்சூட்டி மண்டியிட்டுப் பஞ்சாங்க நமஸ்காரஞ் செய்தாள். சுந்தரசூளாமணி அரசகுமாரனை நமஸ்கரித்தற்குத் தனதுமுழங்கால்களை நிலத்தில் ஊன்றியதும், அங்கு நின்ற அவளது தோழியான யுவதிகள், வெகுவேகமாக மாடியை விட்டிறங்கிக் கீழ்வீட்டையடைந்தார்கள். தோழிகள் மறையக்கண்ட அரசகுமாரன்

தன்னடியில் நமஸ்கரித்த சுந்தரசூளாமணியைத் தன திரு கரங்களாலும்பற்றி வாரியெடுத்து மடிமீதுவைத்துக் கட்டியணைத்துக்கொண்டு அவளது கண்ணாடியையொத்த கபோலங்களில் மாறிமாறி முத்தமிட்டான். அதுபோது, சுந்தரசூளாமணி அம்மா! அம்மா! இங்கேபாரென்று தாழ்ந்த குரலிற் கூறிப் பயந்தவள்போற் பாசாங்கு செய்தாள். அரசகுமரன் அதனை மெய்யென்று கருதி, என் கண்ணே! நான் உன்னை என்னசெய்தேன். ஏன் அம்மாளை அழைக்கின்றாயென்று சொல்லி அவளது அலகை இருவிரல்களால் நெரித்து அவள் கனிவாயிலுமுத்தமிட்டான். அவ்வாறு அரசகுமரன் முத்தமிடவே, சுந்தரசூளாமணி தன்னிரு கரங்களாலும் அரசகுமரனை இறுகக் கட்டிப்பிடித்தாள். இதன்மேல் அங்குநடந்த காரியங்களை இதனை வாசிக்கும் பதினைந்து வயதுக்கு மேற்பட்ட ஆடவர்களும், பதினொரு வயதுக்கு மேற்பட்ட மங்கையர்களும் தத்தம் புத்திபலங்கொண்டு யூகித்து அறிந்துகொள்ளும்படி அவர்களுக்கே சுதந்தரங்கொடுத்து விட்டுவிட்டோம். கம்பநாடரும் "பிரிந்தவர்கூடினாற் பேசவேண்டுமோ" என்று கூறியுள்ளார்.

அரசகுமரனும், சுந்தரசூளாமணியும் பலகடிகைகாலம் மதனாகமத்துறையிற் றமது மனதைச்செலுத்தி ஆலிங்கனம், சும்பனம், தாடனம், கரிகரம், பாற்சம்புடமாதிய பலவித லீலைகளைச்செய்து இவ்வின்பமே யின்பம்; சுவர்க்கவுலக வின்பமும் இதற்கிணையல்லவென்று தமது மனமுணர்ந்து மகிழும் வண்ணம் முதிர்ந்தவின்பத்தை யனுபவித்தார்கள். இவ்வாறு இன்பத்தை யனுபவித்த அவ்விருவரும், இன்பமுடிவில் ஒருகடிகைநேரம் அவசமுற்

திருந்து, பின்னர் அவசரங்கொளிந்தெழுந்து வெள்ளிக்கொப் பரையிற் றயாரில் வைக்கப்பட்டிருந்த தண்ணீரைக் கொண்டு கைகால் முகங்களைக் கழுவிச் சுத்தஞ்செய்து துடைத்து உடைகளைச் சரியாக வணிந்து கொண்டார்கள். அப்பொழுது இரவுகடிகை பதினைந்தாயிற்று. அதுபோது சுந்தரசூளாமணி, மன்னன் மார்த்தாண்டனைப் பளிங்கு மேடையிலிருக்கச்செய்து மெத்தை வாயிற்படியண்டை வந்து நின்றுகொண்டு அம்மாவென்று ஒரு சத்தமிட்டாள். தன்னைச் சுந்தரசூளாமணி அழைக்கக்கூடுமென்ற எண்ணத் துடன் முகப்புத்திண்ணையிற் றங்கனோடு பேசிக்கொண்டு விழித்திருந்த பங்கசம், சுந்தரசூளாமணி அழைத்த சத்தங்கேட்டு இதோ வந்துவிட்டேனென்று கூறிக் கொண்டே வேகமாகச் சென்று மெத்தைப்படி மீதேறித் தன்மகளைக்கண்டாள். தாயைக்கண்ட சுந்தரசூளாமணி, அம்மா! பரிசாரகர்களை உணவுபதார்த்தங்களை யெடுத்துக் கொண்டு உயரவரச்சொல்லு. அரசகுமாரன் தனித்திருக் கிறார்; நான் போகின்றேனென்று சொல்லி வெகுவேக மாகச்சென்று அரசகுமாரனையடைந்து அவனுள்ளங்குளிரப் பக்கத்தில் உட்கார்ந்து கட்டியணைத்து அவனது கபோலத் தில் ஒரு முத்தங்கொடுத்தாள். சுந்தரசூளாமணி அரச குமாரனையடைந்த சிறிதுநேரத்தில் பரிசாரகர்கள் சகல உணவு பதார்த்தங்களையும் எடுத்துக்கொண்டுவந்து சேர்ந் தார்கள். சுந்தரசூளாமணி பரிசாரகர்களைப் பார்த்து, எல் லாவற்றையும் வைத்துவிட்டுப் போங்கள்; அப்புறம் கூப்பிடுகிறேன் வாலாமென்றாள். பரிசாரகர்கள் உணவுக ளனைத்தையும் பளிங்குமேடையில் வைத்துவிட்டுப் போய் விட்டார்கள்.

## அரசகுமாரனும், சுந்தரசூளாமணியும் உணவருந்தல்.

பரிசாரகர்கள் சென்றபின்னர் சுந்தரசூளாமணி அரசகுமாரனைப் புன்முறுவல் பூத்த முகத்துடன் அன்புதவும்ப நோக்கி, எனது ஆருயிர் நாயக! வந்திருக்கும் பட்சணங்களை அடியாள் கரத்தாற் றெட்டு எடுத்துத் தரலாமா? அல்லது தாங்களே யெடுத்தருந்துகின்றீர்களா வென்று கேட்டாள். சுந்தரசூளாமணியின் இனிய மொழியையுணர்ந்த இளமன்னன், எனதிருகண்ணே! இனி நான்வேறு நீவேறு? இன்று முதல் நாமிருவரும் ஒன்றே. உனது கரத்தால் எடுத்துக் கொடுப்பதையே அருந்தக் கருதுகின்றே னென்றான். மன்னன் வழுத்தியதுணர்ந்த சுந்தரசூளாமணி அதிக வானந்தமுற்றுப் பட்சணத்தட்டுகளைத் தனது சமீபத்தி லெடுத்து வைத்துக்கொண்டு, ஒவ்வொரு பட்சணங்களையு மெடுத்து அரசகுமாரன் வாயிலூட்டினாள். அதுகண்ட அரசகுமாரனும், பட்சணங்களை யெடுத்துச் சுந்தரசூளாமணியின் வாயிலூட்டினான். இவ்வாறு சுந்தரசூளாமணியும், அரசகுமாரனும் மாறி மாறி ஒருவர் மற்றொருவர் வாயில் பட்சணங்களை ஊட்ட உண்டு மகிழ்ந்து கையலம்பினார்கள். சுந்தரசூளாமணி உடனே, தாம்பூலத்தட்டை யெடுத்தாள். அதுகாலை, பரிசாரகர்கள் வந்தார்கள். வந்தவர்களைச் சுந்தரசூளாமணி நோக்கிப் பலகாரத்தட்டுகளை எடுத்துக்கொண்டு போங்களென்றாள். சுந்தரசூளாமணியின் சொற்படியே பரிசாரகர்கள் பலகாரத்தட்டுகளை யெடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். தாம்பூலத்தட்டை யெடுத்த சுந்தரசூளாமணி, வாசனைப்பாக்கை யெடுத்து அரசகுமாரன் கையிற் கொடுத்தாள். தன் காதலியளித்த அப்பாக்கை அரசகுமாரன் வாங்கித் தனதுவாயிற்போட்டுக்கொண்டான்,

பின்னர், சுந்தரசூளாமணி வெற்றிலைகளைச் சுண்ணும்பு தடவிக் காம்பைக்களைந்து மடித்து மடித்து அரசகுமரனுடைய வாயிற் கொடுத்துக்கொண்டு வந்ததுடன்; இடையில் ஏலம், கிராம்பு, சாதிக்காய், பத்திரி முதலிய வாசனைத் திரவியங்களையுங் கொடுத்துவந்தாள். சுந்தரசூளாமணி கொடுத்த வெற்றிலைச் சுருள்களையும், வாசனைச் சாமான்களையும் அரசகுமரான் வாயில் வாங்கி மென்றகாலை, சுந்தரசூளாமணி, மென்றதாம்பூலத்தில் ஒரு பகுதியைத் தன் வாயிற் கொடுக்கும்படி அரசன் வாயுடன் தன்வாயை வைத்துக் கேட்டு வாங்கித் தானுமென்றுண்டு மகிழ்ந்தாள். இவ்விதம் இருவரும் தாம்பூலமருந்திக் கொண்டிருந்தகாலை, இரவுகடிகை பதினெட்டாயிற்று. சந்திரனுடைய ஒளி மங்கிற்று. அதுகாலை, சுந்தரசூளாமணி அரசகுமரனைப் பார்த்து, இனிநாமிருவரும் அறைக்குட்சென்று அங்குள்ள கட்டிலிற் சயனித்துக் கொள்ளலாமென்று கூறினாள். அரசகுமரன் அதற்குச் சம்மதித்தான். இருவருமெழுந்து ஒருவர்தோளில் ஒருவர் கையைப் போட்டுக்கொண்டு அறைக்குட்சென்று, அங்குள்ள சோபாவொன்றில் அரசகுமரனை உட்காரச்செய்து, சுந்தரசூளாமணி வெளியில் வந்தாள். வெளியில் வந்த அவள், பளிங்குமேடையிலிருந்த சந்தனப்பேலாவை யெடுத்துக்கொண்டு அரசகுமரன் இருந்தவிடத்தைச் சார்ந்து, அரசகுமரன் மனமும் சரீரமுங் குளிரும் வண்ணம் சந்தனக்குழம்பை யெடுத்து அவன் மார்பு, புயமுதலியவற்றிற் பூசினாள். அதுகண்ட இளங்கோவும், தன்கரத்தாற் சந்தனக்குழம்பை யெடுத்துச் சுந்தரசூளாமணியின் ஸ்தனங்களின்மீதும், மார்பிலும் பூசி அவளுள்ளத்தையும், சரீரத்தையும் குளிரச்செய்தான்.

இவ்வாறு ஒருவர்மீதொருவர் சந்தனம்பூசிக் களித்த பின்னர், அவ்விளவேந்து சுவரின் நாலாபக்கங்களிலும் தூக்கப்பட்டிருந்த சிற்றின்ப லீலைப்படங்களைநோக்கினன். நோக்கிய அரசகுமரன்மீது, மன்மதன் தனது பூங்கணைகளைப் போக்கினன். பூங்கணைகள் தன்மீது பொருந்தவே, அரசகுமரன் பெருங்காதல் கொண்டான். காதல் நிறைந்த மனக்காவலன், பக்கத்து நின்றுகொண்டிருந்த சுந்தர சூளாமணியை இருகரங்களாலுங் கட்டியணைத்து வாரியெடுத்து மெத்தைமேற் கிடத்தி, அவள்மீது சாய்ந்து கொண்டு, அவளிரு கபோலங்களிலும் மாறிமாறி முத்தங் கொடுத்து, செவ்வல்லிமலரையும் வென்றுள்ள அவளது செவ்வாயதரத்திற் றன்வாயைச்சேர்த்து, அம்மங்கையின் முத்தைவென்ற தந்த பந்திகளின்றுஞ் சுரந்தெழுந்த அமிர்தத்தை ஆசைதீரப் பானம் பண்ணினன். அதுகாலை இருவருடைய உள்ளமும் ஒத்த அன்பைப் பெற்றது. அன்பாலொத்த இருவரும், மதனசாஸ்திரத்திற் சொல்லப்பட்ட பலவித லீலைகளை ஒருவரைவிட வொருவர் வேகங் கொண்டு மாறிமாறிப் புரிந்தார்கள். முடிவிற்சமபோகத்தை யுற்றூர்கள். என்றுமடையாத பேரானந்தத்தை அன்றடைந்தார்கள். இந்தச் சரீரத்தாற் பெறக்கூடிய பிரயோசனத்தை, இன்றுதான் பெற்றேமென இருவருங் கருதினார்கள். அரசகுமரன், தேனில் விழுந்த ஈயைப்போல் சுந்தரசூளாமணிபாற் றேன்றிய காதற்கடலில் விழுந்து, அக்கடலின் கரைகாணுது மயங்கினன். தாசிகுலப் பெண்ணன சுந்தரசூளாமணியும், அரசகுமரனுடைய அழகிலும், அவனுடைய கலவியிலும் ஈடுபட்டு, அவனை விட்டுப்பிரிய அணுவுமனமில்லாதவளானுள். இருவரும் ஒத்த அன்புடை

யராய்க் கட்டித்தழுவிக் கலந்து இன்பத்தை யனுபவித்துக் கொண்டிருந்த நிலையில், கடிகை இருபத்துநான்காயிற்று. அதுகாலை, பங்கசம் மேன்மெத்தை வாசற்படியண்டை வந்துநின்று சுந்தரசூளாமணியைக் கூப்பிட்டாள். அழைத்த பங்கசத்தின் சுரலோசை, தம்பதிகளின் காதுகளில் அக்கினியிற் பழுக்கக்காய்ச்சின இருப்புச் சலாகையைச் செருகினது போலிருந்தது. இதற்குமுன் எந்த நாளிலுந்தாய்மீது வெறுப்புறாதசுந்தரசூளாமணியின் உள்ளத்தில் அன்று வெறுப்புற்றது. தாயைவெறுத்த சுந்தரசூளாமணி, அதுபோது தன்னாயகன் இருகபோலங்களையுந் தனதிருகரங்களால் அழுந்த அமுக்கிக்கொண்டு, அவனது வாயில் முத்தமிட்டாள். அது சமயம் பங்கசம் சற்று உரத்த தொனியுடன் மேலுமேலுங் கூப்பிட்டாள். அஃதுணர்ந்த சுந்தர சூளாமணி அரசகுமாரனை நோக்கி, என்றுரையே! அந்தச் சனியன் என்னமோ அலறுகிறது, கேட்டுவிட்டு இதோ வந்துவிடுகிறேன் இருங்களென்று சொல்லிவிட்டு, உடைகளைக் கூடச்சரியாக உடுத்துக் கொள்ளாமல் மேன்மாடி வாயிற்படியண்டை வந்து, அங்கு நின்ற தன்றாயைக் கண்டு ஏனம்மா கூப்பிடுகிறாயென்று கேட்டாள். பங்கசம் தன் புத்திரியைப் பார்த்து, என் கண்ணே! அரசகுமாரனை யழைத்துப்போகக் குதிரை வண்டி வந்து நிற்கின்றது. நாழிகை இருபத்தைந்தாகப் போகிறது. அரண்மனைக்குப் போவதற்கு அரசகுமாரனை யெழுப்பிச் சல்தியாக வரச்சொல்லென்றாள். அவ்வார்த்தையைக் கேட்ட சுந்தரசூளாமணியின் மனம் கலக்கத்தையடைந்தது. அவளது முகப்பொலிவு மாறிற்று. இந்நிலையை அடைந்த சுந்தர சூளாமணி, சரி நீ போ வரச்

சொல்லுகிறேனென்று மொழிந்து தாயை அனுப்பிவிட்டுத் தன் நாயகன்பால் வந்து, எனதாருயிர்த் துரையே! தங்களை அரண்மனைக்கு அழைத்துப்போக வண்டி வந்திருக்கிறதாம், நாழிகை இருபத்தைந்தாகி விட்டதாம். நான் றங்களை எப்படிப் பிரிந்திருப்பேனென்று அரசகுமரன் மேல் விழுந்து, அவனை கட்டிப்பிடித்துக்கொண்டு வருந்தினாள். அவளுடைய கண்களினின்றும் நீர் பொழிந்தது. அக்கண்ணீர் அரசகுமரனுடைய மார்பின்மீது பெருகி வழிந்தோடிற்று. சுந்தர சூளாமணியின் பிரிதற்றுக்கத்தைக் கண்ட அரசகுமரன், இனியபல மொழிகளால் அவள் துக்கத்தை மாற்றி, பெண்ணே! நான் அரண்மனைக்குப் போய் நாளை சூரியன் அஸ்தமித்தவுடன் வந்து சேருகிறேன். சிறிதுங் கவலைப்படாதே யென்று கூறினான். அரசகுமரன் கூறியதுணர்ந்த சுந்தரசூளாமணி அவன் முகத்தைப் பார்த்து, என் மனத்தை இருப்பிடமாகக்கொண்டு அதன்கண் வீற்றிருக்குங் காதல! தாங்கள் வருமளவுந் தங்களைப் போற் பார்த்துக்கொண்டிருப்பதற்கும், தாங்கள் என்னை மனப்பூர்வமாக மணந்துகொண்டதற்கும் தாங்கள் பூண்டுள்ள ஓர் அணியை, அடையாளமாக எனக்களித்தல் வேண்டுமென மழலை மொழிததும்பக் கூறியிரந்தாள். சுந்தரசூளாமணியின் வாய்மொழியைச் செவியேற்ற அரசகுமரன், பெண்ணே! இந்தவெண்ணம் எனக்கு முன்பேயுண்டு. ஆயினும், உன்னுடைய லீலா விநோதங்களில் ஈடுபட்டிருந்ததால் மறந்துவிட்டேன். நீ, இந்தச் சந்தர்ப்பத்தில் ஞாபகப்படுத்தினதற்கு உன்னை மெச்சிக்கொள்ளுகிறேன். முன்னமேயே நீயும் நானும் வேறல்லவென்று கூறியுள்ளோன். உலகத்தில் ஆணும்

பெண்ணும் செய்துகொள்ளும் மணம் எட்டுவகைப்படும். அவ்வெட்டனுள், காந்தர்வ மணம்மென்பதும் ஒன்று. பருவமடைந்த ஆடவனும், பருவமடைந்த பெண்ணும் ஒருவரையொருவர் தனியிடத்துக்கண்டு காதலித்துக்கூடி மனமொத்து வாழ்வதே காந்தர்வ மணமாகும். இப்போது நம்மிருவருக்குள்ளும் நடைபெற்றது காந்தர்வ மணமேயாகும். நாம் இம்மணத்தைச் செய்துகொண்ட தற்கறிகுறியாக, நாமிருவரும் அணிந்துகொண்டிருக்கும் மோதிரங்களை மாற்றியணிந்து கொள்ளவேண்டும் என்று கூறித், தன் வலதுகைப் பவுத்திர விரலில் அணிந்துள்ளதும், மத்தியில் உயர்ந்த இந்திரநீல ரத்தினமும், சுற்றிலும் ஒன்பது உயர்ந்த வயிர ரத்தினங்களையும் பதித்துச் செய்யப்பட்டதுமான மூவாயிரம் வராகனுக்கு மேல் விலை மதிப்புள்ள இரத்தின மோதிரத்தைக் கழற்றிச் சுந்தர சூளாமணியின் இடதுகைப் பவுத்திர விரலில் மாட்டினன். சுந்தர சூளாமணியும், தனது இடதுகைப் பவுத்திர விரலில் அணிந்துள்ளதும், மத்தியில் வயிர ரத்தினமும், சுற்றிலும் ஒன்பது மாணிக்க ரத்தினமும் பதித்துச்செய்யப்பட்டதுமான நூறு வராகன் மதிப்புள்ள இரத்தின மோதிரத்தைக் கழற்றி அரசகுமாரனுடைய வலதுகைப் பவுத்திர விரலில் மாட்டினள். இவ்வாறு இருவரும் மோதிரமாற்றி மணஞ்செய்துகொண்ட காலத்து, பங்கசம் மீண்டும் சுந்தரசூளாமணியைக் கூப்பிட்டாள். பங்கசம் அழைப்பதையறிந்த அரசகுமாரன், பெண்ணே! கவலைப்படாதிரு, நான் போய் வருகிறேனென்று கூறிச் சுந்தர சூளாமணியைக் கட்டியணைத்து முத்தமிட்டுத் தன்னுடைகளைத் திருத்திக்கொண்டு புறப்பட்டான்.

சுந்தர சூளாமணியும் அரசகுமாரனைப் பின்றொடர்ந்து வந்தாள். சுந்தரசூளாமணியின் உருவத்தைத் தன்மனத்திற் பிரதிட்டை செய்துகொண்டு, அவளைப் பிரிந்துவந்த அரசகுமரன், வீட்டின் முன்முகப்புவாயிற்படியின்கண் வந்ததும், துங்கன் ஒருபுறத்தும், பங்கசம் மற்றொருபுறத்தும் நின்று அரசகுமாரனை நோக்கி அஞ்சலிசெய்து வணங்கினார்கள். அரசகுமரன், தன்பின்வந்த சுந்தரசூளாமணியை நில்லென்று சொல்லி நிறுத்தி, விரைந்து வெளியில் வந்து வண்டியை நெருங்கினான். துங்கன் வண்டியின் கதவைத் திறந்தான். அரசகுமரன் வண்டியிலேறி யமர்ந்தான். துங்கன் கதவைச் சாத்திவிட்டு வண்டி யோட்டியுடன் ஏறியுட்கார்ந்ததும் வண்டி புறப்பட்டு வேகமாகச்சென்று அரசகுமரன் தாசி வீட்டிற்குப் போவதற்கு எந்த விடத்தில் வண்டியிலேறினானோ; அந்த விடத்தில் வந்து நின்றது. துங்கன் வேகமாக இறங்கிக் கதவைத் திறந்தான். கதவு திறக்கப்பட்டதும், அரசகுமரன் கீழிறங்கினான். கீழிறங்கிய அவனை, அங்கு நின்ற சுகுமாரன் கையைப் பிடித்துக் குலுக்கி வரவேற்றான். அரசகுமரன் இறங்கியவுடன் வண்டி இன்னபக்கந்தான் சென்றதென்று தெரியாமற் பறந்து விட்டது. அரசகுமரன் தன்னை வரவேற்ற சுகுமாரனை ஆலிங்கனஞ் செய்து, எனதுயிர்த்துணைவ! பூர்வ ஜென்மத்தில் நான் செய்துள்ள புண்ணிய விசேடமே, உன்னை எனக்குத் துணைவனாக அளித்திருக்கிறது. என்னை இன்றுபோல் என்றுங் கைவிடாது காப்பாற்றவேண்டுமென்றான். சுகுமாரன், அரசகுமரன் கூறிய அவ்வார்த்தையைக் கேட்டு மகிழ்ந்து, அரசகுமாரனை அழைத்துக் கொண்டு அரண்மனைக்கு வந்து சேர்ந்து, அரசே! தாங்கள்

நித்திரைக்குச் செல்லுங்கள், நான் நாளைப்பகல் இருபது கடிகைக்குமேல் வருகிறேனென்று கூறி விடைபெற்றுத் துங்கனுடன் தன் மாளிகையின் மேன்மாடத்தை யடைந்து துங்கனையும் அங்கு படுத்துக்கொள்ளச் சொல்லித் தானும் படுத்து நித்திரை செய்தான். அரசகுமாரனும் அரண் மனையில் உல்லாசமாக நித்திரை செய்தான். அரச குமரனைப் பிரிந்த சுந்தர சூளாமணியுந் தன்றாயுடன் நித்திரை செய்தாள். இவ்வாறு இரவிற் கண்விழித்த யாவரும் நித்திரை செய்தார்கள்.

## ஓவியப்புலவன் படம் வரைந்து கொண்டு வருதல்.

மறுதினம் பகல் பத்துநாழிகையளவில் உலக காவல னை விக்கிரம சோழன் தன்னுடைய அத்தாணி மண்ட பத்தை யடைந்து சிற்றரசர்கள், மந்திரிகள், பிரதானிகள், சேனாதிபதிகள், வித்வான்கள், சோதிடர்கள் முதலிய பலருஞ்சூழ இரத்தின சிங்காதனத்தேறிக் கொலு வீற் றிருந்தான். பாண்டிநாட்டுப் பழம்பதியான திருவால வாய்த் திருநகரத்தினின்றும் போந்த பரத சாஸ்திரவிற் பன்னியான கோமளவல்லி யென்னும் மாது, பக்கவாத்திய மொலிக்கப் பரதசாஸ்திர முறைப்படி அபிநயம் பிடித்து நடனஞ்செய்து கொண்டிருந்தாள். அரசனும், சபையி லுள்ள சிற்றரசர் முதலான பலரும் அம்மாதின் நடனத்தில் கண்களையும், மனதையுஞ் செலுத்தி வியந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் ஓவியப்புல வன், தன் புலமையின் சாமர்த்திய முழுதையுங் காட்டி வரைந்த சிற்றரசனுடைய படத்தைப் பட்டாடையிற் பொதிந்தெடுத்துக்கொண்டு வந்து சேர்ந்தான். ஓவியப்

புலவன் வந்ததை அரசன் முதல் யாருங் கவனிக்கவில்லை. ஓவியப்புலவனுங் கோமளவல்லியின் நடனத்தில் ஈடுபட்டு அந்நடனத்தைப் பார்த்துக்கொண்டு நின்றான். கோமளவல்லியின் நடனம் ஒரு முகூர்த்தகாலம் நடைபெற்றது. நடனமுடிவிற் கோமளவல்லியை அரசன் வாயாரப்புகழ்ந்து உயர்ந்த ஆடையாபரணாதி சம்பாவனைகளைச் செய்து சிலகாலம் தன்னகரிற் றங்கியிருக்கவேண்டுமென்றும், இன்னும் பல தினங்கள் நடனத்தைப் பார்க்கவேண்டுமென்றும் புகன்று, அவளுக்கோர் சாகையளித்து அங்கு அனுப்பிவைத்தான்.

நடனமாது சென்றபின்னர், ஓவியப்புலவன் பட்டு வஸ்திரப் பொதியினின்றும் சிற்றரசனுடைய படத்தை வெளியிலெடுத்துத் தாங்கிய கரத்தனாய், அரசன் முன் சென்று கண்டு வணங்கி அரசனது கரத்தில் படத்தைக் கொடுத்தான். சிற்றரசன் படத்தைப்பெற்ற அரசன் அப்படத்தைப் பார்த்தான். தன் குமரனை நேரிற் பார்த்தது போலவே; சிற்றரசனுருவஞ் சிறிது மாறுபாடின்றிக் காணப்பட்டது. படத்தைப் பார்த்துப் பெரிது மகிழ்ந்த அரசன், அப்படத்தைச் சபையிற் கூடியிருந்த அரசர், அமைச்சர் முதலிய பலருக்குங் காட்டினான். படத்தைப் பார்த்த பலரும் மகிழ்ந்து ஓவியப்புலவன் சாமர்த்தியத்தை வியந்து பாராட்டினார்கள். தன் குமரன் படத்தைப் பார்த்து மிக்க மகிழ்வடைந்த பார்த்திபன், அச்சித்திரப் புலவனுக்கு ஆயிரம் வராகன் தங்கமும், நூறு வராகனுக்கு மேற்பட்ட விலை மதிப்புள்ள வஸ்திரங்களையுஞ் சம்மானஞ் செய்து அனுப்பிவைத்தான். சம்மானம் பெற்ற ஓவியப் புலவன் உயர்ந்த உவகையுடன் றனது வாசஸ்தானத்தை

யடைந்தான். அரசன் அப்படத்தைத் தனது முதன் மந்திரியான சற்கீர்த்தியினிடம் கொடுத்துப் பாதுகாப்பில் வைக்கும்படி உத்தரவிட்டுக் கட்டியம் முதலிய அணுக்கத் தொண்டர்கள் புடைசூழ்ந்து வரச் சிம்மாசனத்தை விட்டிறங்கிப் பகற் போஜனஞ் செய்தற்குப் போஜனசாலைக்குச் சென்றான். அரசன் சென்றபின்னர், மந்திரி முதலிய பலரும் தத்தம் இருப்பிடத்தை யடைந்தார்கள். கொலு மண்டபத்தின் கபாடங்கள் சாத்திப் பூட்டப்பட்டன.

சுகுமாரன் இராஜமார்த்தாண்டனைச் சந்தித்தல்.

அரசகுமரன் வழக்கம்போல் அதிகாலையில் நித்திரை விட்டெழாது, அன்று நெடுநேரந் தூங்கிப் பகற்கடிகை பதினொன்றளவில் நித்திரை விட்டெழுந்தான். எழுந்த பின்னர், அவசிய கருமங்கள், ஸ்நானம், அநுட்டானம், ஜெப முதலிய காலை நியதிகளைச் செய்து முடித்தான். பகல் பதினைந்து நாழிகையாயிற்று. அதுபோது இள மன்னன் அங்குக் காத்துநின்ற பரிசாரகனை நோக்கிப் பகற் போசனத்தைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டான். கட்டளையின்படி போசனம் வந்து சேர்ந்தது. அதனை யருந்திக் கைகால் சுத்தஞ்செய்து சிங்கார மண்டபத்தை யடைந்து உயர்ந்த வோராசனத்து வீற்றிருந்தான். பக்கத்தில் நின்று அடைப்பக்காரன் தாம்பூலச் சுருளை மடித்து மடித்துக் கொடுத்துக்கொண்டிருக்க, அதனைவாங்கிவாங்கி யுண்டுகொண்டிருந்த மன்னன் புதல்வனுக்கு, அத்தாம்பூலம் சுந்தரசூளாமணி கொடுத்த தாம்பூலத்தைப்போல் அவ்வளவுமணங்குணம் அமைந்ததாகக் காணப்படவில்லை. சரி போதுமென்று தலையை யசைத்தான். அடைப்பக்

காரன் றன் பையை யெடுத்துக்கொண்டு சென்றான். அரசகுமாரனிருந்த அவ்விடத்தில் இரண்டொரு ஏவற் காரரையன்றி வேறொருவருமில்லை. மன்னன் மைந்தன் தானிருந்த ஆசனத்தை விட்டெழுந்து பக்கத்துள்ள ஒரு சோபாவிற் போய்ப் படுத்துக்கொண்டு பங்கசத்து வீட்டின் அமைப்பையும், அவ்வீட்டின் அலங்காரத்தையும், சுந்தரசூளாமணியின் அழகையும், அவள் தன்மீது கொண்டுள்ள காதலையும், அவள் புரிந்த கலவி விசேஷங்களையும், அவள்பால் தானனுபவித்த சுகத்தையும், அங்கு தனக்கு நடைபெற்ற உபசாரங்களையும், பட்சணங்களின் சுவையையும், நினைந்து நினைந்து ஆனந்தமுற்றான். தன் னுயிர்த்துணைவனை மந்திரி குமாரனுக்கு இவையனைத்தையும் அறிவிக்கவேண்டுமென்று கருதினான். இன்று சூரியன் அஸ்தமித்ததுமே பங்கசத்தின் வீட்டுக்குப் போக வேண்டுமென்றுந் தீர்மானித்துக் கொண்டான். இராசகுமாரன் இவ்வாறு சிந்தித்துக்கொண்டிருக்கும் போது சுகுமாரன் வந்து சேர்ந்தான். சுகுமாரன் வரக்கண்ட இளங்கோ எழுந்து அவனைக் கட்டித்தழுவிச் சோபாவில் தன்னுடன் வைத்துக்கொண்டு எனதாருயிர் நண்ப! நீ வருதற்கு ஏன் இவ்வளவு காலதாமதமென்றான்? அதை யுணர்ந்த சுகுமாரன், தங்களிடம் அறிவித்தபடியே வந்து விட்டேன். இப்போது கடிகை இருபதுதான் ஆகிறதென்றான். அதனைக்கேட்ட அரசகுமாரன் சுகுமாரனை நோக்கி, நண்ப! சுந்தர சூளாமணியும், அவள் தாய் பங்கசமும் சிறந்த அழகும் குணமும் பொருந்தியவர்கள். அவர்கள் என் வருகையை யுத்தேசித்துச் செய்திருந்த ஏற்பாடுகள் போற்றத் தக்கவை. நான் உண்ணுதற்குத் தேவாமிர்

தத்தை யொத்த சுவை பொருந்திய பட்சணங்கள் பல வற்றையும் உயர்குலப் பரிசாரகர்களைக் கொண்டு செய்து வைத்திருந்ததுடன், மிக்க மதுரம் பொருந்தப் பாலையுங் காய்ச்சி வைத்திருந்தாள். பங்கசம் செய்த உபசாரங் களை நினைக்க நினைக்க என் மனம் குதூகலத்தை யடை கிறது. அவள் தயாரித்துவைத்திருந்த கலவைச்சந்தனம், தாம்பூலவகைகள் இவற்றின் சிறப்பை யென்னென்று சொல்வது. பங்கசத்தின் செயல்தான் இப்படியென்றால்; அவள்பெண் சுந்தரசூளாமணி என்மீது கொண்டுள்ள மோகத்தையும், அவள்தந்த போகத்தையும், அன்பையும், ஆதரவையும் எவ்வாறு எடுத்துச்சொல்ல முடியும். அவளை வித்தியாதரவுலகத்துப் பெண்ணென்று சொல்லாது, மானிடப் பெண்ணென்று எப்படிச் சொல்வது. பங்கசத்தின் வீட்டின் அமைப்பும், அழகும், மேன்மாடியி லுள்ள சயன அறையின் அலங்காரமும், சோபா, கட்டில் முதலியவற்றின் அழகும், நிலா முற்றமும், அதன்கண் ணுள்ள பளிங்குமேடையின் வனப்பும், சுந்தரசூளாமணி புரிந்த கலவி நயங்களும், அவளுடைய இனியமொழிகளும் எனதுள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டன. சுந்தர சூளாமணி யென்னும் அவ்விளநலக்காரிகையை நான் நேற் றிரவே காந்தர்வமணம் செய்துகொண்டேன். மணத்தின் அடையாளமாகச் சுந்தரசூளாமணியும் நானும் மோதிரம் மாற்றிக்கொண்டோம். அச்சுந்தரநங்கை, என்னுள்ளத்தை இருப்பிடமாகக்கொண்டு அதன்கண் வீற்றிருக்கிறாள். நானும், அவளுள்ளத்தை இருப்பிடமாகக்கொண்டு வீற் றிருக்கின்றேன். நான் அவளிடம் அரண்மனைக்குப்போய் வருகின்றேனென்று கூறியதும், அவளடைந்த துன்பத்

துக்கோரவில்லை. எனக்கும் அவளைவிட்டுப் பிரிதல் துன் பமாகவே யிருந்தது. உயிரினுமினிய உறுபெருந்துணைவ னுனவுன் சொல்லை மறுத்தற்கஞ்சி, நயவசனங்களால் சுந்தர சூளாமணியின் றுயறமாற அவளைத் தேற்றி, இன்று ஆதித்தன் அஸ்தமித்தவுடன் வந்துவிடுவதாகக்கூறி வந் திருக்கிறேன். இனிநான், சுந்தரசூளாமணியைப் பிரிந்து ஒருநிமிஷ நேரங்கூட இருக்கமுடியாது. ஆதித்தன் அஸ்த மித்தவுடன் நான் அவள்பாற்போய்ச் சேரவேண்டும். அதற்கான காரியத்தை இப்போதே நீ செய்தல்வேண்டும். இஃதன்றி இன்னென்றையும் நான் கூறுகின்றேன். அதா வது, என்னுடைய இச்செயல் என்றந்தையார் திருச்செவி க்கு விரைவில் எட்டிவிடுமென்று நினைக்கிறேன். அவ்வாறு எட்டுமேயானுல், அவர்கோபம் உன்னைத்தாக்கவுங்கூடும். ஆதலால், என்றந்தையார் கோபம் உன்னைத்தாக்காவண் ணம், நீயே என்செயலை என் தந்தையாரிடம் சாதுரியமாக அறிவித்துவிடுதல் நலமென்று கருதுகின்றேன். அவ்வாறு அறிவிப்பதும், இன்றிரவு நான் சுந்தரசூளாமணி வீட்டிற் குப் போனபின்னரே அறிவித்தல் வேண்டும். அதற்கு முன் அறிவித்தால், நான் சுந்தரசூளாமணி வீட்டிற்குச் செல்லுதற்குத் தடையேற்பட்டாலும் ஏற்படலாம். தடை யேற்பட்டால், சுந்தரசூளாமணி இறந்துவிடுவாள். இதை நீ நிச்சயமாக நம்பு. அவளிறந்துவிடுவாளேயானுல், பின் நான் உயிருடனிருப்பேனென்று நீ எண்ணுகிருயா? என் னுயிர்க்காதலி மாய்ந்தால், நான் எந்தவிதத்தாலாயினும் உயிரைப்போக்கிக்கொள்வேன். இதனை நீ உறுதியாகக் கடைப்பிடித்துக்கொள்ளென்று சொல்லிமுடித்தான்.

அரசகுமரன் கூறிவந்த தாசிவீட்டின் விருத்தாந்தங்கள் ஒவ்வொன்றையுங் கேட்டுவந்த மந்திரிகுமரன் மனத்தில் ஆச்சரியமும், மகிழ்ச்சியும், துக்கமும் மாறிமாறி யுண்டானதால்; அவன் முகத்தோற்றமும் ஒருதன்மைத்தாகவில்லாமல் அடிக்கடி மாற்றமடைந்துகொண்டே இருந்தது. அரசகுமானுடைய முடிவான வார்த்தையைக்கேட்ட சுகுமாரன், இனி அரசகுமரனைச் சுந்தரசூளாமணியின் மோகவலையினின்றும் விடுவிக்க முடியாதென்றும், அரசகுமரன் விஷயத்தைப் பேரரசனுக்குத் தெரிவித்துவிட வேண்டுமென்றும் உறுதிசெய்துகொண்டான். இவ்வாறு உறுதிசெய்துகொண்ட சுகுமாரன் இளவேந்தை யினிது நோக்கி, எனதிரு நேத்திரமன்ன குமாரமன்ன! தாங்கள் எந்தவிஷயத்திலும் என்சொல்லை அநுசரித்தே நடந்துவந்தீர்கள். சுந்தரசூளாமணி விஷயத்தில் மட்டும், நான் சொல்லிய வனைத்தையும் புறம்பாக்கி விட்டீர்கள், இஃதுஊழின்பெருவலிபோலும். இதுபோது கடிகை இருபத்தாறுகிறது. தங்கள் மனவிருப்பப்படியே சுந்தர்சூளாமணி வீட்டிற்குத் தங்களை அனுப்பிவைத்தற்கு இரவி அஸ்தமித்தவுடன் இங்குவருகின்றேன். தாங்கள் போசனமுதலியவற்றை முடித்துக்கொண்டு தயாராக விருங்களென்று சொல்லி, இளமன்னன்பால் விடைபெற்றுச் சுகுமாரன் தன்மாளிகையையடைந்து; மேன்மாடத்துள்ள தன்னறையைச் சார்ந்தோராசனத்தமர்ந்தான். அவ்வாறமர்ந்த சிறிது நேரத்தில் துங்கன் வந்து வணங்கினான். சுகுமாரன், தன்னை வணங்கிய துங்கனைநோக்கி, துங்கா! இன்றிரவும் அரசகுமரன் நேற்றிரவு சென்ற விடத்துக்குச் செல்வதால், நீயும் உடன் போதல் வேண்டும். நேற்றுக் கொண்டுபோனதில் மீத

முள்ள தொள்ளாயிரம் வராகனுடனும், உள்ளாயுதத் தடிக் கம்புடனும் சூரியன் அஸ்தமித்ததும் நீ இங்கு தயாரி லிருக்கவேண்டுமென்று கட்டளையிட்டான். மந்திரிகுமரன் கட்டளையைப்பெற்ற துங்கன், மீண்டும் அவனை வணங்கிச் சென்றான்.

சூரியன் அஸ்தமித்தது. செவ்வானம் மாறுவதன் முன் துங்கன் தயாராக வந்துசேர்ந்தான். சுகுமாரன் சாதா ரணவுடையுடன் துங்கன் பின்தொடர்ந்துவர அரண் மனையை யடைந்தான். இராசமார்த்தாண்டன் போச னத்தை முடித்துக்கொண்டு தயாராகவிருந்தான். சுகு மாரன் வந்து சேர்ந்ததும், அவனைக்கண்ட இராஜமார்த் தாண்டன், நண்ப! புறப்படலாமாவென்றான். அதனைக் கேட்ட சுகுமாரன், புறப்படுவதற்குத் தடையென்னவென் றான். அரசகுமாரன் இருக்கை விட்டெழுந்தான். இரவு கடிகை இரண்டாயிற்று. சுகுமாரன்வாயில்காவலனைநோக்கி அரண்மனையைப் பத்திரமாகப் பாதுகாத்துக்கொண்டிருக் கும்படி கட்டளையிட்டுத், துங்கன் பின்றொடர்ந்துவர அரச குமாரனோடும் புறப்பட்டு அரண்மனையைக்கடந்து வீதியை யடைந்துமுதனாளிரவு குதிரைவண்டியிலேறிய விடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கு குதிரைவண்டி முன்றினம் போலவே நின்று கொண்டிருந்தது. சுகுமாரன், அரச குமரனைப் பார்த்து நண்ப! இதில் ஏறிக்கொண்டு தாங்கள் குறித்தவிடத்துக்குப் போய் வருகவென்று கூறினான். அரசகுமாரனும், துங்கனும் முன்றினம்போல வண்டியிலே றிக் கொண்டார்கள். அரசகுமரன் ஏறியதும் வண்டி புறப் பட்டுத் தாசி பங்கசத்தின் வீட்டுவாசலிற் போய் நின்றது.

வண்டி நின்றதும், துங்கன் இறங்கி வண்டியின் கதவைத் திறந்தான். அரசகுமரன், வண்டியினின்றும் இறங்கிப் பங்கசத்தின் வீட்டினுள் துங்கன் பின்றொடர்ந்து வரச் சென்றான். அரசகுமரன் இறங்கியதும் வண்டிபுறப்பட்டுச் சென்றுவிட்டது. பங்கசத்தின் வீட்டையடைந்த மன்னன் புதல்வனுக்கு, முன்றினத்தைவிடப் பதின்மடங்கு உபசாரம் அன்று நடைபெற்றது. உபசாரத்தைப்பெற்ற அரசகுமரன், சுந்தரசூளாமணியுடன் மேன்மாடத்துப் பளிங்குமேடையை அடைந்து, இந்திரபோகமும் இதற்கிணையில்லை யென்று சொல்லும் வண்ணம் கலவிப்போர் புரிந்து மகிழ்ந்திருந்தான். துங்கன், பங்கசத்துடன் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்து பின்னர் முகப்புத் திண்ணையிற் படுத்து நித்திரைசெய்தான். பங்கசம், ஒருவேளை தன்மகள் தன்னைக்கூப்பிடக் கூடுமென்றுகருதி விலங்கினை யொத்து நித்திரை செய்துகொண்டிருந்தாள். இரவுஇருபத்தைந்து கடிகையளவிற் புறப்பட்டு அரண்மனைக்கு வந்து சேர வேண்டுமென்று, இன்று சுகுமாரன் அறிவிக்காததைக் குறித்து அரசகுமரன் பெரிதும் மகிழ்ந்திருந்தான்.

## சோழ மண்டலாதிபதியைச் சுகுமாரன் சந்தித்தல்.

பங்கசத்தின் வீட்டிற்கு இளம் பார்த்திபன் சென்ற பின்னர், சுகுமாரன் றன்மாளிகையை யடைந்து உணவருந்தி மேன் மாடத்துள்ள தன்னறையைச் சார்ந்து நிம்மதியாகப் படுத்து நித்திரை செய்தான். நிம்மதியாக நித்திரை செய்த அவன், புலரிக் காலையிலெழுந்து அவசிய கருமங்களை முடித்து ஸ்நானஞ் செய்து, சந்தியாவந்தனாதி கருமங்களைப் புரிந்து காலை யுணவருந்தினான். உணவருந்திமுடிந்த

பின்னர் தக்கவுடைகளைப் புனைந்து சோழ மகாராஜனைக் காணும் ஆர்வத்துடன் தனது வீட்டை விட்டு வெளியிற் புறப்பட்டான். அது காலை கடிகை ஏழாயிற்று. புறப்பட்ட சுகுமாரன் வேறோரிடங்களுக்குஞ் செல்லாமல் நேரே அரண்மனைக்குச் சென்றான். அரண்மனையை யடைந்த சுகுமாரன், அவ்வரண்மனையுள் அரசன் அதுபோது வசிக்குமிடத்தை யறிந்து அங்குச்சென்று, அவ்விடத்தின் வாயில்காப்பானைக் கண்டான். வாயில்காப்போன் மந்திரி குமரனை நோக்கி அஞ்சலிசெய்தான். தனக்கு அஞ்சலிசெய்த, அவ்வாயில் காப்போனைச் சுகுமாரன் நோக்கி, கடை காவல! இது போது நமது அரசன் சமயம் யாதென்று வினவினான்? அதனையறிந்த வாயில்காவலன் சுகுமாரனை நோக்கி, எங்கள் மந்திரியின் சுந்தரப்புதல்வ! மகாராஜா சிவபூஜையை முடித்துக் காலைச்சிற்றுண்டி யருந்திவிட்டுச் சந்தோஷமாக இருக்கின்றார்கள். தாங்கள் பார்க்கவேண்டுமேயானால் இதுவே நல்லசமயம். இதுபோன்ற மற்றோர் சமயம் வாய்ப்பதரிதென்றான். வாயில்காப்பாளன் வாயுரைதேர்ந்த சுகுமாரன், மகாராஜாவைப் பார்க்க தான் வந்திருப்பதாக அரசற்கறிவிக்கும்படி அவனிடந்தெரிவித்தான். கடைகாவலன் உள்ளேசென்று அரசனைக்கண்டு அஞ்சலிசெய்து வணங்கி வாய்பொத்தி வளைந்து நின்று, முதன்மந்திரி குமரன் சுகுமாரன், மகாராஜாவைப் பார்க்கவேண்டுமென்று சொல்லி வாசற்படியில் வந்திருக்கின்றாரென்றான். வாயில் காப்பவன் வாயுரை தேர்ந்த மன்னன், சீக்கிரஞ்சென்று அனுப்பிவையென்று அவனுக்குக் கட்டளையிட்டான். அரசன் உத்தரவைப்பெற்ற வாயில்காப்போன், விரைந்து வெளியில்வந்து சுகுமாரனைப் பார்த்துத், தங்களைவரும்படி

உத்தரவாகி யிருக்கிறதென்றான். வாயில்காப்பான் உரை தேர்ந்த சுகுமாரன், உள்ளேசென்று மன்னனைக்கண்டு பூமியில் விழுந்து நமஸ்கரித்து எழுந்து கைகளைக்கட்டிக் கொண்டு நின்றான். அரசன் புன்னகைபொருந்திய முகத்துடன் இவ்வாறுநின்ற தனது முதன்மந்திரி குமாரனை நோக்கி, சுகுமாரா! இப்படி உட்காரென்றான். அரசன் கட்டளைப்படியே சுகுமாரன் மன்னன் பக்கத்தில் உட்கார்ந்தான். உட்கார்ந்த சுகுமாரனை மீண்டும் மன்னன்பார்த்து, சுகுமாரா! சௌக்கியமாக இருக்கின்றாயா? என்னைக்காண வந்த காரணம் என்ன? என்றான். அரசனது வினுமொழிகளைக்கேட்ட சுகுமாரன் அரசனைநோக்கி, வையகம்போற்று மன்னர் மன்ன! வெற்றிவீர! வீரப்பிரதாப!! தாங்கள் அன்பையும், ஆதரவையும்பெற்றுவாழும் அடியேன் பூரண சௌக்கியத்துடன் இருந்து வருகின்றேன். மகாராஜாவின் சமுகத்தில் மிகவும் முக்கியமானதோர் விஷயத்தை அறிவிப்பான் வந்தேன். சீர்த்திமிக்க தாங்கள், அதனைச் சிறிதுஞ்சினமின்றித் திருச்செவியேற்றுச் செய்யவேண்டிய காரியங்களைத் தீர்க்காலோசனையுடன் செய்யவேண்டுமென்று பக்திவிநயத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேனென்றான். அரசன் சுகுமாரனது சாதுரிய வசனங்களைகேட்டு மிகமகிழ்ந்து, சுகுமாரா! சொல்லவேண்டிய விஷயத்தைச் சும்மாசொல். கோபித்துக்கொள்ளவில்லை யென்றான்.

அரசன் வாய்மொழிதேர்ந்த அமைச்சன் புத்திரன் அரசனைநோக்கி, செங்கோல்தாங்கிய பங்கயக்கரத்துப் பார்த்திப! இளவரசர் இருதினங்களாகக் கூடாவொழுக்கத்திற் பிரவேசித்து விட்டார். அதனை மாற்றற்குறிய சன்

மார்க்கப் போதனைகளை அடியேன் இதமுடன் கூறினேன். நான் கூறியவனைத்தும் ஆற்றிற்கரைத்த புளியாயிற்று. கடைசியில், நான் அவர் சொல்லுக் கிணங்கி அவருக்கு உதவிசெய்யவேண்டி வந்தது. நான் அவர்சொல்லும் மார்க்கத்திற்கு உடன்பட்டு உதவிசெய்யாவிடில், உயிரை விட்டு விடுவதாக உறுதிகூறினார். அதன்பிறகுதான் நான் இணங்கினேன். தாங்கள் கண்டித்தோ, அல்லது வற்புறுத்தியோ அவரை யம்மார்க்கத்திற்குச் செல்லாது மாற்றிவிடலாமென்று எட்டுணையுங் கருதக்கூடாது. இளவரசர் மனம், செல்லுந் தீயமார்க்கத்தை விட்டுச் சன்மார்க்கத்திற் செல்லும்படி யுக்திசெய்து மாற்ற வேண்டுமென்றான்.

சுகுமாரன் சொல்லிவந்த வார்த்தைகளைக் கேட்ட அரசன் முகப்பொலிவு சிறிது மாறிற்று. மந்திரிமகன் கூறியதை யுணர்ந்த மன்னன் சுகுமாரனை நோக்கி, சுகுமாரா! நீ சொல்லுவதொன்றும் விளங்கவில்லையே. என்மைந்தன் கூடாவொழுக்கத்திற் பிரவேசித்திருக்கின்றானென்கின்றாய். கூடாவொழுக்கமென்பது யாது? அதனை விளங்கும்படி சொல்லென்றான்.

அரசனுரையறிந்த சுகுமாரன் அவ்வேந்தை நோக்கி, வெற்றிமிக்க வியாக்கிரத்துவஜ] கலைகண் முற்றுங் கரிசறக் கற்ற தங்கட்குத் தெரியாததொன்றில்லை. சிற்றரசர் என்று நான்கூறியதால், தங்கள் மனஞ்சிறிது பேதமுற்று அடியேன் கூறியதை நுணுகியறிந்து கொள்ளவில்லை. ஆயினும், அடியேன் விளக்கமாகக் கூறுவேன். சமுகத்தில் உற்றறிந்து கொள்ளல் வேண்டும். ஒழுக்கமானது, கூடும் ஒழுக்கம், கூடாவொழுக்கமென இருவகைப்படும். கூடும்

ஒழுக்கம் எதெதுவோ, அதெல்லாஞ் சன்மார்க்கம். கூடா வொழுக்கம் எதெதுவோ, அதெல்லாந் துன்மார்க்கம். கூடுதல் என்றால், ஒன்றுடன் சேருதலென்று பொருள்படும். அவ்வொன்று என்னவென்று இதுபோழ்து ஆராய்தல் வேண்டும். சிற்றரசருக்குத் தற்பொழுது வயது பதினெட்டுப்பூர்த்தியாகிப் பத்தொன்பது நடைபெறுகின்றது கௌமாரப்பருவத்தைப் பெற்ற இளவரசர் இதுகாலம், குலத்தாலும் குணத்தாலுமொத்த ஓரிளநல மங்கையுடன் கூடி வாழ்தல் வேண்டும். அவ்வாழ்க்கையை அவரடையும்படி மகாராஜா செய்துவைக்காது பராமுகமாகவிருந்து விட்டதால், சிற்றரசர் ஓரிளநல மங்கையைக் காதலித்து இரு தினங்களாக அவளுடன் கூடிவாழ்கிறார். நீதிமலிந்த தங்கள் அரசாட்சியில் மாதர்களெல்லாரும் பதிவிரதா தர்மிகளாக விருப்பதால்; சிற்றரசர் ஓர் தாசியைக்காதலித்து அவளுடன் கூடிவாழ்கிறார். இவ்வாறு சிற்றரசர் கூடிவாழும் வாழ்க்கையைக் கூடாவொழுக்கமென்று சொல்லாது வேறென்ன சொல்வது. சிற்றரசர் யாரேனுமோர் பதிவிரதா மாதரைக்காதலித்துச் சோழர் திருக்குலத்துக்கு என்றும் மாறாத பெருங்களங்கத்தை உண்டுபண்ணி விடாதபடி, தங்கள் குலத்து முதியோரும், தாங்களும் செய்துள்ள பெருந்தருமமே தடைசெய்திருக்கிறதென்று மகாராஜா மனதிற் கொள்ளவேண்டும். கௌமார பருவத்துக்காளையர் அழகிற் சிறந்த கன்னியைக் கண்டகாலத்து, அக்கன்னியைக் காதலிப்பது இயற்கையேயாகும். அதிலுந் திருமணத்தைப் பெறாதே சிற்றரசர் காதலித்தாரென்றால் அது வியப்பல்ல. காளைப்பருவத்தையுடைய ஒருவன், ஒரு கன்னியைக்கண்டு காதலிப்பானேயானால், அக்காதலை

மாற்றக்கருதுவோர், அக்காளைப்பருவத்தான் காதலுக்கிடமாயுள்ள அக்கன்னியைக்கொண்டோ, அல்லது அக்கன்னியை யொத்த மற்ருெரு கன்னியைக் கொண்டோ அவன் காதலை மாற்றலாமேயன்றி, மற்றவகையான் மாற்றலாமென்று கருதுவது யாதொருபிரயோசனத்தையுந் தராது. காதலித்த காளைப் பருவத்தன், தான் காதலித்த கன்னியையோ, அல்லது அவளையொத்த மற்ருெரு கன்னியையோ பெருனாயின்; அவன்காதல் நிமிஷத்துக்கு நிமிஷம் வளர்ந்து முறுகி அவனைக்கொன்றுவிடும். நமது நகர் வடக்கு இராஜவீதியிலுள்ள தாசி பங்கஜவல்லியின் புத்திரியான சுந்தரசூளாமணி மிகுந்த அழகும், குணமும் வாய்ந்தவள். அவளைத்தான் சிற்றரசர் காதலித்தார். இப்பொழுது அவளுடன்ருன் கூடிவாழ்கின்ருர். தாசி யென்னுஞ்சொல், இறைவனுக்குத் தொண்டுசெய்பவள் என்னும் பொருளைப் பெற்றுள்ளது. இறைவனென்னும் பெயர், கடவுளுக்கும் அக்கடவுளின் பிரதிநிதியாகவிருந்து உலகையாளும் அரசனுக்கும் உரியது. இப்பொழுது சுந்தரசூளாமணியென்னுந் தாசி, இறைவனுகிய இராஜமார்த்தாண்டனுக்குத் தொண்டு செய்து வருகின்ருள். இதனை நோக்கும்போது, சிற்றரசர் செயல் கூடுமொழுக்கமாகக் கொள்ளத் தக்கதாகவுங் காணப்படுகிறது. அடியேன், சிற்றரசருடைய காதற் பெருக்கத்தையும், புலப்பத்தையுங் கண்டு இனியுஞ்சும்மாவிருந்தால்; சிற்றரசரின் உயிர் அவரது உடலைவிட்டுப் பிரிந்துவிடுமென்ற துணிவுக்கு வந்தேன். இத்துணிவுக்கு வந்தபிறகே, சிற்றரசரைச் சுந்தரசூளாமணி வீட்டுக்கு அனுப்பிவைத்தேன். நான் அவ்வாறு அனுப்பிவைக்காவிட்டால்; சிற்றரசர் நிலையைக்கண்டு மகாராஜாவே அனுப்பி

வைக்க வேண்டிவரும். அவ்வாறு அனுப்பிவைப்பது மகாராஜாவுக்கு உரியகருமம் அன்றெனவும், அனுப்புமதனால் மகாராஜாவை உலகம் ஒருவிதமாக எண்ணநேரினும் நேரலாமெனவுங் கருதியே அடியேன் அனுப்பிவைக்க முற்பட்டேன். இப்போது உலகம், சிற்றரசர்மீதும், அவருக்குத் துணையாக நின்ற என்மீதுங் குறைகூறுமேயன்றி; மற்றவர் மீது குறைகூறாது. அப்படிக் கூறுவோரும், சிறுபிள்ளைத் தனமாக இக்காரியத்தைச் செய்துவிட்டார்களென்றே கூறுவர். இவ்வாறு கூறுவதால், சிறுபிள்ளைகளாகிய எங்களுக்கு யாதொரு குற்றமுமில்லை. மகாராஜா அவர்கள் சுந்தரசூளாமணி வீட்டுக்குச் சிற்றரசரைச் செல்லாது நிறுத்தல் வேண்டும். அவ்வாறு செய்தற்கு, சுந்தரசூளாமணியைவிட அழகமைந்த ஒருபெண்ணைச் சிற்றரசருக்கு மணஞ்செய்வித்து; அப்பெண்மணியுடன் அவரைக்கூடி வாழும்படி செய்வித்தல் வேண்டும். இக்காரியத்தையன்றி, வேறெக்காரியத்தைச் செய்தாலும் பிரயோசனத்தைத் தராதென்று உறுதியாகக் கருதுகின்றேன். இதுதான் சமுகத்தில் அடியேன் செய்துகொள்ளும் விண்ணப்பம். அடியேன், மனச்சாட்சிக்கு விரோதமாக யாதொரு குற்றமுஞ் செய்யவில்லை. அறிவிற் கடையேனாகிய நான், ஏதேனுங் குற்றஞ் செய்திருப்பதாகத் தங்கள் திருவுள்ளத்திற் றோன்றினாலும்; அக்குற்றத்தை மன்னித்து அடியேனைப் பாதுகாத்தருள வேண்டுமென்று கூறி, இருக்கைவிட்டெழுந்து மீண்டும் அரசனை நமஸ்கரித்து, அரசன் முன்னிலையிற் கைகளைக்கட்டிக்கொண்டு நின்றான்.

அரசன், தன் புத்திரன் தாசிகாந்தனுகிவிட்டானென்று மனக்கலக்க மடைந்தானேனும், சுகுமாரன் சொல்லிவந்த நீதிமார்க்கத்தை விட்டுத் தவறாத வார்த்தைகளையும், அவன் யுக்தியோடு சாமார்த்தியமாக நடந்து கொண்ட செயல்களையும் பெரிதும் நோக்கிமனமிகமகிழ்ந்து, தன்முன் கைகளைக்கட்டிக்கொண்டு நின்ற சுகுமாரனை நோக்கி, சுகுமாரா! நீ மிக்க புத்திசாலி. உன்னறிவும், செயலும் என்னை மகிழ்ச்சியிற்றிளைக்கச் செய்திருக்கிறது. நீ, நீண்டகாலம் ஆயுளுடன்வாழும்படி ஸ்ரீவிதிவிடங்கத்தியாகேசனை வந்திக்கின்றேன். நீ சென்றுவாவென்று உத்தரவு செய்தான். சுகுமாரன், அரசன் உத்தரவைப்பெற்று வெளியில் வரும்போது கடிகை பதினைந்தாயிற்று.

அரசன் மந்திராலோசனை செய்தல்.

சுகுமாரன் சென்றதும், அரசன் அறிக்கையாளனை அழைத்துவரும்படி வாயில் காவலனுக்கு உத்தரவு செய்தான். வாயில்காவலன் அறிக்கையாளனைக்கண்டு அரசன் உத்தரவை அவனிடம் அறிவித்தான். அரசனுத்தரவைப் பெற்ற அறிக்கையாளன் விரைந்துவந்து அரசனைக்கண்டு வணங்கி அவன் முன்னிலையில் அஞ்சலிசெய்து நின்றான். தன் முன்னின்ற அறிக்கையாளனை அரசன்நோக்கி, அடே! இன்றுபகல் இருபத்தைந்து நாழிகையளவில் மந்திரிகளனைவரும் மந்திராலோசனை மண்டபத்துக்கு வந்து சேரவேண்டுமென அறிவிப்பாயென்று கட்டளையிட்டான். அரசன் கட்டளையைப்பெற்ற அறிக்கையாளன் ஒவ்வொரு மந்திரிகளையுங் கண்டு அரசன் உத்தரவை யறிவித்தான். அரசன் பகற் போசனத்தை முடித்துக்கொண்டு இளைப்

பாறும் மண்டபத்தை யடைந்து அங்கோராசனத்தமர்ந்து அம்மண்டபத்து வாயில் காப்போனை அழைத்தான். வாயில் காப்போன் வந்து வணங்கி அரசன் முன்னிலையில் நின்றான். முன்னின்ற அவனை அரசன் நோக்கி, நீ சீக்கிரம் சென்று மந்திரா லோசனைச் சபையைத் திறந்து ஆசனங் களனைத்தையுஞ் செம்மை செய்து வைக்கவேண்டு மென்று அறிவித்து வாவெனக் கட்டளையிட்டான். அவ் வுத்தரவைப் பெற்ற வாயில் காப்போன், மந்திராலோசனைச் சபை வாயில் காப்போனைக்கண்டு அரசன் உத்தரவை அவன்பாலறிவித்தான். மந்திராலோசனைச் சபை வாயில் காவலன், அரசன் உத்தரவின்படியே பகல்இருபது கடிகை யளவில் மந்திராலோசனைச் சபையின் வாயிற் கபாடத்தைத் திறந்து அதன்கண்ணுள்ள ஆசனங்களை யெல்லாந்திருத்தி யமைத்து வாயிலினிடத்துக் காவல் புரிந்து நின்றுகொண் டிருந்தான். அரசன் உத்தரவை யறிந்த மந்திரிகள் அனைவரும் பகல் இருபத்தைந்து கடிகையளவில் மந்திரா லோசனைச் சபையை யடைந்து ஆசனத்தமர்ந்தார்கள். சகல மந்திரிகளும் வந்து சேர்ந்திருப்பதை அறிக்கை யாளன் மூலந்தெரிந்த அரசனும் அச்சபைக்கண் வந்து சேர்ந்து தன்னுடைய உந்நத ஆசனத்தின்கண் வீற்றிருந் தான். வீற்றிருந்த அரசன் முகம் பொலிவற்று விளங் கிற்று. மந்திரிகள் அதனைக்கண்டு, அரசன் முகம் இவ் வாறிருத்தற்குக் காரணம் யாதெனத் தத்தமக்குள் ஆலோசனை செய்து கொண்டிருந்தார்கள்.

மந்திராலோசனைச் சபையில் வீற்றிருந்த மன்னன் மந்திரிகளை நோக்கி, சென்ற காலம், நிகழ்காலம், வருங்

காலம் ஆகிய முக்காலங்களின் நிலைமைகளையும் நண்ணறிவாற் றேர்ந்து செப்பமாக அரசை நடத்தவல்ல எனது கண்ணையும், ஆவியையுமொத்த மந்திரிகளே! எனக்குப் பின் சிம்மாசனத்தேறிச் சந்திரவட்டக் குடை நீழலில் வீற்றிருந்து உலகைப் பரிபாலனம் பண்ணும் பேற்றைப் பெற்ற இளவரசனான இராஜமார்த்தாண்டன் இரு தினங்களாக நமது நகர் வடக்கிராஜவீதியில் வசிக்கும் தாசி பங்கசவல்லியின் புத்திரி சுந்தரசூளாமணியைக் காதலித்து அவள் வீட்டிற்குச் சென்று அவளுடன் வசித்து வருகின்றுனும். இராஜமார்த்தாண்டனுடைய இச்செயல், எனக்கு முன்னுள்ள எமது குலவரசர்கள் ஒருவராலுங் கையாளப் படாத செயலாக இருந்து வருகின்றது. இச்செயலை இராஜமார்த்தாண்டன் வெறுத்துவிடுதற்கு யாதுசெய் தல் வேண்டுமென்பதை நீவிரனைவரும் இதுபோதே ஆலோசித்து முடிவு செய்தல் வேண்டுமென்று சொல்லி முடித்தான்.

அரசன் அறிவித்த விஷயத்தை யறிந்த மந்திரர் ஒவ்வொருவரும், இளங்கோவின் றகாத செயலை மாற்றற் குரிய மார்க்கத்தைத் தத்தமுள்ளத் தாராய்ந்து, இரண் டொருவரை யொழிந்த மற்ற மந்திரிகள், இளங்கோவிற்கு எழின்மிக்க கன்னியொருத்தியை மணஞ் செய்வித்தாலன்றி; இளங்கோவின் இச்செயலை மாற்றமுடியாதென்று கூறினார்கள். மந்திரர்களின் ஆலோசனை, மன்னன் மனதுக்கும் ஒத்திருந்தது. ஓர் சுதினத்தைப் பார்த்து, பெண்மகவுள்ள அரசர்கள்பால் இளங்கோவின் படத்தை யனுப்பி; இளங்கோவின் அழகுக்கு ஒத்தபெண்ணைத்

தேர்ந்தெடுத்து விரைந்து திருமணஞ் செய்வித்து இளங்கோவை அப்பெண்ணுடன் கூடிவாழும்படி செய்வித்தல் வேண்டுமெனவும், இதற்கிடையில் சமஸ்தான வித்வானை அனுப்பி, இளங்கோவிற்குச் சன்மார்க்க போதனை செய்து வர ஏற்பாடு செய்வதெனவும் சகலரும் முடிவு செய்தார்கள். அது சமயம் கடிகாமணி இருபத்தொன்பது அடித்தது. அரசன்முதலனைவரும் மந்திராலோசனை மண்டபத்தை யகன்று தத்தமிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள்.

மன்னன் மகனை, மந்திரி மகன் சந்தித்தல்.

இளவேந்தன் செயலைப் பேரரசற்கறிவித்துத் தன்னில்லம்புக்கு உணவருந்தி இளைப்பாறிய சுகுமாரன், பகல் இருபத்துநான்கு கடிகைவரையுந் துங்கன் றன்னிடம் வராமையால்; துங்கன் இவ்வாறு வராததற்குக் காரணம் யாதெனப் பலப்பல ஆலோசனை பொருந்திய மனத்தினையுடையனாய், அரண்மனையில் இளங்கோ வசிக்குந் தனியிடத்தில் வந்து சேர்ந்தான். சுகுமாரன் வந்து சேர்ந்த அதே சமயம், அரசகுமாரன் நித்திரை விட்டெழுந்தான். சுகுமாரன் நித்திரைவிட்டெழுந்த அரசகுமாரனை நோக்கி, எனதுயிரன்ன இளம் வேந்தே! இதுகால பரியந்தம் நித்திரை செய்தற்குக் காரணம் யாதென்றான்? அஃதுணர்ந்த மார்த்தாண்ட மன்னன் சுகுமாரனை நோக்கி, மதிமிக்க மந்திரிகுமர! யான் இதுகாறும் நித்திரை செய்தற்குரிய காரணத்தைச் சொல்லவேண்டுமா? இஃதுனக்குத் தெரியாததா? எனக்கும், துங்கனுக்கும் இன்று காலையுணவு சுந்தர சூளாமணி வீட்டிற்றான் நடைபெற்றது. பங்கசம் உயர்குலப் பரிசாரகரிருவரை என் பொருட்டுத்

திட்டஞ்செய்து வைத்திருக்கின்ருள். நேற்றிராமுழுதும் நித்திரையில்லை. இன்று பகல் பன்னிரண்டு கடிகையளவில் துங்கனுடைய கட்டாயத்தின் பேரில் அரண்மனைக்கு வந்து சேர்ந்தேன். அரண்மனையிற்ருன் துங்கனுக்கு மத்தியான உணவு நடைபெற்றது. துங்கன் உன்னைப் பார்க்க வருதற்கு முயன்ருன். சுகுமாரன் இங்கு வருவார்; நீ போகவேண்டாமென்று நிறுத்தி வைத்திருக்கின்றேன். குதிரை வண்டிக்காரனும், வண்டியுடன் பகல் பன்னிரண்டு நாழிகை வரையுங் காத்திருந்தான். அவனுடைய காலையுணவும் சுந்தர சூளாமணி வீட்டிலேதான் நடைபெற்றது. எனது செயல் இரகசியமாக விருக்கவில்லை. நகரம் பூராவும் பரவி விட்டது. மகாராஜாவின் செவிக்கும் எட்டியிருக்குமென்றே எண்ணுகிறேன். நான் சுந்தர சூளாமணியை விட்டு ஒரு நிமிஷமும் பிரிந்திருக்க முடியாது. நீ எப்போதும்போல் எனக்குதவியாக விருந்து வரல்வேண்டும். நான் உன்னைக் கேட்டுக்கொள்வது இதுதான். எனக்குத் துணையாகத் துங்கன் எப்பொழுதும் இருந்து வரும்படி நீ செய்தல் வேண்டும். இன்றும் இரவி அஸ்தமித்தவுடன் குதிரை வண்டியை நேரே அரண்மனைக்குக் கொண்டுவரும்படி உத்தரவு செய்திருக்கிறேனென்று கூறினன்.

இராஜமார்த்தாண்டன் இயம்பிய வனைத்தையுங்கேட்ட சுகுமாரன், சுந்தர சூளாமணியின் மீதுள்ள காதற்கடலினின்றும், இனி யிளங்கோவை மீட்பதரிதெனக் கருதிய சிந்தையனுய் இளவேந்தை நோக்கி, குமாரமன்ன! தங்கள் மனம்போல நடக்கக் காத்திருக்கின்றேன். தங்கள் செயல்

மகாராஜாவின் றிருச் செவிக்கு எட்டிவிட்டது. இதிற் சிறிதும் ஐயம்வேண்டாம். இன்று தங்களை அனுப்பி வைக்க நான் வேண்டாமென்று கருதுகின்றேன். ஆங்கன் தங்களுக்குச் சகல வுதவிகளையுஞ் செய்வான். விடை கொடுங்கள் நான் போய்வருகின்றேனென்று சொல்லி எழுந்தான். அரசகுமரனும், சுகுமாரனுக்குப் போய்வர விடை கொடுத்தான். சுகுமாரன் றன்மாளிகையை அடைந்தான். அன்றுமுதல் அரசகுமரன் அரண்மனையில் உணவருந்து நேரமொழிந்த மற்ற நேரங்களிலெல்லாம், தாசி பங்கசத்தின் வீட்டையே தனக்கிருப்பிடமாகக் கொண்டு சுந்தர சூளாமணியுடன் மருவி வாழ்ந்துவந்தான்.

### இராஜமார்த்தாண்டன் உருவப்படத்தை அந்நிய மன்னர் பார்வைக் கனுப்புதல்.

மந்திராலோசனை முடிவுற்ற மறுதினம், சோழமன்னன் கொலுமண்டபத்தை யடைந்து சிம்மாசனத்து வீற்றருளினன். மந்திரி, பிரதானி, சேனாதிபதி, வித்வான், சோதிடர் முதலிய பலரும் வந்து குழுமித் தத்தம் ஆசனத் தமர்ந்தனர். கொலுவீற்றிருந்த மன்னன் சோதிடர்களை நோக்கி, இளவரசன் றிருவுருவப் படத்தை அந்நிய தேசத் தரசர் பார்வைக்கு அனுப்பிவைத்தற்குரிய ஓர் நன்னாளை ஆராய்ந்து கூறும்படி அவர்களுக்கு ஆக்ஞாபித்தான். அரசன் ஆக்ஞையைப் பெற்ற சோதிடர்கள் நாளையும், கோளையும் நன்குநாடி ஓர் சுதினத்தைக் குறிப்பிட்டார்கள். சோதிடர் குறித்த அச்சுதினத்தன்று அரசன், மந்திரி முதலிய பலருடன் கூடிக் கடவுளை வாழ்த்தி அரசகுமரனுடைய படத்தைப் பட்டிற்பொதிந்து உத்தம

தூதன் ஒருவனிடங் கொடுத்து; மேற்படி படத்தைப் பெண்ணுள்ள அரசர்பாற் காட்டி, எந்த அரசனிடம் அரசகுமாரன் அழகிற்கொத்த அழகினையுடைய பெண் ணிருக்கிறதோ; அப்பெண்ணின் படத்தை வாங்கிவரும் படி கட்டளையிட்டனுப்பிவைத்தான். படத்தைப் பெற்ற தூதன், அரண்மனை வாயிலைக் கடந்து வீதியின்கண் வந்த போது அழகிய வாலிபச் சுமங்கிலி யொருத்தி தண்ணீர் நிறைந்த குடத்துடன் எதிர்வந்தாள். அதனைப் பார்த்த தூதன் நற்சகுனம் எதிர்ப்பட்டதால் காரியம் விரைந்து கைகூடுமென்று மகிழ்ந்து சென்றான்.

இராஜமார்த் தாண்டன் பெரும் பொருள் விரையஞ்செய்தல்

உணவருந்தும் நேரமொழிந்த மற்ற நேரங்களிலெல்லாம் சுந்தர சூளாமணியின் பக்கத்திலேயே தங்கியிருந்து; அவள் பால் இன்பத்தை யனுபவித்துவரும் இராஜமார்த்தாண்டன், சுந்தர சூளாமணிக்கும், அவள் தாய் பங்கசவல்லிக் கும் புதிது புதிதான ஆபரணங்கள், வஸ்திரங்கள், பாத் திரங்கள், கட்டில்கள், சோபாக்கள், மெத்தை திண்டு தலையணைகள், நிலைக்கண்ணாடிகள், கறவைப்பசுக்கள், கோச்சுவண்டிகள், குதிரைகள் முதலியன வாங்கிக்கொடுத்த துடன், மூன்றடுக்கு மெத்தையும், நிலாமுற்றமுமமைந்த மாளிகையொன்றையுங் கட்டிக்கொடுத்தான். மேலே குறிப் பிட்ட வகைகளில் இராஜமார்த்தாண்டன் இரண்டு கோடி வராகனைச் செலவு செய்தான். இராஜமார்த்தாண்டனுடைய உதவியால், சுந்தர சூளாமணியும், அவள் தாயும் தேவ போகத்தை யனுபவித்து வந்தார்கள். இராஜமார்த் தாண்டனை விட வேறு புத்திரர்களின்மை யானும்,

இராஜமார்த்தாண்டன் சகல விஷயத்திலும் கெட்டிக்காரனாகவிருப்பதாலும், இராஜமார்த்தாண்டனுக்குப் பதினாறு வயது தொடங்கினவுடன் றிருமணஞ் செய்துவைத்திருந்தால், இந்த விதமான வழிக்கு அவன் சென்றிருக்க மாட்டானென்று கருதினதாலும் அரசன் இராஜமார்த்தாண்டன் செய்துவரும் செலவுகளைப் பற்றிச் சிறிதுங் கவலைப்படவில்லை.

## இராஜமார்த்தாண்டனுக்குச் சமஸ்தான வித்வான் சன்மார்க்க போதனை செய்தல்.

அரசன் ஒரு தினம் தனது சமஸ்தான வித்வான்களில் கல்வி, அறிவு, ஒழுக்கம் ஆதியவற்றாற் சிறந்த "ஞானசாகரன்" என்னும் வித்வானை வரவழைத்து, இளவரசன் தாசிமோகத்தை விட்டு விலகும்வண்ணம் அவனுக்குச் சன்மார்க்க போதனை செய்துவரும்படி அவ்வித்வானுக்கு ஆக்ஞைசெய்தான். அரசனுடைய ஆக்ஞையைப் பெற்ற அவ் வித்வான், பலதினங்கள் முயன்றும் இளவரசனுடைய பேட்டி கிடைக்கவில்லை. பேட்டி கிடைக்கப் பெறாத வித்வான், ஒருதினம் இளவரசன் உணவருந்து முன்னரே அரண்மனையிற் சென்று காத்திருந்து உணவருந்தி வெளியில் வந்த இளவரசனைக்கண்டு புகழ்ந்து ஆசிகூறி, எமதிளவேந்தே! பலநாண் முயன்றுந் தங்கள் பேட்டி கிடைக்கப் பெற்றிலேன். தங்களுக்கு உறுதிபயக்கும் விஷயமொன்றை அறிவிக்குங் கடமைபூண்டுள்ளேன். தாங்கள் ஆசனத்தமர்ந்து, என்னாற்கூறப்படும் அவ்விஷயத்தை அமரிக்கையுடன் றிருச்செவியேற்று மனதிற் பதித்துக்கொள்ளவேண்டுமென்றான்.

வித்வான் கூறுமதனைக் கேட்க நேரமில்லையென்று மறுத்துக்கூறினால், அவ்வித்வான் சினந்து அறம்பாடி நம்மைச் சபிக்கக் கூடுமென்று உள்ளத்தச்சங்கொண்ட இராஜமார்த்தாண்டன், சமஸ்தான வித்வானை ஓராசனத் திருக்கச்செய்து, தானுமோராசனத்து வீற்றிருந்து வித்வானை நோக்கி, எங்கள் சமஸ்தான வித்வான்களில் சகலத்தாலும் தலைமை வாய்ந்த ஞானசாகரரே! தாங்கள் கூறும் விஷயத்தைத் தடையின்றிக் கூறலாம். நான் கேட்கச் சித்தமாக விருக்கின்றேனென்றான்.

இளவரசன் கூறியதுணர்ந்த ஞானசாகரர் இராசமார்த்தாண்டனைப் பார்த்து, சோழ தேசாதிபதியின் புத்திரரத்நமான எங்கள் இளவரசே! நான் சொல்லுமனைத்தையும் தாங்கள் இடையில் யாதொரு மாறுத்தரமுங் கூறாது சாவதானமாகக் கேட்டுக்கொண்டிருந்து, சொல்லிமுடிந்தபின் தங்களபிப்பிராயத்தைச் சொல்லவேண்டு மென்று முதலிற் றெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அரசிளந்தோன்றால்! இந்நிலவுலகத்திற் றோன்றி வாழும் மக்கள் அனுபவித்தற்குரிய இன்பம் சிற்றின்பமெனவும், பேரின்பமெனவும் இருவகைப்படும். இவற்றுள், குலனும் நலனுமொத்த ஒரு கன்னியை, அவளது பெற்றார் உற்றார் முதலியோரின் சம்மதத்தின் பேரில் வேதவிதிப்படி அக்கினிமுன்னர் மணஞ்செய்து; மணந்த அக்கன்னியுடன் கூடி யநுபவிக்கும் இன்பத்தைச் சிற்றின்பமெனவும், பிறப்பிறப்பற்று இறைவனுடன் இரண்டறக்கலந்து அநுபவிக்கும் இன்பத்தைப் பேரின்பமெனவுஞ் சாஸ்திரங்கள் கூறு

கின்றன. பெற்றோர் உற்றோர் சம்மதத்துடன் வேதவிதிப் படி அக்கினி முன்னர் மணஞ்செய்து கொள்ளாத ஒரு கன்னியுடனாவது, அல்லது அக்கினி சாக்ஷியாக மணஞ் செய்துகொண்ட பிறன்மனைவியுடனாவது, தாசியுடனாவது கூடியனுபவிக்கும் இன்பம் ஒருவகையிற் சிற்றின்பமாக விருந்தாலும், ஆராய்ந்து பார்க்கில் அவ்வின்பம் துன்ப மாகவே காணப்படும். மேற்கூறிய பெண்களுடன் கூடும் கூட்டத்தை வியபிசாரமென்று நூல்கள் கூறும். வியபி சாரஞ்செய்பவர்கள், இம்மையில் அபகீர்த்தியையும், மறு மையில் நரகதுன்பத்தையு மநுபவிக்கிறார்கள். இஃதன்றி, விவாகமாகாத கன்னியையோ, அல்லது பிறன் மனைவி யையோ, காதலித்துத் திருட்டுத்தனமாக அனுபவித்து வரும் புருஷனுக்குத் தன்னாற் காதலித்த பெண்வீட்டிற் குப் போகும் போதும் அச்சம், அவ்வீட்டை விட்டு வெளி யில் வரும்போதும் அச்சம். அப் பெண்ணுடன் கூடியநுப விக்கும் போதும் அச்சம். தான் செய்துவரும் இத்தீய காரியத்தைப் பிறர் தெரிந்துகொள்ளாதபடி காப்பாற்றும் வகையிலும் அச்சம். இவ்வகை அச்சங்கள் பிறர்க்குரிய பெண்ணை விரும்புகின்றவனுக்கு உண்டென்பதை ஆராய்ந் தறிபவன், பிறன் மனைவிபால் அநுபவிக்கும் இன்பத்தை எந்தக் காலத்தும் நினைக்கவேமாட்டான். இது,

> "புக்க விடத்தச்சம் போதரும் போதச்சந்
> துய்க்கு மிடத்தச்சந் தோன்றாமற் காப்பச்சம்
> எக்காலு மச்சந் தருமா றெவன்கொலோ
> துய்க்கான் பிறனில் புகல்"

என்னும் வெண்பாவால் நன்குணர்ந்து கொள்வதொன்றும்.

இவ்விருவரை யன்றிப், பொதுப் பெண்களாகிய தாசியைக் காதலித்துப் புணருகின்றவன், தன்னுடைய கைப்பொருளை இழக்கின்றானே யன்றி அத்தாசியினிடத்து அணுத்துணையேனும் இன்பத்தை யனுபவிக்கின்றானில்லை. பொருள் பெண்டிராகிய தாசி, தன்னை விரும்பிவந்தவனுடைய கைப்பொருளைப் பெற்றுக்கொண்டு அவனுடன் பொய்க் கலவி செய்து வருவாளே யன்றி உண்மைக் கலவியை எந்தக் காலத்தும் செய்வதில்லை. இவ்வுண்மையைப் பொய்யா மொழிப் புலவர் கூறிய.

> "பொருட்பெண்டிர் பொய்மை முயக்க மிருட்டறையில்
> ஏதில் பிணந்தழீஇ யற்று."

என்னுங் குறட்பாவால் இனிது தெளிக.

தாசிகளுள்ளத்தில் சதாகாலமும் பொய், வஞ்சகம், பொருள் தேடுமவா இம்மூன்றுமே குடிகொண்டிருக்கும். தன்னைக் காதலித்த ஆடவன் பாலுள்ள பொருளனைத்தையும் பலவகைப்பட்ட தந்திரங்களைச் செய்து வெகுசீக்கிரங் கவர்ந்து கொண்டு, ஊரார் சிறித்தேளனஞ் செய்யும்படி அவர்களைத் தெருவில் அலைந்து திரியும்படி விரட்டிவிடுவார்கள். இவ்வாறு விரட்டப்பட்ட மானமுடைய ஆடவர் சிலர் வெட்கத்துக் கஞ்சித் தற்கொலைசெய்து கொண்டிருக்கின்றார்கள். தாசிகள், தன்னை யடுத்த புருஷனுடைய பொருளைப் பறிக்கும் வரை பலவகைக் கபடநாடகங்களைப் புரிவார்கள். தாசிகளின் கபடநாடகங்களை நன்கறிந்த புலவரொருவர்.

> "வெம்புவாள் விழுவாள் பொய்யே
> மேல்விழுந் தழுவாள் பொய்யே

தம்பலந் தின்பாள் பொய்யே
சாகிறே னென்பாள் பொய்யே
அம்பிலுங் கொடிய கண்ணாள்
ஆயிரஞ் சிந்தை யாளை
நம்பின பேர்க ளெல்லாம்
நாயினுங் கடையர் தாமே"

என்னுங் கவிவாயிலாகத் தான் கண்ட உண்மையை உலகினருக் கறிவிக்கின்றார். இன்னொரு புலவர், உண்டபொழுதே கொல்லும் விஷத்தையும், பழயனூர் நீலியையொத்த பைசாசத்தையும், மலையைப்போன்ற யானையையும், சிரித்துப் பேசுங் குமரரையும், கடைக்கணக்கர்களையும், காக்கைபோல் விழிக்கும் காணியாளரையும் நம்பலாம், முகத்தை மினுக்கிக் குலுக்கி நடந்து சிரித்துப் பேசும் தாசிகளை நம்பக்கூடாதென்று அடியிற் காணப்படுஞ் செய்யுண் மூலம் அறிவிக்கின்றார். அச் செய்யுள் வருமாறு:-

படியி னப்பொழு தேவ தைத்திடு
பச்சை நாவியை நம்பலாம்
பழிந மக்கென வழிம றித்திடும்
பழய நீலியை நம்பலாங்
கொடும தக்குவ டெனவ ளர்த்திடு
குஞ்ச ரத்தையு நம்பலாங்
குலுங்கப் பேசி நகைந கைத்திடும்
குமரர் தம்மையு நம்பலாங்
கடையி லக்கமு மெழுதி விட்ட
கணக்கர் தம்மையு நம்பலாங்
காக்கை போல்விழி பார்த்தி டுங்குடிக்
காணியாளரை நம்பலாம்

நடைகு லுக்கியு முகமி னுக்கியு
நகைந கைத்திடு மாதரை
நம்பொ ணுதுமை நம்பொ ணுதுமை
நம்பொ ணுதுமை காணுமே"

தாசிகளால் அளவில்லாத ஆடவர்கள் கெட்டிருக்கின்றார்கள். காளிதாச மகாகவி தாசியொருத்தியால் கொல்லப்பட்டார், கோவலன் என்னும் வணிகர் தலைவனும் தாசி காரணமாகவே கொலையுண்டான். தாசிகளால் இறந்தவர்கள் சரித்திரமும், கைப்பொருளை இழந்து தெருவில் திரிந்தவர்கள் சரித்திரமும் பல. அவைகளை விரிக்கிற் பெருகுமென்றஞ்சி விடுக்கின்றேன்.

சிறந்தவேசர் நகரத்தில் ஒருவரையொருவர் நட்புற்ற இரண்டு தாசிகள் இருந்து வந்தார்கள். இந்தத் தாசிகளிருவரும் ஓர் தினம் பேசிக்கொண்டிருந்த போது, ஒருத்தி மற்றொருத்தியைப் பார்த்து, என தன்னையை யொத்த தோழி! என்னைப் புணரும் ஆடவர்கள், எனக்கொரு இன்பத்தை யளிப்பதோடு இல்லாமல், மேற்கொண்டு பொருளையுங் கொடுத்து என் பாதத்திலும் விழுந்து வணங்குகின்றார்கள். அவர்கள் இவ்வாறு செய்தற்குக் காரணம் யாது? அக் காரணத்தை எனக்கறிவிக்க வேண்டுமென்று கூறினாள். இவ்வாறு கூறியதை யுணர்ந்த மற்றத் தாசி, மன்மதனும் மயங்கத்தக்க இளமையும் எழிலும் வாய்ந்த தனத்தையுடையவளே! செப்பமாகிய தவத்தைச் செய்யாத ஆடவர்களின் திரவியம் சிதற வேண்டிப் பிரமதேவர் நம்மையும், சூதையும், கள்ளையும் படைத்திருக்கின்றாரென்று கூறினாள். இவ்விடையைக் கேட்டதும், வினவிய

தாசியின் சந்தேகம் நிவர்த்தியாயிற்று. இதனை யறிந்த புலவரொருவர்,

“ அன்னையே யனைய தோழி
யறந்தனை வளர்க்கு மாதே
உன்னையா னொன்று கேட்பே
னுற்றறிந் துரைத்தல் வேண்டும்
என்னையே புணரு வோர்க
ளெனக்கொரு வின்ப நல்கிப்
பொன்னையுங் கொடுத்துப் பாதப்
போதினில் வீழ்வ தேனோ?”

எனத் தாசி யொருத்தி தன்றோழியைக் கேட்பது போலவும், கேட்டவக் கேள்விக்கு மற்றொரு தாசி,

“ பொம்மெனப் பணைத்து விம்மிப்
போர்மதன் மயங்கி வீழுங்
கொம்மைசேர் முலையி னுளே
கூறுவ னறிந்து கோடி
செம்மையி லறஞ்செய் யாதார்
திரவியஞ் சிதற வேண்டி
நம்மையுங் கள்ளுஞ் சூது
நான்முகன் படைத்த வாறே.”

என விடை கூறுவது போலவும் பாடியிருக்கின்றார். இப் பாக்களின் உள்ளுரையை இளம் வேந்தாகிய தாங்கள் ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

இளங்கோவாகிய தங்களறிவோ குசைநுனியினுங் கூறியது. வேதாதிகலைக ளனைத்தையுந் தாங்கள் பயின்று மிருக்கின்றீர்கள். இன்னுஞ் சிறிது காலத்தில் இராஜ்ஜிய

பாரத்தை வகித்து நடத்தும் பெரும்பேறும் தங்களைச் சாரப்போகின்றது. தாங்களறியாத தரும சாஸ்திரங்களும் இல்லையென்றே சொல்லலாம். சகல விதத்தாலும் உன்னத பதவியைப் பெற்ற தாங்கள், கேவலம் தாசி பங்கசவல்லி யின் புத்திரியுடன் நட்புற்று, அவள் வீட்டிற்குச் சென்று, அவளுடன் கூடி வாழ்வது தங்கள் கௌரவத்துக்கு ஏற்ற காரியமன்று. உலகைப் பரிபாலனம் பண்ணும் இளவரசன் தாசிவீடு தேடிச் செல்கின்றானென்று, உலகம் தங்கள் செய்கையை இழித்துக் கூறும். தங்கள் தந்தையார் விரை விற் றங்களுக்குக் குலத்தாலும், குணத்தாலும் உயர்ந்த அழகிய கன்னியை மணஞ்செய்யப் போகின்றார். மணஞ் செய்தபின்னர், அக் கன்னியுடன் றங்களிஷ்டம் போற் கூடி வாழலாம். அவ்வாறு கூடி வாழும் வாழ்க்கையே தரும வாழ்க்கையாகும். இவ் வாழ்க்கையைத் தான் உலகமதிக்கும். திருமணம் நடக்கும் வரை தாங்கள் வித்வான்களுடன் கூடிக் கலையாராய்ச்சி செய்து காலங் கழிக்கவேண்டும். தாங்கள் தாசிவீட்டிற்குப் போவதை யறிந்த தங்கள் தந்தையார் மிகுந்த மனவருத்த மடைந் துள்ளார்கள். இது காறுந் தந்தை மனம் வருந்தாவண் ணம் நடந்துவந்த தாங்கள், இதுபோது தந்தையார் மனம் வருந்த நடப்பது நன்றல்ல. ஆதலால் எங்கள் சிற்றரசரா கிய தாங்கள், இன்று முதல் தாசி பங்கசவல்லியின் புத்திரி யையும், அவள் வீட்டிற்குச் செல்வதையு மறந்துவிட வேண்டுமென்று கூறிமுடித்தார்.

ஞானசாகரர் கூறிய வனைத்தையும் சித்திரப்பாவை போல அசைவற்று ஆசனத்து வீற்றிருந்து கேட்டுக்

கொண்டிருந்த இளமன்னனும் இராஜமார்த்தாண்டன், சமஸ்தான வித்வானை நோக்கி, அறிவாலும் ஒழுக்கத்தாலுஞ் சிறந்த ஞானசாகரரே! தாங்கள் சொல்லியவனைத்தையும் அமைதியுடன் கேட்டுவந்தேனென்பதைத் தாங்களே நன்குணர்ந்திருப்பீர்கள். தாங்கள் சொல்லியவனைத்தும் உண்மையே. ஆயினும், தாங்கள் என்னுடைய நிலையையும், நான் செல்லும் மார்க்கத்தையும் நண்குணர்ந்திருந்தால் இவ்வளவு தூரஞ்சிறிதும் பொருத்தமில்லாத விஷயங்களைக்கூறி வீண்பொழுது போக்கியிருக்கமாட்டீர்களென்று நினைக்கின்றேன். எங்கள் சமஸ்தானத்து வித்வான்களிற் றலைமைவாய்ந்த தங்களுக்கு, நான் எனது நிலையை யுணர்த்த வேண்டியது, என்னுடைய பிரதான கடைமைகளிலொன்றென்று கருதுகின்றேன்.

இவ்வுலகத்தில் மக்கட் பிறப்பைப் பெற்ற ஆண் பெண் இருபாலாரும் காமவின்பத்தை நுகரும் பருவம் வந்த காலத்தில்; அவ்வின்பத்தை நெறிதவறாது நின்று நுகர்தல் வேண்டும். இவ்வாறு நுகர்வதே சாஸ்திர சம்மதமுமாகும். ஆண் பெண்ணுடனும், பெண் ஆணுடனும்கூடி அநுபவிக்கும் இன்பத்தையன்றி இந்நிலவுலகத்தில் அநுபவிக்கும் பிரிதோரின்பமில்லை யென்றே சொல்லலாம். ஒருவன், மாதரின்பத்தை அநுபவிக்கும் முறையுடன் அநுபவிப்பானே யானால்; மறுமைக்கண் அநுபவிக்கும் பேரின்பமும் இவ்வின்பத்துக்கு நிகரல்லவென்றே சொல்லலாம். உலகத்தில் கௌமாரபருவத்தைப் பெற்ற ஆடவன், ஒரு பெண்ணுடன் ஒரே சயனத்தில் படுத்து அவளுடன் நித்திரை செய்யாது தனித்து நித்திரை செய்தலும், மங்கைப்

பருவத்தைப் பெற்ற பெண், ஒரு ஆடவனுடன் ஒரே சயனத்தில் படுத்து அவனுடன் நித்திரை செய்யாது தனித்து நித்திரை செய்தலுமாகிய துன்பம்; மரண துன்பத்தைவிடக் கொடியதாகும். இது,

" முனிவரும் போக பூமி போகமுட் டாது பெற்றுந்
தனியவ ராகி வாழ்தல் சாதுய ரதனி னில்லை
கனிபடு கிளவி யார்தங் காதலர் கவானிற் றுஞ்சிற்
பனியிரு விசும்பிற் றேவர் பான்மையிற் றென்று சொன்னான்."

என்னுஞ் சீவக சிந்தாமணிச் செய்யுளால் நன்குணர்தற் பாலதாம்.

மறுமைக் கண்ணதாய பேரின்பத்தை விழைந்து தவமியற்றும் முனிவரர்களில், விண்ணுலக வாசிகளாகிய தேவர்களில், பாதலவாசிகளாகிய நாகர்களில், பிரமன் விஷ்டுணு உருத்திரன் என்று சொல்லப்படும் மூவர்களாகிய முதல்வர்களில் மங்கைமாரின் போகத்தை விட்டிருந்தவர்கள் எவரேனுமுண்டா? இருந்தாற் கூறுக. மங்கைமாரிடம் அநுபவிக்கும் இன்பமே இன்பமாகும். மங்கைமாரிடம் கூடி வாழும் வாழ்க்கையே வாழ்க்கையாகும். மங்கைமார்களை அடையுஞ் செல்வமே செல்வமாகும். மங்கைமாரைக் கூடி வாழாத வறுமையே வறுமையாகும். மங்கைமாரின்பத்தை அறியாதாரெவரோ அவரே, மங்கைமாரின்பத்தைச் சிற்றின்பமென்று கூறுவர். மங்கைமாரின்பத்தை அறிந்தோர், அதனைப் பேரின்பமென்றே கூறுவர். இதனை,

"ஓவ ருந்தவ மியற்றிய முனிவரி னுலகத்
தேவர் தங்களிற் பாதலத் தோர்களிற் சிறந்த
மூவ ரென்றுபேர் பெற்றிடு முதல்வர்க ளும்மி
லேவர் மங்கையர் முலைத்தலைப் போகம்விட் டிருந்தோர்.

மங்கை மாரிடத் தின்பமே யின்பமற் றவரோ
டிங்கு வாழ்வுறும் வாழ்க்கையே யியல்புறும் வாழ்க்கை
யங்க வர்ப்பெறு செல்வமே செல்வமாங் கவர்தங்
கொங்கை புல்குறு வறுமையே கொடியதோர் வறுமை.

மறுவி லாதவாண் மதிமுக மடந்தையர் புணர்ப்பைச்
சிறிய வின்பமென் றுரைசெய்வ ரன்னதன் சிறப்பை
யறிவ ரேயெனி னுங்கதே பேரின்ப மாகு
மிறைவ நீயது கேட்டியேன் மொழிகுவ னென்றான்."

என்னுங் கந்தபுராணச் செய்யுட்களால் நன்குணர்தற் பாலதாம்.

மாதரின்பத்தைக் குறித்துப் பேசுவதாக விருந்தால் வருஷக் கணக்காகப் பேசிக்கொண்டேயிருக்கலாம். எத்தனை வருஷங்கள் பேசினாலும், அது முற்றுப்பெறுவதொன்றல்ல. உயர்ந்த குலத்திலுதித்த ஆடவர்கள், தாழ்ந்த குலத்திலுதித்த பெண்களை மணஞ்செய்து கொள்ளலாமென்று சாஸ்திரத்தில் விதியிருக்கின்றது. இவ்விதியைக் கடைப்பிடித்தே பிராமணோத்தமர்களாகிய பிரமதேவர் தாசியையும், வசிஷ்டர் புலைச்சியையும், சத்தியர் சண்டாளியையும், பராசர் மீன் வலைச்சியையும், பகைவர் பறைச்சியையும் மணம் புரிந்து அவர்களுடன் கூடி வாழ்ந்து மக்களைப் பெற்றார்கள். உலகத்தை ஏகசக்கிராதிபதியாகவிருந்து அரசுபுரிந்த எமதுகுலத்து இராகுமன்னன், சாதிக்கொரு கன்னியாகத் தேர்ந்தெடுத்துப்பலகன்னிகைகளை மணம்புரிந்து வாழ்ந்த சரிதம் தங்களுக்குத் தெரியாததல்ல.

தாசி பங்கசவல்லியின் புத்திரியான சுந்தர சூளாமணி, உத்தம லட்சணங்களெல்லாம் ஒருங்கமைந்த பத்மினி சாதிப்பெண். அவள், தக்கதோர் புருஷனை மணந்து கொண்டு இல்லற வாழ்க்கையை நடத்தவேண்டுமென்னுங் கருத்துடையளாய்க் கன்னித்தன்மை யழியாது விரதங் காத்து வந்தாள். இவ்வாறு விரதங்காத்துவந்த அவளை நான் கண்டு காதலித்தேன். அவளும் என்னைக் காதலித்தாள். நாங்களிருவரும் ஒருவரையொருவர் காதலித்தவன்றே, நான் சாஸ்திர முறைப்படி அவளைக் காந்தர்வ மணஞ் செய்துகொண்டு அவளுடன்வாழ்ந்து வருகின்றேன். நாங்களிருவரும் உடலால் வேறுபட்டிருக்கின்றோமேயன்றி, உள்ளத்தால் வேறுபடவில்லை. எங்களிருவரையும் பிரிக்கச் சர்வ வல்லமையுள்ள ஸ்ரீ வீதிவிடங்கப் பெருமானாலும் முடியாதென்றே கருதுகின்றேன். ஒருக்கால் அப்பெருமானுடைய வல்லமையால் எங்களுக்குள் பிரிவு நேருமேல்; பிரிந்தவப்பொழுதே இவ்வுலக வாழ்வைத் துறப்போம். இதில் தாங்கள் சிறிதும் ஐயப்படவேண்டாம். யார் எவ்வாறு போதித்தாலும், என்றந்தையார் நான் சுந்தர சூளாமணியை விடாத வரையில் இந்த ராஜ்ஜியத்தையே எனக்கில்லையென்று சொல்லிவிட்டாலும், அப்போது கூட நான் இராஜ்ஜியத்தைப் பெரிதென்று மதித்துச் சுந்தர சூளாமணியை விட்டுப் பிரியமாட்டேன். அவளே என் செல்வம். அவளே என்னுயிர். நான் தங்களைப் பெரிதும் மதித்தே இத்துணைநேரம் சுந்தரசூளாமணியை விட்டுப் பிரிந்திருந்தேன். நான் அவள்பாற் போய்ச்சேரவேண்டும். இனி அரைநிமிஷங்கூட இங்கிருக்க முடியாது. தாங்கள் போய்வாருங்கள். இனி இதுவிஷயமாக என்னிடஞ்

சொல்லுதற்குத் தாங்கள் வரக்கூடாதென்று தங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன் என்று கூறி முடித்தான். இவ்வாறு கூறிமுடித்த இளமன்னன், ஆசனத்தை விட்டெழுந்து அங்குத் தனக்காகக் காத்துநின்ற குதிரை வண்டியிலேறிக்கொண்டு தாசி பங்கசத்தின் வீட்டிற்குச் சென்றான். அரசகுமரன் ஆசனத்தை விட்டெழுந்ததுமே, தனது ஆசனத்தை விட்டெழுந்த ஞானசாகரர், இளவேந்தின் மனநிலையை எல்லாம் வல்ல இறைவனாலும் மாற்றமுடியாதென்ற உறுதி பூண்ட மனத்தினராய்த் தன தில்லத்தை யடைந்தார்.

### ஞானசாகரர் அரசனைச் சந்தித்தல்.

ஞானசாகரர், இராஜமார்த்தாண்டனுடன்சம்பாஷித்த மறுதினம் அரண்மனையையடைந்து அரசனைத் தனியிடத்திற்கண்டார். தன்னைக்காணவந்த சமஸ்தான வித்வானுக்கு ஆசனமளித்து அரசன் உபசரித்தான். ஞானசாகரர் அரசனளித்த ஆசனத்திருந்து அவ்வரசனை நோக்கி, கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கைவிடாத கொற்ற மிக்க கோமானே! நான் மிக்க முயற்சியின்மேல் தங்கள் புத்திரரான இளவரசரை நெருநல் சந்தித்தேன். என்னாற் கூடுமானவரை இதோபதேசஞ் செய்தேன். நான் கூறியதனைத்துங் கருங்கற்பாறையிற் கடாவிய மரமுளையாயிற்று. அவர், சுந்தரசூளாமணிமீது கொண்டுள்ள மோகத்தைமாற்ற எல்லாம் வல்ல இறைவனாற்கூட முடியாது. அவருக்கு விரைந்து திருமணஞ்செய்தல் வேண்டும். திருமணஞ் செய்யாதவரை அவருடைய நிலைமை மாறுவதரிது. இளவரசர் நிலையை மாற்ற முயற்சிப்பதை

விடத் திருமணஞ் செய்ய முயற்சிப்பதே பலன்றருஞ் செய்கையாகுமென்றார். இவ்வாறு ஞானசாகரர் கூறியதை யுணர்ந்த மன்னன், பதிலொன்றுஞ் சொல்லாது மௌன மாகவிருந்தான். ஞானசாகரர் அரசன்பால் விடைபெற்றுத் தன்னிருப்பிடஞ் சார்ந்தார்.

## திருமண நிச்சயம்

இளவரசன் படத்தை யெடுத்துக்கொண்டு பெண் பார்க்கச் சென்ற தூதன், பலப்பல தேசத்தரசர்களைக் கண்டு படத்தைக் காட்டினன். படத்தைக் கண்ணுற்ற அரசர்கள், தமதிடம் இளவரசன் அழகிற்கொத்த அழ கினையுடைய பெண்ணில்லாமையால் படத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். குறித்த காரியங் கைகூடப்பெறாத தூதன், சுமார் ஆறுமாதங்கள் வரை அலைந்து திரிந்து கடைசியாக மலையாள தேசத்தையடைந்து, அத்தேசத்தை யாளுங் குகன் சிலை ராயன் என்னும் மன்னனைக்கண்டு அவன்பால் இளவரசன் படத்தைக் கொடுத்தான். சோழ தேசத்திளவரசன் படத்தைப்பெற்ற அம்மன்னன், படத் திற் காணப்படும் இளங்கோவின் அழகும், தன்னருமைப் புத்திரி மதனகல்யாணியின் அழகும் ஒத்திருக்கக்கண்டு பெரிது மகிழ்ந்து, படங்கொண்டுவந்த தூதனை உபசரித்து அவனை நோக்கி, ஏ தூதா! என் புத்திரி மதனகல்யாணி யின் வனப்பும், இளவரசனெழிலும் ஒத்திருக்கின்றது. நாளை சுதினமாகவிருப்பதால் என்புத்திரியின் படத்தை எனது தூதனிடங்கொடுத்து உன்னுடன் அனுப்பிவைக் கின்றேன். சோழதேசாதிபதி என்புத்திரியின் படத்தைப் பார்வையிட்டு, அவருக்குப் பிடித்திருந்தால், இளவரச

னுக்கு என்புத்திரியைத் திருமணஞ்செய்துகொடுக்க நான் சம்மதிக்கிறேனென்று கூறிப், படங்கொண்டுவந்த மேற்படி தூதனுக்குச் சிறந்த உணவு செய்து வைத்துத் தக்க சம்மானமளித்து, மறுதினம் தன் புத்திரியின் படத்தை பட்டிற் பொதிந்து தன்னுடைய தூதனொருவனிடங் கொடுத்துச் சோழநாட்டிற்கு அந்நாட்டுத் தூதன்பின் அனுப்பிவைத்தான். சோழநாட்டுத் தூதன், தான் கொண்டுவந்த இராஜமார்த்தாண்டன் படத்தை மலைநாட்டரசன்பாற் கொடுத்துவிட்டு, மலைநாட்டரசன் புத்திரி படத்தை எடுத்துவரும் தூதனொடுந் திருவாரூரை யடைந்தான். தூதரிருவரும் அரண்மனையை யடைந்த போது, அரசன் மந்திரி முதலியோர் சூழக் கொலுமண்டபத்தையடைந்து சிம்மாசனத்து வீற்றிருந்தான்.

காரியத்தை முடித்துக்கொண்டுவந்த தூதன், மலைநாட்டுத் தூதனோடும் அரசன்முன் சென்று வணங்கினான். மலைநாட்டுத் தூதனும் சோழராசனை வணங்கி அரசன் சமீபத்திற்சென்று தன்னிடமுள்ள படத்தை அரசனிடங் கொடுத்தான். படத்தைப்பெற்ற பார்த்திபன், மதன கல்யாணியின் சிறந்த வனப்பை நோக்கிப் பெரிது மகிழ்ந்தான். மகிழ்ந்த மன்னன், அப்படத்தை மந்திரி முதலிய பலரும் பார்க்கும்படி அவர்கள்பாற் கொடுத்தான். சகலரும் படத்தைப் பார்த்து மிகமகிழ்ந்து இத்தகைய அழகினையுடைய பெண் சுவர்க்கமத்தியபாதலமாகிய மூன்றுலகத்திலுமே கிடைத்தலரிதெனக் கூறினர்.

உள்ளத்தில் என்றுமுறுத பெருமகிழ்வுற்ற மன்னன் றன்றூதனை நோக்கினான். அரசன் மனக்குறிப்பை அவனறி

பார்வையாலுணர்ந்த தூதன் அரசனை நோக்கி, அளவில் புகழுடை வளவரேறே! அடியேன் பலப்பல தேசங்கள் சென்று காரியங் கைகூடாது கடைசியாக மலைநாட்டை யடைந்து அந்நாட்டரசர்பால் இளவேந்தின் திருவுருவப் படத்தைக்கொடுத்தேன். படத்தைப்பெற்ற மன்னர், இளவரசர் எழிலைக்கண்டு அதிக மகிழ்ச்சிகொண்டு எனக் குயர்ந்த சம்மானங்களை நல்கியுபசரித்து, அவரது புத்திரி மதனகல்யாணியின் படத்தைத் தூதன்மூலம் தங்கள் பார்வைக்கனுப்பிவைத்தார். தங்களுக்குச் சம்மதமானால், தன் புத்திரியை இளவரசருக்குத் திருமணஞ் செய்து கொடுப்பதாகவும் அறிவித்தாரென்று சொன்னான்.

தன்றூதன் வாயுரைதேர்ந்த வளவர்கோன், முன்னை யினும் மகிழ்கூர்ந்து மலைநாட்டுமன்னன் தூதனுக்குச் சிறந்த சம்மானங்களைச் செய்து அவனை நோக்கி, ஏ தூதா! நீ விரைந்துசென்று உனதரசனைக்கண்டு, நாங்கள் பெண் பேச வருவதாக அறிவிப்பாயென்று கட்டளையிட்டனுப்பி வைத்தான். சோழபூபதியின் உத்தரவைப்பெற்ற மலை நாட்டுத்தூதன், தன்னாட்டையடைந்து தனதரசனைக்கண்டு வணங்கிச் சோழராசன் கூறிய விஷயத்தை யறிவித்தான், சோழராஜன் தன்பான் மகட்பேச வருவதை யறிந்த மலை நாட்டு மன்னன் அளவிலா மகிழ்ச்சியோடிருந்தான்.

தன்குமாரனுக்கொத்த அழகுவாய்ந்த பெண்படத் தைப் பெற்றுக் களிபேருவகையுற்ற விக்கிரம சோழவர சன், பெண்ணைக்கேட்டு நிச்சயஞ் செய்தற்குரிய நன் னாளைச் சோதிடர் மூலங் குறிப்பிட்டு, அந்நாளிற்றனது நல முதியோரிற் சிலரையும், முதன்மந்திரி சற்கீர்த்தி

யையும், குடை கொடி சாமரம் சுருட்டி ஆலவட்டம் முதலிய விருதுக்களுடன் பரிவாரங்கள்சூழக், கல்யாண முரசு முதலிய மங்களவாத்தியமுழங்க மலைநாட்டுமன்னன் பால் அனுப்பிவைத்தான். பெண்பேசச் சென்றோர் ஐந்து தினங்களில் மலைநாட்டுமன்னன் தலைநகரான கொடுங் கோளூரைச் சேர்ந்தார்கள். சோழமன்னன் குமரனுக்குத் தன் பெண்ணைக்கேட்டு நிச்சயஞ்செய்தற்கு அம்மன்னன் குலமுதியோரும், முதன் மந்திரியும் பட்டத்துயானையுடன் மங்களவாத்திய மொலிக்க வருதலையறிந்த மலைநாட்டரச னை குகன் சிலைராயன் பரிவாரங்கள் சூழ மங்கலவாத்திய மொலிப்ப எதிர்சென்று கண்டு அவர்களை அரண்மனைக்கு அழைத்துவந்து தக்க உபசாரங்களைச் செய்தான்.

மலை நாட்டு மன்னன் உபசாரத்தைப் பெற்ற சோழ நாட்டரசன் பிரதி நிதிகள், மலைநாட்டு வேந்தன் முன்னிலை யில் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, சந்தனம், குங் குமம், புஷ்ப முதலிய மங்கலப் பொருள்களை வைத்து, எங்கள் அரசகுமரன் செல்வச் சிரஞ்சீவி இராஜமார்த்தாண் டன், தங்கள்புத்திரி சௌபாக்கியவதி மதனகல்யாணி யைத் திருமணஞ்செய்துகொள்ளத் தாங்கள் பரிந்தளிக்க வேண்டுமென்று கேட்டார்கள். சோழநாட்டரசன் பிரதி நிதிகள் கூறியதை மலைநாட்டுக் கோமான் மகிழ்ந்து கேட் டுப் பெண் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு, மேற்படி திரு மணம் கொடுங்கோளூரிற் றனது அரண்மனையில் நடக்க வேண்டுமெனவுங் கூறித், திருமணத்துக்குரிய நன்னாளைத் தனது சமஸ்தானத்துச் சோசியரைக்கொண்டு நிச்சயித்து

சோழர்கோன் குலமுதியோர், மந்திரிமுதலிய சகலருக்குஞ் செய்யவேண்டிய இராஜாங்க மரியாதைகளைச் சிறப்பாகச் செய்து அனுப்பிவைத்தான்.

இராஜமார்த்தாண்டனுக்குப் பெண்பேசி முடித்த குழுவினர், அதிக மகிழ்ச்சியுடன் திருவாரூரையடைந்து விக்கிரம சோழவேந்தனைக்கண்டு விஷயத்தை யறிவித்தார்கள். விக்கிரமசோழன், தன் புத்திரனுக்குத் திருமணப் பேச்சுப் பூர்த்தியானதை யறிந்து பெருமகிழ்ச்சியுற்றான்.

திருமணவேலை நடைபெறல்.

சோழர் திருநாட்டின் இராஜதானியான திருவாரூரிலும், மலையாள நாட்டின் இராஜதானியான கொடுங்கோளூரிலுந் திருமண வேலைகள் நடைபெற்றன. தத்தம் வீடுகளை அலங்கரிக்கும்படி நகரமாந்தர்களுக்கு அரசன் உத்தரவு கிடைத்தது. உத்தரவைப்பெற்ற நகர மாந்தர்கள் தத்தம் புத்திரன் புத்திரிக்குத் திருமணஞ்செய்தற்கு அலங்கரிப்பதுபோலத் தத்தம் வீடுகளையும்; வீதிகளையும் வெள்ளையடித்துச் சித்திரங்கள் வரைந்தும், காவணங்களிட்டு வாழை, கமுகு, கரும்புகளை நாட்டி மகரதோரணங் கட்டியும் அலங்கரித்தார்கள். அரண்மனைகள் முழுதும் சிறந்த அலங்காரத்தைப் பெற்று விளங்கிற்று. கொடுங்கோளூர் மன்னன் அரண்மனையில், திருமணமண்டபம் இந்திரன் கொலுமண்டபமும் நாணும்படி அமைத்து அலங்காரஞ் செய்யப் பெற்றது. திருவாரூர், கொடுங்கோளூர் இவ்விரு நகரங்களிலும் எங்கு பார்த்தாலும் அரண்மனையின் திருமணப் பேச்சே நிகழ்ந்தன. திருவாரூர் நகரமாந்தர்கள் ஒவ்வொருவரும் மணமகன் அழகையும், மண

மகள் அழகையும் பெரிதும் பாராட்டிப் பேசிக்கொண்டிருந் தார்கள். திருவாரூர், கொடுங்கோளூர் இவ்விரு நகர மாந்தர்கள் உள்ளத்திலும் குதூகலம் குடிபுகுந்து வீற் றிருந்ததுடன், ஒவ்வொருவருந் திருமண நன்னாள் வரு கையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்கள்.

தாசி சுந்தர சூளாமணியின் சூழ்ச்சி.

மயக்க மருந்திடாமல், தனது காதலுடன் கலந்த கலவியைக்கொண்டே மன்னன் மார்த்தாண்டன் மனம்; தன்னைத்தவிர வேறொரு பெண்களைக் கடைக்கண்ணாலும் நோக்காவண்ணம் அவனை வசஞ்செய்து வைத்துக்கொண்டு தேவேந்திர போகமும் இதனுக்கிணையுடைத்தன்றெனப் பெரும்போகத்தை அநுபவித்து வரும் சுந்தர சூளாமணி யும், அவள் தாய் பங்கசவல்லியும் இராஜமார்த்தாண்ட னுக்குத் திருமணம் என்னும் மங்கல மொழியைக்கேட்டு, இடியோசை கேட்ட சர்ப்பம்போன் மனங்கலங்கி இனி யென்செய்வோமெனத் துக்கத்தில் ஆழ்ந்தார்கள். தங் கள் உள்ளத்தில் குடிகொண்ட பெருந்துக்கத்தை, அரச குமான் அறிந்துகொள்ளாவண்ணம் மறைத்தும்வந்தார்கள். அரசகுமரன் நித்திரை செய்யும் இராக்காலத்தில் சுந்தர சூளாமணியும், பங்கசமும் ஒன்று சேர்ந்திருந்து அரச குமரன் றிருமணத்தை நடைபெறுமற் செய்ய ஏதேனுஞ் சூழ்ச்சி செய்யலாமாவென ஆலோசனை செய்துபார்த்தார் கள். ஆலோசனையில் ஒருவித முடிவும் ஏற்படவில்லை. இரண்டொரு தினத்திரவில் மேற்கண்டவாறு ஆலோசனை செய்துவந்த இருவரில் தாசிபங்கசம், அரசகுமரன் அவன் மணஞ்செய்துகொள்ளும் அரசியுடன் கலந்து வாழாதிருக்

கும்படி செய்தற்குரிய ஓர் யுக்தியைக் கண்டுபிடித்தாள். யுக்தியைக் கண்டுபிடித்த அவள், தான் கண்டுபிடித்த யுக்தியே சரியான யுக்தி, இதைவிட வேறு எந்த யுக்தியும் பிரயோஜனப் படாதெனக் கருதித் தன் புத்திரியைநோக்கி, சுந்தர சூளாமணி! அரசகுமாரன், மணஞ்செய்யும் மனைவியுடன் சேர்ந்து வாழாதிருக்கும்படி செய்ய ஓர் யுக்தி கண்டு பிடித்திருக்கிறேன். அதனைக் கூறுகிறேன் கேட்பாயாக.

அதாவது, அரசகுமாரனுக்குக் கல்யாணஞ்செய்யப் போகும் பெண்ணினுடைய திருவுருவப் படத்தை அரசகுமாரனை எடுத்துவரும்படி செய். இராஜகுமாரன் படத்தைக் கொண்டுவந்து கொடுத்தவுடன், அப்படத்தில் காணப்படும் பெண்ணின் இடதுகண் பாவை விழியில் ஒரு கடுகுப்பிரமாணம் வெண்மை தோன்றும்படி மத்தியிற் சுரண்டி எடுத்துவிட்டுக் கல்யாணப் பெண்ணுக்கு இடதுகண் பொட்டையென்று அரசகுமாரனுக்குப் படத்தைக்காட்டி யறிவித்தால்; அவர் அப்பெண்ணை விரும்பாது வெறுத்து விடுவார். நீ என்றும்போல அரசகுமாரனுடன் கலந்து சுகத்தை யநுபவிக்கலாமென்றாள். தன்றாய் சொன்ன யுக்தி சுந்தர சூளாமணிக்கும் பொருத்தமாக விருந்ததால், இருவரும் இவ்விதமே செய்து அரசகுமாரன் மனதை அவன் சொந்த மனைவியிடம் செல்லவொட்டாது பேதப்படுத்தி விடுகிறதென்று முடிவு செய்தார்கள்.

இராஜமார்த்தாண்டன் மணம் திருமணத்தை விரும்பவில்லை.

சுந்தர சூளாமணியின் காதல் வலையிற் சிக்குண்டு மன மயக்கமடைந்திருக்கும் இராஜமார்த்தாண்டன், தனக்கு

நடக்கப்போகும் திருமணத்தில் அனுவளவேனும் விருப்ப மில்லாதவனுய்த் தனக்குத் திருமணத்தில் விருப்பமில்லாத தைத் தன்றந்தையினிடம் அறிவித்தால் தன் சொல்லைக் கேட்டு அவர் திருமணத்தை நிறுத்திவிடமாட்டார்; நம்மை வற்புறுத்திக் கட்டாயத் திருமணத்தைச் செய்தே வைப்பார். ஆதலால் நமதெண்ணத்தை வெளிவிட வேண்டாமென்று கருதினவனுய் வழக்கம்போற் சாப்பிட்ட நேரமொழிந்த மற்ற நேரங்களிலெல்லாம் சுந்தர சூளாமணி யுடன் சந்தோஷமாகக் காலங்கழித்து வந்தான்.

அரசகுமரனை ஏமாற்றச் சுந்தர சூளாமணி பாசாங்கு செய்தல்.

சுந்தர சூளாமணி, அரசகுமரனையும், அவன் திரு மணஞ்செய்துகொள்ளும் மனைவியையும் பிரித்துவைப் பதற்குரிய யுக்தியைத் தன்றாய்மூலம் அறிந்த தினத்தின் மறுதினம் இரவு அரசகுமரன் வரும் நேரத்தில், அவனுற் கட்டிக்கொடுத்த புதுமாளிகையின் மேன்மாடி நிலாமுற்றத் தில் தண்ணீரில் நனைத்த பஞ்சைக் கையில் வைத்துக் கொண்டு ஒரு புறத்தில் அலங்கோலமாகப் படுத்திருந்தாள். அரசகுமரன் வரும்போது, சுந்தரசூளாமணி சிறந்த அலங் காரஞ்செய்துகொண்டு மலர்ந்த முகத்துடன் றன்மாளிகை யின் வாயிற்படியினின்று அவனை யழைத்துக்கொண்டு மேன்மாடிக்குச் செல்வது வழக்கம். சுந்தரசூளாமணி மேன்மாடியில் அலங்கோலமாகப் படுத்திருந்தபோது அரச குமரன் வந்து சேர்ந்தான். வந்து சேர்ந்த மன்னிளங்கும ரன், அன்று வழக்கத்திற்கு விரோதமாகச் சுந்தரசூளா மணி வாயிற்படியில் நின்றுகொண்டிராததையறிந்து, சுந்தர சூளாமணி இன்றிவ்வாறிருத்தற்குக் காரணமென்ன

வென்ற ஆசங்கைகொண்ட மனத்தனுய், மேன்மாடி நிலா முற்றத்திலுள்ள பளிங்கு மண்டபத்தையடைந்து பார்த் தான். அங்கவள் காணப்படாததால் அதன் பக்கத்துள்ள படுக்கையறையுட் சென்று பார்த்தான். அங்குமவளில் லாததைக்கண்ட இளங்கோ, என்னுவி எங்குச் சென்றது என்னும் ஏக்கத்தைக் கொண்ட மனத்தனுய், யார் வீட்டி லென்று ஒரு சத்தமிட்டான். கமலமென்னுந் தோழி அச்சத்தத்தைக் கேட்டோடி வந்தாள். சுந்தரசூளா மணியைக் காணுது மதிமயங்கிய இளங்கோ, அங்கு வந்த தோழி கமலத்தைப் பார்த்து, வருகிறது யார் சுந்தரசூளா மணியாவென்ருன்? அஃதுணர்ந்த தோழி, நான் கமலம் என்ருள். தோழி சொல்லைக்கேட்ட மன்னன் மார்த் தாண்டன் அத்தோழியை நோக்கி, என்னுயிர்க்காதலி யெங்கே? அவளைக் காட்டுக, அவளை இன்னுஞ் சில நிமி ஷங்கள் காணுவிடில் என்னுயிர் உடலைவிட்டுப்பிரிந்துவிடு மென்ருன். அதே மேன்மாடியில் மற்ருேர் பக்கத்திற் பாசாங்கு செய்து படுத்துக்கொண்டிருந்த சுந்தரசூளாமணி அரசகுமான் கூறிய அவ்வார்த்தைகளைக்கேட்டுப் பெரு மகிழ்கொண்டு நமது யுக்தி நிறைவேறிவிடுமென்று துணிவு கொண்டாள். அரசன் வினவுரை தேர்ந்த தோழி, இங்கு தானிருந்ததென்று சொல்லிக்கொண்டே தேடிப்பார்ப் பவள்போற் பாசாங்கு செய்து அரசகுமரனை நோக்கி, சாமி! தங்கள் காதலியார் இதோ படுத்து நித்திரை செய்கிருர்க ளென்று சுந்தர சூளாமணியைச் சுட்டிக்காட்டிவிட்டுச் சென்ருள். இளங்கோ, தன் காதலி படுத்திருந்தவிடத் துக்கு விரைந்து சென்று அவளைக்கண்டு என் கண்மணி! தரையிலேன் படுத்துக்கிடக்கின்ரு யென்ருன்? பேச்சு

மூச்சில்லை. அதன் பின்னர், பெண்கள் திலகமே! அயர்ந்த நித்திரையோவென்றான்? அதற்கும் பேச்சில்லை. அதன் மேல், பக்கத்தில் உட்கார்ந்து கையால் மிருதுவாகத்தட்டி என்னுயிரன்னமே! ஏனிவ்வாறு தலைவிரிகோலமாய்ப் படுத்துக்கிடக்கிறாயென்றான்? இவ்விதம் அரசகுமாரன் கேட்டதும், சுந்தர சூளாமணி தேம்பித் தேம்பி யழுதாள். அவளழுவதை யறிந்த இளங்கோவின் மனங் கலக்கத்தை யடைந்தது. இதுகாறும் யாருடைய துக்கத்தையும் அறிந்திராத அரசகுமாரன் தன்னுயிர்க் காதலியின் றுக்கத்தைக் கண்டவுடன்; அவன் மனம் அலைவாய்த்துரும்பு போலாயிற்று. மனநிலை குலைந்த மன்னன் மகன், சுந்தர சூளாமணியைத் தனதிரு கரங்களாலும் வாரியெடுத்துத் தன் மடியிற் கிடத்தினான். அதுகாலை, சுந்தர சூளாமணி தன் கண்களை இருகரங்களாலும் மூடிக்கொண்டழுவது போற் பாசாங்கு செய்து பஞ்சிலுள்ள தண்ணீரை முகத்திற் பிழிந்து கொண்டாள். அத்தண்ணீர் முகத்தினின்றும் வழிந்தோடி அரசகுமாரன் மடியின் உடையை நனைத்தது. அதுகண்ட வேந்தன் குமரன், தன்னங்கவஸ்திரத்தை யெடுத்துச் சுந்தரசூளாமணியின் முகத்திலுள்ள நீரைத்துடைத்துப் பெண்கள் நாயகமே! உனக்கென்ன குறை நேர்ந்தது. அக்குறையைச் சொல். அதனைக் கணப் பொழுதில் நிவர்த்தி செய்கிறேன். அழாதே! அழாதே!! என்று கூறி அவள் கபோலத்தில் முத்தமிட்டான்.

அரசகுமாரன் மனநிலையை யுணர்ந்து உள்ளத்திலுவகைபூத்த சுந்தரசூளாமணி தன் காதலனை நோக்கி, உலகை யொருகுடை நிழலில் ஒடுக்கியாளும் மன்னன் புத்திரரான தங்களை நாயகனாகப்பெற்ற அடியாளுக்கு

என்ன குறை நேரப்போகின்றது? ஒரு சிறு விஷயத்தை நினைத்தேன். பெண்புத்தி பேதமை யுடைத்தாதலால் நினைத்தவுடன் மனங்கலங்கிற்று. தாங்கள் அன்புகூர்ந் தளித்த முத்தத்தால் அக்கலக்கமாறிவிட்டது. வாருங் கள் சந்திரகாந்த மண்டபத்துக்குப் போவோமென்றாள். அஃதுணர்ந்த கோமகன் அவளை நோக்கி, எனதுயிர்க்குறு துணையான கோமளவல்லி! உன் மனதைக் கலங்கச்செய்த விஷயத்தை நானறிய விரும்புகின்றேன். எட்டுணையுமறை யாமல் அவ்விஷயத்தை இயம்பவேண்டுமென்றான். இவ் வாறு கூறிய இளவேந்தன் சொல்லைக்கேட்ட சுந்தரசூளா மணி தன் காதலனை நோக்கி, மன்னர் மன்ன! நான் கூறு வதைத் தாங்கள் அலட்சியமாக வெண்ணாது கூர்ந்து கவ னிக்கவேண்டும். நூறு பெயர்களுளதோர் கூட்டத்தில் நாவிருந்தாகவுள்ளதோர் உணவுப்பொருள் தொண்ணூற் றொன்பது பெயர்களுக்குக் கிடைத்து ஒருவருக்கு மாத்திரங் கிடைக்காது போனால்; உணவுப் பொருள் கிடைக்கப் பெறாதவர் மனம் வருந்துவது இயல்பேயாகும். அதுபோல, எனக்குப்பின் றங்களுக்கு இல்லறத்துணைவி யாக வருகின்ற என்றங்கை மதனகல்யாணியின் றிருவுரு வப் படத்தை நமது நகரமாந்தர்கள் பலரும் பார்த்து அவ ளுடைய பேரழகைக் கண் விருந்தாகவுண்டு களிப்படைந்து ஒருவர்க்கொருவர் விதந்து பேசிக்கொள்ளும்போது, தங் களுக்குத் தலைமைநாயகியான எனக்குமட்டும் அப்படத் தைப்பார்த்து மகிழும்பாக்கியங் கொடுத்துவைக்கவில்லையே யென்றும், எல்லாப்புருடருக்கும் இளையமனைவியின் மீது அதிகப்பிரிய மிருக்குமென்று சொல்லுவார்களே; நமது நாயகன் இளையமனைவியை மணஞ்செய்து கொள்ளுவதற்கு

முன்னமேயே அப்பெண்ணின் படத்தை நமக்குக்காட்டாது வஞ்சகஞ் செய்ய ஆரம்பித்துவிட்டாரே; இவ்வாறு ஆரம்பித்தவர் மணஞ்செய்துகொண்டபிறகு நம்மைக் கவனிக்கவா போகிறார் என்றெண்ணினேன். எண்ணியவுடன் என் மனங் கலங்கிற்று. கண்களினின்றும் நீர் பெருகிற்று. ஒன்றுந்தோன்றாது அழுதுகொண்டே படுத்திருந்தேன். தாங்கள் என்னை வாரியெடுத்து மடியிற்கிடத்திக் கண்ணீரைத்துடைத்து அன்புடனளித்த முத்தத்தால் என்னெண்ணமும், கலக்கமும் இருந்தவிடந்தெரியாது மறைந்து விட்டன. சந்திரகாந்த மண்டபத்துக்கு இனித் தாமதிக்காது போவோம் வாருங்களென்றாள்.

பின், காதலி சுந்தராசூளாமணி கூறியதை யுணர்ந்த இராஜமார்த்தாண்டன் அவளைநோக்கி, என்னுயிரிற்சிறந்த அருமைக்காதலி! உன்னை நான் மணஞ்செய்து கொண்டவன்றே நீயும் நானும் வேறல்லவென்று உன்னிடம் அறிவித்துள்ளேன். இது சத்தியமான வார்த்தையல்லவா? எனக்குப் பிரியமாகவுள்ளது எதுவோ; அதை உனக்கு நான் கொடுக்காமல் அனுபவிக்கமாட்டேன். பொருள் வகையின் மாத்திரமல்ல; மனிதர்கள் வகையிலும் அப்படித்தான். நான், உன்னைவிட்டு வேறொரு பெண்ணை மணந்துவாழ இச்சிக்கவில்லை. என்றந்தையார் எனக்குத் திருமணஞ்செய்ய முயற்சித்துத் திருமணவேலைகள் நடைபெறுகின்றன. இத்திருமணத்தில் எனக்கு இஷ்டமில்லை. இஷ்டமில்லையென்று நான் சொன்னால்; திருமணம் நடைபெறாமல் நிற்கப்போவதில்லை. ஆதலால் திருமணத்தைப் பற்றிய எனதபிப்பிராயத்தை வெளியிற் காட்டாதிருந்து

வருகின்றேன். திருமணத்தில் எனக்கிஷ்டமிருந்தால் திருமணப்பெண்ணினுடைய படத்தை நான் பார்த்திருப்பேன். இஷ்டமில்லாததால், அப்பெண்ணின் படம் இன்னவிதமாக விருக்குமென்று நான்பார்க்கவே யில்லை. எனக்குப் பார்க்க விருப்பமில்லாத படத்தை; நீயும் பார்க்க விரும்பமாட்டாயென்று கருதுகின்றேன். அப்படத்தைப் பார்க்க உனக்கு விருப்பமிருக்குமேயானால், நாளை எடுத்து வந்து தருகிறேன். இந்த அற்ப விஷயத்திற்காக நீ வருந்தி அழலாமா? படத்தை எடுத்து வாருங்களென்றென்னிடம் அறிவித்தால் எடுத்துவந்து கொடுக்கிறேனென்றான்.

மன்னன் புதல்வன் கூறியதைக்கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி யடைந்த சுந்தரசூளாமணி அரசகுமரனை நோக்கி, எனதாருயிர்க் காதல! தங்கள் தந்தைக்குத் தாங்கள் ஒரே புத்திரர். தாங்கள் என்னை மணஞ் செய்திருந்தாலும்; இம்மணம் தங்கள் தந்தை தாய் விரும்பாத காந்தர்வமணந்தானே? இஃதல்லாமல் நான் அரசகுலப் பெண்ணுமல்லவே? ஆதலாற் றங்கள் தந்தையார் செய்துவைக்கும் மணத்தைத் தாங்கள் தடைசொல்லாது செய்துகொள்ளவும் வேண்டும். மணஞ்செய்துகொண்ட அப்பெண்ணுடன் கூடிவாழவும் வேண்டும். அரசர்குலப் பெண்ணுக்குப் பிறக்கும் பிள்ளைக்குத்தானே இராஜவுரிமையுண்டு! அரசர்கள் பலபெண்களை மணஞ்செய்வது தொன்றுதொட்ட வழக்கந்தானே? உங்கள் குலத்து முன்னோராகிய தசரதர், அறுபதினாயிரம் பெண்களை மணந்து அவர்களுடன்கூடி வாழவில்லையா? அப்படியிருக்கும்போது தாங்கள் இரண்டுமனைவியருடன் கூடி வாழக்கூடாதா? தங்களுக்கு இரண்டாவது மணஞ்

செய்துவைக்க எனக்கு இஷ்டமிருந்து வருகிறது. என் இஷ்டத்தைப் பூர்த்திசெய்வதற்காகவாவது தாங்கள்இரண்டாவது மணஞ் செய்துகொள்ளவேண்டும். ஒருவருக்கு இருமனைவிகள் இருக்கவேண்டியது அவசியமென்றே நான் கருதுகின்றேன். சாஸ்திர சம்மதமும் இதற்கிடந்தருமென்பது என்னுடைய துணிபு. அநுபவத்தைப் பார்க்கும்போது பெரும்பாலும் புருடர்கள் இரண்டுமனைவியையுடையவர்களாகவே இருந்துவருகிறார்கள். ஒரே மனைவியை விவாகஞ் செய்துகொண்டு வாழ்பவரைநோக்கிச் சிலர் இதை மறுக்கலாம். அப்படிமறுப்பது நியாயமுடையதாகாது. ஒரே மனைவியை மணந்துள்ள புருஷன் மாதரின்பத்தை அநுபவிக்கும்போது, மணந்த அம்மனைவியினிடந்தான் அநுபவிக்கிறானென்று சொல்லமுடியாது. வேறு பெண்களுடனும் அநுபவிக்கிறான். அப்படி அநுபவிக்கும்போது ஏகதாரம் என்றெப்படிச் சொல்வது? இனி மனிதர்களைவிட்டு உலகமுதல்வர்களாகிய கடவுள்களைக் கவனிப்போம். பரமசிவனுக்குப் பார்வதி, கங்கையென இருமனைவியரிருக்கிறார்கள். திருமாலுக்கு சிதேவி, பூதேவியென இரு மனைவியரிருக்கிறார்கள். பிரமதேவருக்கு வாணி, சாஸ்வதியென இருமனைவியரிருக்கிறார்கள். விநாயகருக்குச் சித்தி, புத்தி முதலாகப் பன்னிரு மனைவியரிருக்கிறார்கள். சுப்பிரமணியருக்கு வள்ளி, தெய்வானையென இருமனைவியரிருக்கிறார்கள். ஐயனாருக்கு பூரணை, புட்கலையென இருமனைவியரிருக்கிறார்கள். இவ்வாறு தெய்வங்களுக்கெல்லாம் இருமனைவியரிருக்கும்போது, மனிதர்களுக்கு இருமனைவியரிருப்பது குற்றமா?

ஆதலால்," தாங்கள் இரண்டாவது மனைவியாக மதனகல்யாணியைத் திருமணஞ்செய்துகொண்டு, மதனகல்யாணியையும்; என்னையும் தங்களுடைய இரண்டு நேத்திரங்களையும்போல பாரபட்சமில்லாது நடத்தும் வண்ணம் வணக்கத்துடன் தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். என்றங்கை மதனகல்யாணியின் படத்தைப்பார்க்க என்னுள்ளம் பெரிதும் விரும்புகிறது. தாங்கள் மறந்துவிடாமல் நாளைய தினம் மேற்படி படத்தை எடுத்துவந்து எனக்களிக்க வேண்டுமென்றாள்.

சுந்தரசூளாமணி சொல்லியவனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்த இராஜமார்த்தாண்டன் அவளை நோக்கி, எனது கண்கட்கு நாளும் விருந்தாகவுள்ள பேரழகுவாய்ந்த என்னருமைக் காதலி! உன்னைவிட மற்றொருபெண் அழகாக விருப்பாளென்பதை நான் நம்பவில்லை. அப்படியொரு பெண் அழகாகவிருந்தாலும்; நான் உன்னைவிடவேறொரு பெண் முகத்தைப் பார்க்கப்போகிறதில்லை. நீ இதுவரை சொல்லிவந்ததை; நீ உண்மையுடன் சொல்லிவந்ததாக நான் நம்பவுமில்லை. இப்போது நடைபெறப்போகுந்திருமண விஷயத்தில் என் மனநிலை எவ்வாறிருக்கின்றதென்று அறிந்துகொள்ளும்பொருட்டே; நீ உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்று பேசியதாகக் கருதுகின்றேன். நீ எவ்வாறு கூறினும் அதுபற்றி யெனக்குக் கவலை சிறிதுமில்லை. என் மனத்தின் மட்டும் உன்மீதுகொண்ட காதல் எந்தக்காலத்தும் மாறப்போவதில்லை. நாளையத்தினம் நீ விரும்பிய படத்தை மறந்துவிடாமற் கொண்டுவந்து தருகின்றேனென்றான். பின்னர் இருவரும் சந்திரகாந்தமண்

டபத்தையடைந்து கலவிப்போரை நடத்த விரும்பி; அப்போரை நடத்தி இராக்காலத்தைக் கழித்தார்கள்.

### சுந்தரசூளாமணி புதுமணப்பெண்ணின் இடது கண்ணைப் பேதித்தல்.

இராஜமார்த்தாண்டன் இரவில் அதிக நேரம் விழித்திருந்ததால், மறுதினங்காலை பத்துநாழிகைவரையும்நித்திரை செய்துக்கொண்டிருந்து அதன் பின்னர் விழித்துக் குதிரைக்கோச்சிலேறிக்கொண்டு அரண்மனைக்குப்போய்ச் சேர்ந்தான். அரண்மனையை யடைந்ததும் ஸ்நாநம், சந்தியாவந்தனம் முதலியவற்றை முடித்துக்கொண்டான். அதுபோது பகற்கடிகை பதினைந்தாயிற்று. பரிசாரகர்கள் பகற் போஜனத்தைக் கொண்டு வந்தார்கள். அரசகுமரான் போசனத்தை முடித்து வந்தோராசனத் தமர்ந்தான். அமர்ந்த மன்னிளங்குமரன், அங்கு நின்ற ஏவலாளனை நோக்கி, நீ சீக்கிரஞ்சென்று முதன்மந்திரியைக்கண்டு மலையாளத்திலிருந்து வந்திருக்கும் இராஜகுமரியின் படத்தை நான் வாங்கிவரச் சொன்னேனென்று சொல்லி அதி சீக்கிரம் வாங்கிக்கொண்டுவாவென்று கட்டளையிட்டான். இராஜகுமரன் உத்திரவைப்பெற்ற ஏவலாளன் விரைந்துசென்று முதன்மந்திரியைக்கண்டு அரசகுமரன் உத்தரவை அறிவித்தான். ஏவலாளன் கூறிய வார்த்தையைக் கேட்ட முதன் மந்திரி மகிழ்கூர்ந்து மதனகல்யாணியின் படத்தைப் பட்டு வஸ்திரத்தில் வைத்துக் கட்டியபடியே எடுத்துக்கொடுத்தான். மந்திரி கொடுத்த படத்தைப்பெற்ற ஏவலாளன் விரைந்து திரும்பிவந்து, அப்படத்தை அரசகுமரானிடம் கொடுத்தான். தன்னை மணக்கும் கணவனுடன் சிலவருஷ

காலம் கூடி வாழாது வருந்தும்படியான துரதிருஷ்டகாலம் மதனகல்யாணிக்கு அது சமயம் நடைபெற்றதால்; அக் காலவலி மதனகல்யாணி படத்தைப்பெற்ற அரசகுமரன் பட்டுத்துணிப் பொதியை நீக்கி அப்படத்தை யெடுத்துப் பார்க்கவொட்டாது தடுத்தது. படத்தைப்பெற்ற இராஜ மார்த்தாண்டன் தயாரிலிருந்த குதிரைக்கோச்சில் படத் துடன் ஏறி பங்கஜவல்லியின் மாளிகையை அடைந்தான். அரசகுமரன் வருகையை எதிர்நோக்கி மாளிகை முகப்பு வாயிற்படியிற் காத்துநின்ற சுந்தரசூளாமணியை அரச குமரன் கண்டு நீ விரும்பிய படம் இதனுள்ளிருக்கிற தென்று படத்தின் கட்டை அவளிடங் கொடுத்தான். அரசகுமரன் கொடுத்த படத்தைச் சுந்தரசூளாமணி முக மலர்ச்சியுடன்பெற்று அவனோடும் மேன்மெத்தையிலுள்ள வசந்தமண்டபத்தை யடைந்தாள். தன் காதலியுடன் வசந்த மண்டபத்தையடைந்த இளமன்னன் அவளை நோக்கி, பெண்கள் நாயகமே! எனக்கு நித்திரை வரு கிறது, படுத்துக்கொள்ளுகிறேன். நீ படத்தைப்பார்த்துச் சந்தோஷமடை யென்று கூறிக் கட்டிலின்மீது படுத்துக் கொண்டான். படுத்துக்கொண்டவன் அயர்ந்து நித்திரை செய்யும்வரை சுந்தரசூளாமணி அவனது கால்களை வரு டிக்கொண்டிருந்து பின்னரெழுந்து படத்துடன் தனி யிடத்துக்கு வந்தாள். படத்தின்மேற் கட்டியிருந்த பட்டு வஸ்திரத்தை அவிழ்த்துப் படத்தைக் கையிலெடுத்துப் பார்த்தாள். மதனகல்யாணியின் அழகைக்கண்டு திகைத் தாள். இவ்வளவு அழகையுடைய பெண், மனிதவர்க்கத் தில் இருக்கிறாளென்று சொல்லுதல் வெறும் பொய். சித்திரமெழுதுவோன் தன் வல்லமையைக் காட்டி இவ்

விதம் ஒருபடம் வரைந்திருக்கிருனென்றே சொல்லவேண்டும். எல்லா வகையிலும் அநுபவசாலியான என்ருயினிடம் இப்படத்தைக்காட்டி உண்மையை அறிவேனென்று கருதினவளாய்ப், படத்துடன் தன்ருயிருக்குமிடத்தை யடைந்து, அம்மா! இதோவிருக்கிறது மதனகல்யாணியின் படமென்று படத்தைப் பங்கசத்தினிடம் கொடுத்தாள். பங்கசம் அப்படத்தை வாங்கிப்பார்த்து இப்படிப்பட்ட ஒரு பெண் இப்பூமண்டலத்தில் இருக்கிருளாவெனப் பெரிதும் ஆச்சரியமடைந்தாள். அருகிலுள்ள தன் மகளை நோக்கினுள். சுந்தர சூளாமணி! இனி நமது பிழைப்பில் மண் விழுந்தது. இத்தகைய அழகிய பெண்ணை மணஞ்செய்துகொள்ளும் மன்னிளங்குமரன் இனியுன்னை விரும்புவாரா? விரும்புவாரென்று நினைப்பது மூடத்தனமல்லவா? இந்தப்படத்தை அரசகுமான் இன்னும் பார்க்கவில்லையென்றே நம்புகிறேன். பார்த்திருந்தால் பார்த்தவன்று முதலே நம் வீட்டிற்கு வருதலை நிறுத்தியிருப்பார். இப்பெண்ணைக் கண்டால் கல்லாற் செய்த புருஷ உருவமும் ஆசைப்படுமே? இவளை மணக்கும் புருஷன் வேறொரு பெண்ணை மனத்தில் நினைப்பானு? நமக்கு நல்லகாலமிருப்பதாற்ருன் அரசகுமரன் இன்னும் இப்படத்தைப் பார்க்காதிருந்து வருகிருர். ஆதலால், நாம் நினைத்தபடி நமது சூழ்ச்சியைச் செய்வோம். அதன்மேல் தெய்வச்செயல் எப்படி நடந்தாலும் நடக்கட்டுமென்று சொல்லி அப்படத்தில் காணப்படும் மதனகல்யாணியின் இடதுகண் மத்தியிலுள்ள கரிய பாவை விழியைத் தன்னுடைய கைவிரல் நகத்தால் சாதுரியமாகச் சுரண்டி ஒரு பெரிய கடுகுப்பிரமாணம் வெள்ளையாக்கினுள். சுந்தர

சூளாமணி அதனைப்பார்த்துத் தன்னன்னையின் சாமர்த்தி யத்தை மெச்சிக்கொண்டு தாயிடமிருந்த படத்தைப் பெற்று; அப்படத்துடன் றன்காதலன் நித்திரைசெய்யு மிடத்தை யடைந்தாள். அடைந்த வப்பொழுதும் அரச குமாரன் நித்திரையிலிருந்தான். அரசகுமாரன் நித்திரை செய்யுங் கட்டிலின் அருகாமையிலுள்ள சோபாவில் சுந்தர சூளாமணி இருந்துகொண்டு, தன் கையிலுள்ள படத்தைப்பார்த்து ஏ பிரமதேவா! உனது நெஞ்சில் இரக்கமென்பதில்லையா? இவ்வளவு சுந்தரமுள்ள பெண் ணைச் சிருஷ்டித்த நீ; அவளிடது கண்ணை ஊனத்துக் குள்ளாக்கலாமா? ஊர்வசியைச் சிருஷ்டித்து அவளழகைக் கண்டு காதலித்து அவமானமடைந்த நீ, இவளிடது கண்ணை ஊனஞ் செய்யாது படைத்தால் இவளையுங் காத லித்துத் தொடர்ந்து அவமானமடைய வேண்டுமெனக் கருதி இடது கண்ணை ஊனஞ் செய்தனையோ? அழகுள்ள வர்களையும், அழகில்லாதவர்களையும், அங்கவீனர்களையும், கோரரூபமுள்ளவர்களையும் நீ சிருஷ்டிக்கின்றபடியால்; உனக்கு ஸ்திரபுத்தியில்லைபோலும்? ஸ்திரபுத்தியில்லாத உன்னை நோவதில் யாது பிரயோஜனம்? முன் சென்மத் தில் செய்த கன்மபலனுக்குத் தக்கவாறே, ஒருவர் இந்த சென்மத்தில் கல்வி, செல்வம், அறிவு, சரீரம், அழகு, சுகமுதலியவற்றைப் பெறுகின்றார்களென்று சாஸ்திரங் கள் கூறுகின்றன. அரசன் புத்திரியாகப் பிறக்கவும், அழகுடையவளாகப் பிறக்கவும், பூர்வ சென்மத்திற் புண்ணியஞ் செய்துள்ள மதன கல்யாணி, இடது கண் ஊனமாதற்கு அதே சென்மத்தில் என்ன பாவஞ்செய் தாளோ அதை யாரறிவார்? பூர்வ சென்மத்திற் செய்த

புண்ணிய பாவத்தினாலேயே, ஒருவருக்கு இந்த ஜென்மத்தில் நன்மை, தீமைகள் சித்திக்கிறதென்றிருக்கும் போது, நாம் பிரமன் மீது பழிசுமத்துவது அறியாமையேயாகும். இஃதிருக்கட்டும், உலகமெங்கும் புகழ்பரப்பி அரசுபுரியும் நமது சோழமன்னருடைய சமஸ்தானத்தில் எத்தனையோ வித்வான்களும், சோஸியர்களும். அறிவிற் சிறந்த மந்திரிகளுமிருக்கின்றார்களே! அவர்களில் ஒருவருக்காவது இப்பெண்ணினுடைய கண்ணூனந் தெரியவில்லையா? பேரழகு வாய்ந்த அரசபுத்திரருக்கு இடதுகண்ணூனமுள்ள ஒரு பெண்ணைத் திருமணஞ் செய்துவைப்பது முறையாவெனத் தனக்குத்தானே உரத்த தொனியிற் கூறிக்கொண்டிருந்தாள்.

சுந்தரசூளாமணி இவ்வாறு கூறிக்கொண்டிருந்த சத்தத்தால் அரசகுமாரன் விழித்தெழுந்து,பெண்ணே! என்ன புலம்புகிறாயென்றான்? அரசகுமாரன் இவ்வாறு வினவியவுடன் சுந்தரசூளாமணி விரைந்தெழுந்து கட்டிலண்டைபடத்துடன் போய் நின்றுகொண்டு, என்னருமைத்துரையே! இந்தப்படத்தைப் பாருங்களென்று அவன்முகத்தின்முன் படத்தைக்காட்டினாள். அதுகேட்ட இளவரசன், பெண்ணே! படத்தைப்பார்க்கிற திருக்கட்டும்; அதற்கென்னகுறை, அதைமாத்திரம் சொல்லென்றான். தன்காதலன் மாற்றங்கேட்ட தாசிபுத்திரி, மன்னா! குறையொன்றுமில்லை. படம் நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் இடதுகண் மாத்திரந்தான் பொட்டை. தங்களுக்குப் பொட்டைப்பெண்ணை மணந்துகொள்ள இஷ்டந்தானே யென்றாள்? சுந்தரசூளாமணிவாக்கை வேதவாக்

காக மதித்திருந்த மன்னன் குமரன்; அவள் கூறியதுணர்ந்து, மாதரசி! கொடு பார்க்கலாமென்று படத்தைவாங்கி அதனைப்பார்க்காமலே துண்டு துண்டாக உடைத்தெறிந்தான். அரசகுமரன் செய்த கொடுஞ்செயலைக்கண்ட தாசி புத்திரி உள்ளுக்குள் பெருமகிழ்ச்சியடைந்து; அம்மகிழ்ச்சியை வெளிக்காட்டாது அவனை நோக்கி, மன்னவா! இவ்வாறு படத்தை உடைத்தெறியலாமா வென்றாள்? மோசக்காரத் தாசிபுத்திரியின் வார்த்தையைச் செவியேற்ற முட்டாள் மன்னன் அவளைநோக்கி, பெண்ணே! இதுசமயம் ஒன்றும் பேசாதே. என்மனம் பெரிதும் வருந்துகிறது. இனித்திருமணம் நிற்கப்போகிறதா? நான் செய்துகொள்ள மாட்டேனென்று கூறினால் விடுவார்களா? பொட்டைப்பெண்ணை மணஞ்செய்துகொள்ளும்படி பிரமதேவன் என்றலையில் விதித்திருக்கும்போது யார்தான் என்னசெய்துகொள்ள முடியும்? ஆயினுமென்ன? நான், அவளுக்குத் திருமங்கிலியதாரண மட்டுந்தானே செய்யப்போகிறேன். என் வாழ்நாளில் நான் அவளைக் கண்ணெடுத்துப் பார்க்கப் போகின்றேனா? இதனால் எனக்கு யாதுகுறை? நான் எதற்கு வருந்தவேண்டும்? என்று கூறினான். இவ்வாறு கூறிய அரசகுமரன், சுந்தரசூளாமணியைப் பார்த்து, பெண்ணே! நீ புத்திசாலி. படத்தைக் கொண்டுவரும்படி யென்னைவற்புறுத்தி அதனைப்பெற்று, அதிலுள்ள குற்றத்தைக் கண்டுபிடித்துச் சொன்னாயல்லவா? இதற்கு உனக்கு யானென்ன கைமாறு செய்யப்போகிறேன் என்று கூறி, அவளைக் கட்டிப்பிடித்துக்கொண்டு அவளது கபோலங்களில் மாறி மாறி முத்தமிட்டான். அதுகாலை சுந்தரசூளாமணி அவனைநோக்கி, மன்னவா! படத்தை உடைக்காமல்

வைத்திருக்கக்கூடாதா வென்றாள்? சுந்தரசூளாமணி சொன்ன வார்த்தையைக்கேட்ட அரசகுமரன் அவளை நோக்கி, பெண்பாவாய்! குருடர்களையும், அவர்கள் படத்தையும் பார்க்கக்கூடாது. பார்ப்பதனால் அளவில்லாத கஷ்ட நஷ்டங்களேற்படும். அதனாற்றான் உடைத்துவிட்டேனென்றான். அதுகேட்ட கணிகை புத்திரி அவனை நோக்கி, அரசரேறே! திருமணம்நடைபெறும்போது மதன கல்யாணியின் முகத்தைத் தாங்கள் பார்க்கத்தானே வேண்டும். அது தோஷமில்லையா வென்றாள்? அதனைக்கேட்ட அரசகுமரன், நான் ஒருபோதும் பார்க்கமாட்டே னென்றான். ஒருபோதும் பார்க்கமாட்டீர்களாவென்று சுந்தர சூளாமணி வினவினாள்? உறுதியாகப் பார்க்கமாட்டே னென்று அரசகுமரன்பதில்கூறினான். அதுசமயம் சூரியன் அஸ்தமித்தான். அதுகண்ட இளமன்னன் தன் காதலியை நோக்கி, பெண்ணே! நான் அரண்மனைக்குப்போய் உணவை முடித்துக்கொண்டு விரைந்து வந்துவிடுகிறேனென்று சொல்லிக்கொண்டு கீழிறங்கிவந்து குதிரைக்கோச்சிலேறிக் கொண்டு அரண்மனையை யடைந்தான். அரசகுமரன் சென்றபின்னர் சுந்தரசூளாமணி உடைந்த படத்துண்டுகளை யெல்லாம் பொறுக்கிக்கொண்டுவந்து தன்றாயிடங் காட்டி நடந்த விருத்தாந்தங்களைக் கூறி அம்மா! நீ செய்த சூழ்ச்சி சரியான சூழ்ச்சியென்று தன்றாயைப்புகழ்ந்து அதிக மகிழ்ச்சி யுற்றிருந்தாள்.

### திருமணம் நடைபெறல்.

அரசகுமரன் அரண்மனையை யடைந்ததும் முதன் மந்திரியான சற்கீர்த்திவந்து கண்டு, எங்களுடைய நேத்

திரத்தையொத்த இளவரசே! நாளைச் சூரியோதயாதி இரண்டு கடிகைக்குமேல் திருமணத்துக்குப் புறப்பட நாள் பார்த்து; அதற்குரிய காரியங்களெல்லாம் நடைபெறுகின்றன. தாங்கள் உதயத்துக்குள் ஸ்நானம், சந்தியாவந்தனம் முதலியவற்றை முடித்துக்கொண்டு தயாரிலிருக்க வேண்டுமென்று விண்ணப்பித்துக் கொள்ளுகிறேனென்றார். இராஜமார்த்தாண்டன் அதனைக்கேட்டுச் சரியென்று கூறினன். சற்கீர்த்தி உடனே விடைபெற்றுப் போய் விட்டார்.

சற்கீர்த்தி சென்றவுடன் இராஜமார்த்தாண்டன் சந்தியாவந்தனம் உணவு முதலியவற்றை முடித்துக்கொண்டு கோச்சிலேறிச் சுந்தரசூளாமணி வீட்டிற்குச்சென்று; வழக்கம்போற் சுந்தரசூளாமணியுடன் சந்திரகாந்தமண்டபத்தை அடைந்தான். அடைந்தவன் றன்காதலியை நோக்கி, என தருமைக் கண்மணி! நாளைக்காலையில் திருமணஞ்செய்யப் போகிறதற்குப் பிரயாணம் நிச்சயஞ் செய்திருக்கிறதாக முதன்மந்திரி யறிவித்தார். சுமார் பதினைந்து தினங்கள் வரை உன்னை நான் பிரிந்திருக்க வேண்டியதிருக்கிறது. அதுவரை நீ கவலையின்றிச் சுகமாக இருக்கவேண்டுமென்றான். தன் காதலன் கூறிய வார்த்தையை யறிந்த சுந்தரசூளாமணி அவனைநோக்கி, என்றுரையே! தங்களைவிட்டு நானெவ்வாறு பிரிந்திருப்பேன். இவ்வாறு பிரிந்திருக்கும் வண்ணம் பிரமதேவன் என்றலையிலெழுதினனோ? நான் வருந்துவதால் யாது பிரயோஜனம்? தாங்கள் எவ்வாறு போகாதிருக்கமுடியும்? தாங்கள் போய்வருமளவும் நான் உணவுண்ணப் போகிறதில்லை. நீங்கள் குறித்த காலத்துக்

குள் விரைந்துவந்து சேரவேண்டுமென்றாள். அதனைக் கேட்ட அரசகுமாரன் சுந்தரசூளாமணியை நோக்கி, பெண்ணே! உன்னைப்பிரிவதில் நான் உன்னைவிடப் பதின்மடங்கு வருந்துகிறேன். பிரியாதிருக்க முடியவில்லையே. நான் பிரிவதைப்பற்றி நீ கவலைப்படாதே. நான் மலையாள தேசஞ்சென்றாலும் என் னுயிர் உன்னிடந்தானிருக்குமென்று சொல்லி அவளை இருக ஆலிங்கனஞ்செய்து முத்தமிட்டு இன்பத்துறையில் முன்றினங்களைவிட அதிகவார்வங்கொண்டு இராப்பொழுதைப்போக்கினான். அன்றிரவு இருவரும் நித்திரை செய்யவில்லை. புலரிக்காலையில் இராஜமார்த்தாண்டன் சுந்தரசூளாமணியிடம் பிரியா விடை பெற்றுப் பிரிந்து அரண்மனையை யடைந்து ஸ்நானம், சந்தியாவந்தனம் முதலியவற்றை முடித்துக்கொண்டு பிரயாயாணத்துக்குத் தயாரிலிருந்து கொண்டிருந்தான். அதுகாலை, சற்கீர்த்தியின் புத்திரன் சுகுமாரனும், மற்றமந்திரிகுமாரர்களுந் தங்களை அலங்கரித்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தார்கள். மந்திரிகுமாரர்கள் வந்துசேர்ந்தவுடன்; சற்கீர்த்தி ஆடையாபரணப் பெட்டிகளுடனும், அலங்காரப் பணியாளர்களுடனும் வந்து சேர்ந்தார். அலங்கரிப்பவர்கள், உடனே சிறந்த ஆடையாபரணங்களைக் கொண்டு இராஜமார்த்தாண்டனை மணக்கோலஞ்செய்வித்தார்கள். அலங்காரஞ்செய்து முடிந்ததும் இரத்தினகசிதமான சிறந்த இரதம் ஒன்றுவந்தது. அந்த இரதத்தின் மீது, சுகுமாரன் கைலாகு கொடுத்து உடன்வர இராஜமார்த்தாண்டன் சென்று ஏறிக்கொண்டான், மந்திரிகுமாரர்கள் அனைவரும் தங்கள் தங்களுடைய ஊர்திகளில் ஏறிக்கொண்டார்கள், அதுகாலை கல்யாண முரசு முதலிய மங்

கல வாத்தியங்கள் சப்தமேகங்களும் ஒன்றுசேர்ந்து முழங்குவதுபோல ஒலித்தன. குடை, கொடி, சாமரை, சுருட்டி, ஆலவட்டம் முதலிய விருதுகள் ஆயிரக்கணக்காக எழுந்தன. அவைகளாற் சூரியனொளி மறைந்தது. ஆடவர்களும், பெண்களும் சிறந்த அலங்காரத்தோடு யானைகளிலும், ஒட்டகங்களிலும் ஏறிக்கொண்டு புறப்பட்டார்கள். அநேக சிற்றரசர்களின் இரதங்கள்சூழ, நடுநாயகமாக விக்கிர சோழமகாராஜனுடைய இரதம் புறப்பட்டது. இராஜஸ்திரீகள் மூடுபல்லக்குகளில் புறப்பட்டார்கள். மந்திரிமார்களில் சிலர் யானைகளின்மீதும், சிலர் இரதங்களின் மீதும் ஏறிச்சென்றார்கள். இராஜமார்த்தாண்டனுடைய இரதம் இக்கூட்டத்தின் மத்தியில் மங்கலமாதர்களின் வாழ்த்தொலியுடன் புறப்பட்டுச்சென்றது. இவ்வித ஆடம்பரத்துடன் புறப்பட்டுத் திருமணக்கூட்டஞ் சென்றகாலை எழுந்த தூசியால் சூரியன் தேர்ப்பரிகள் செல்லுந்திசையறியாது மயங்கின. உயர்ந்த ஆடம்பரத்துடன் திருவாரூரை விட்டுப்புறப்பட்ட திருமணக்கூட்டம், அதிக குதூகலத்துடன் புறப்பட்ட ஐந்தாவது தினத்திற் கொடுங்கோளூரையடைந்தது. விக்கிரமசோழன் பரிவாரங்கள் சூழவருவதையறிந்த மலைநாட்டு மன்னனான குகன் சிலைராயன், தனது பரிவாரங்களுடன் எதிர்சென்று கண்டு விக்கிரமசோழமகாராஜனையும், அவனது குமாரனான மாப்பிள்ளையையும் உபசாரவார்த்தைகள் கூறி அதிக ஆடம்பரத்துடன் தனது அரண்மனைக்கு அழைத்துவந்து சேர்ந்தான். இவ்வாறு உபசரித்து அழைத்துவந்த மலைநாட்டுமன்னன், விக்கிரமசோழமகாராஜனுக்கும், அவனுடன்வந்த மந்திரி, பிரதானி சேனாதிபதி முதலிய சகலருக்கும் தங்குவதற்குத் தனித்

தனி, உயர்ந்த விடுதிகள் அளித்துத் தேவாமிர்தமும் இதற்கு நிகரில்லை யென்று சொல்லும்படியான உணவுகளையும் சந்தன தாம்பூலாதி வகையராக்களையுங் கொடுத்துச் சிறப்பாக உபசரித்தான். மலையாளமன்னன்செய்த உபசாரத்தைக்கண்டு சோழநாட்டுமன்னனும், அவனது பரிவாரங்களும் அதிகமகிழ்ச்சி யடைந்தார்கள்.

திருமணத்திற்கு ஏனைய தேச அரசர்கள் பலரும் தங்கள் தங்கள் சைனியங்களுடன் வந்திருந்தார்கள். சனங்களின் ஆரவாரமும், யானைகளின் கர்ச்சனையும், குதிரைகளின் கனைப்பொலியும் இராப்பகல் நிறைந்து விம்மின. ஆடவர், பெண்களிருவரும் கல்யாணத்தைப் பார்க்கப் பேரார்வங் கொண்டிருந்தார்கள். மாப்பிள்ளை வந்துசேர்ந்த மறுதினம் திருமணத்தினமாக விளங்கிற்று. அன்று புலரிக் காலையிலிருந்தே பலவித வாத்தியங்களும் ஒலித்துக்கொண்டிருந்தன. உயர்ந்த ஆடையாபரணங்களாற் சிறந்த அலங்காரஞ்செய்யப்பெற்றமாப்பிள்ளையைப் பன்னிரண்டு வெள்ளைப் புரவிகள் பூட்டப்பட்ட இரத்தின கசிதமான உந்நத இரதத்தில் ஏறிவீற்றிருக்கச்செய்து திருமண மண்டபத்திற்கு நகர்வலமாக அழைத்துச் சென்றார்கள். அவ்வூர்வலத்தின் முன்னும், பின்னும் பல தேச அரசர்கள் சூழ்ந்து சென்றார்கள். ஊர்வலத்தின் முன்னர் யானைகளும், ஒட்டகங்களும் அலங்காரத்துடன் அணியணியாகச் சென்றன. குதிரை வீரர்கள் வரிசை வரிசையாகச் சென்றார்கள். பலவகை வாத்தியங்களொலித்தன. நகரமாந்தர்கள் மாப்பிள்ளையின் அழகைக்கண்டு விசேஷ மகிழ்ச்சியடைந்தார்கள், பேதை, பெதும்பையொழிந்த

மற்றப்பருவ மாதர்கள் மாப்பிள்ளையின் அழகைக்கண்டு மனநிலையழிந்தார்கள். இவ்வித ஆடம்பரத்துடனெழுந்த ஊர்வலம், திருமணமண்டப வாயிலையடைந்தவுடன், மாப்பிள்ளையை இரதத்தினின்றும் இறங்கச்செய்து சிறந்த உபசாரத்துடன் திருமண மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார்கள். மாப்பிள்ளை திருமண மண்டபத்தை யடைந்து மணவறையை யுற்று ஆசனத்தில் அமர்ந்ததும், திருமணப் பூர்வாங்கக் கிரியைகள் அந்தணர்களால் தொடங்கப்பெற்று நடைபெற்றன. அதுகாலை அரசர்கள், மந்திரிகள், பிரதானிகள், சேனாதிபதிகள், இவர்களது புத்திரர்கள் முதலிய சகலரும் அம்மண்டபத்தில் நிறைந்து வீற்றிருந்தார்கள். வேதியர் கூட்டம் ஒரு புறத்தில் நிறைந்திருந்தது. திருமண வோமம் ஆரம்பமாயிற்று. வேதியர்கள் வேதமந்திரங்களைக் கூறி ஓமகுண்டத்தில் நெய், சமித்து முதலியவைகளை ஆகுதி செய்தார்கள். ஆகுதி செய்தவனைத்தையுமுண்டு ஓமாக்கினி வலஞ்சுழித் தெழுந்தது. அதுசமயம் அரசகன்னியர்களும், தோழியர்களும் உயர்ந்த ஆடையாபரணங்களால் சிறந்த அலங்காரத்தைப்பெற்ற மணப்பெண்ணை அழைத்துக்கொண்டு வந்து திருமண மண்டபத்தையடைந்து மணவறையில் மாப்பிள்ளையின் வலது புறத்தில் உட்கார வைத்தார்கள். பலவகை வாத்தியங்களும் ஏழுகடல்களும் முழங்குவது போல முழங்கின. வேதியர்கள், திருமணச் சடங்கை மந்திரலோபம், கிரியாலோபமில்லாது செய்து திருமாங்கல் யத்தைத் தங்கத் தாம்பாளத்திற் பட்டு வஸ்திரத்தின்மீது வைத்துத் திருமண மண்டபத்தில் வீற்றிருக்கும் பலர்களிடத்தும் ஆசீர்வாதத்துக்கு அனுப்பினார்கள். திருமண

மண்டபத்திலுள்ள பலருடைய ஆசிர்வாதத்தையும் பெற்றுத் திருமாங்கல்யம் வந்ததும், அந்தணர்கள் திருமாங்கல்யதாரண மந்திரத்தை உச்சஸ்வரத்தில் கூற, பெண்கள் மங்கலகீதம்பாட, வேதியர், அரசர்முதலிய அனைவரும் புஷ்பத்துடன் கலந்த அட்சதைமாரியைப் பொழிய, பல வாத்தியங்களுந் தாம் தாமென்று முழங்க, கெட்டிமேளந் திடுதிடென ஆர்ப்ப, இராஜமார்த்தாண்டன் மதனகல்யாணியின் றிருக்கழுத்தில் திருமாங்கல்யத்தைத் தனது கரங்களாற் பூட்டினன். திருமாங்கல்யதாரணமானவுடன் அந்தணர்களுக்குப் பலதானம் வழங்கப்பட்டன. அதன் பின்னர் மலையாள மன்னன் தனது அருமைப் புத்திரிக்கு விளைவுடன் கூடிய ஐஞ்ஞூறு கிராமங்களையும், ஆபரணம் நிறைந்த நூறு பேழைகளையும், வஸ்திரங்கள் நிறைந்த முந்நூறு பெட்டிகளையும், இரண்டுகோடி வராகன்களையும், வெள்ளியினாலும், தங்கத்தினாலும், செய்யப்பட்ட பாத்திர வகைகள் ஒவ்வொன்றிலும் நூறு பாத்திரங்களையும், நூறு பாவை விளக்குகளையும், நூறு தோழிப்பெண்களையும், ஐஞ்ஞூறு குதிரைகளையும், ஆயிரம் யானைகளையும், இருநூறு ஒட்டகங்களையும், நூறு பாற் பசுக்களையும் சீதனமாக அளித்தான். மேலே கூறப்பட்ட சீதனங்களை அளித்ததுடன், தனது மருகனாகிய இராஜமார்த்தாண்டன் ஏறிச்சவாரி செய்தற்காக விலைமதித்தற்கரிய உயர்ந்த பஞ்சகல்யாணிக் குதிரையொன்றையுமளித்தான். சீதனங்கள் வழங்கிமுடிந்ததும், பெண்ணை மாப்பிள்ளையின் இடது பாகத்தில் இருக்கும்வண்ணம் மாற்றிவைத்து, அதன்பின் நடைபெறவேண்டிய சடங்குகளையுஞ் செய்து, பின்னர் மாப்பிள்ளை பெண்ணிருவரும் ஓர் அம்பின் இருதலைப்பை

யும் பிடித்துக்கொண்டு மூன்றுமுறை ஓமாக்கினியை வலஞ் செய்து நின்று; அங்கு அலங்காரஞ் செய்திடப்பட்ட அம்மியின்மீது மதன கல்யாணியின் பாதத்தை இராஜமார்த்தாண்டன் றனது கரங்களாலெடுத்துவைத்து; மதனகல்யாணிக்கு அருந்ததியைத் தெரிசனஞ்செய்து வைத்து; அதன்பின்னர் மாப்பிள்ளையும், பெண்ணும் ஓமாக்கினியில் பொரியிட்டுப் பூரண ஆகுதியை நிறைவேற்றினார்கள். அதன்மேல் மணமகன், மணமகளிருவரும் திருமண மண்டபத்திற் குழுமியிருந்த வேதியர்களுக்கும், அரசர்களுக்கும் நமஸ்காரஞ்செய்து ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டு திருமண மண்டபத்தை நீங்கி அரண்மனையுள் தனியறையிற் சென்று வீற்றிருந்து மதுபர்க்கம் அருந்தினார்கள். இவ்விதம் சிறப்பாகத் திருமணம் நடைபெற்று முடிந்தது. திருமணம் நடைபெற்றது முதல் ஐந்து தினங்கள் வரை சதிர் கச்சேரிகளும், சங்கீதக் கச்சேரிகளும், கதாக்காலட்சேபங்களும், ஆசியக்கச்சேரிகளும், நடைபெற்றதுடன் ஐந்தாவது தினமாகிய கடைசித் தினத்தில் மணமகன்,மணமகள் இருவரையும் அலங்கரித்து அழகிய இரதத்தில் வைத்து ஊர்வலம் நடத்தினார்கள். அலங்கரிக்கப்பட்ட யானை, குதிரை, ஒட்டகம், குடை, கொடி, சாமரை, ஆலவட்டம், சுருட்டி முதலிய விருதுகளும், ஊர்வலத்தின் முன்னர் வரிசை வரிசையாகப் புறப்பட்டன. அரசர் முதலிய பலரும் சூழ்ந்து வந்தார்கள். உயர்ந்த பல வாத்தியங்கள் முழங்க, சிறந்த பாணவேடிக்கையுடன் ஊர்வலம் நடைபெற்றது. திருமணத்துக்கு வந்திருந்த சகலருக்கும் உயர்ந்த அறுசுவைப் போனகங்களும், பலகாரங்களும், பழங்களும், சந்தனாதி வாசனைத்

திரவியங்களும், தாம்பூலவர்க்கங்களும் வழங்கப்பட்டன. மலையாள மன்னன், சோழமன்னன் இருவருடைய குறை வில்லாத உபசாரத்தால் திருமணத்துக்கு வந்தாரனைவரும் பெரிதும் மகிழ்ந்தார்கள். ஆருவது தினம் திருமணத் திற்கு வந்த பலரும், சோழமன்னனிடமும், மலையாள மன் னனிடமும் சொல்லிக்கொண்டு தத்தம் ஊர்களுக்குப் புறப் பட்டார்கள். புறப்பட்ட சகலரையும் பழம், பட்சணம், சந்தனம், தாம்பூலம், புஷ்பமளித்து உபசரித்தனுப்பி வைத்தார்கள். திருமணத்துக்கு வந்திருந்து சொல்லிக் கொண்டு புறப்பட்ட ஆண் பெண் அனைவரும் மணமகன், மணமகள், இருவருடைய வனப்பைப்பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டு சென்ருர்கள். இவ்வாறு திருமணத்துக்கு விஜயஞ்செய்த பலருஞ்சென்றபின், மலையாள மன்னன், தனது பரிவாரங்களும், சோழமன்னன் பரிவாரங்களும் சூழத் தம்பதிகளை அழைத்துக்கொண்டு சோழபூபதி யுடன் திருவாரூருக்குப் பிரயாணமாகி; பிரயாணமான ஆருவது தினம் திருவாரூரையடைந்தான். மணத் தம் பதிகள் திருவாரூரை அடைந்ததும், சிறந்த அலங்காரத் துடன் ஊர்வலமாகச்சென்று அரண்மனையையடைந்தார் கள். சோழமன்னன் மலையாள மன்னனையும், அவனது மந்திரி பிரதானி சேனதிபதிகளையும், மற்றைய பரிவாரங் களையும் விசேஷ விருந்துகள் நடத்தி உபசரித்தான். மலை யாள மன்னன் சில தினங்கள் தனது பரிவாரங்களுடன் சோழமன்னன் விருந்தினனுக; அவனுடைய அரண் மனையிற் றங்கியிருந்து, பின்னர் சோழமன்னன் அளித்த விசேஷ வெகுமதிகளைப் பெற்றுப் பரிவாரங்களுடன் தனது நகரையடைந்தான், இவ்வாறு இராஜமார்த்தாண்

டன் திருமணம் சிறப்பாக நடைபெற்றுப் பூர்த்தியடைந் தது. இவ்வகை ஆடம்பரமான திருமணத்தில் இராஜ மார்த்தாண்டன் மதனகல்யாணியின் முகத்தைப் பார்க்கா மலே இருந்துவந்தான். சுந்தரசூளாமணியின்மீது கொண் டுள்ள காதலே; அவள் செய்த மோசத்தையறியாது, அவள் கூறியதே உண்மையென்று கடைப்பிடித்து பொட்டையாகிய மதனகல்யாணியைப் பார்க்கக்கூடாது என்னும் கொள்கையுடையவனாய்த், தன் றந்தை தனக்குப் பொட்டைப்பெண்ணை மணஞ்செய்து வைப்பாராவென்று கூட ஆலோசித்துப்பாராது இராஜமார்த்தாண்டனை இவ்விதம் இருக்கச்செய்தது. "தையலார்மயலிற்பட்டார் தமக்கொரு மதியுண்டாமோ" வென்னும் ஆன்றோர் வாக்கை இராஜ மார்த்தாண்டன் உறுதிப்படுத்தினன். சிவமணங்கமழுஞ் செல்வத் திருவாரூர் வீதியில் இராஜமார்த்தாண்டனும், மதனகல்யாணியும் ஒரே இரதத்தில் வீற்றிருந்து ஊர்வல மாகச்சென்ற காலத்து, அந்நகர மாந்தர் பலரும் மணமக னையும், மணமகளையுங்கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்தார் கள். நல்லமரத்திற் புல்லுருவிபோன்ற சுந்தரசூளாமணியும், அவள்தாய் பங்கசவல்லியும் பார்த்துப் பெருந்துக்கத்தை யடைந்தார்கள். அடுத்த ஆடவர் குடியை அடியோடழித் தொழிக்கும் தாசி, தன் வசமுள்ள செல்வன் வேறொரு பெண்ணுடன் கூடியிருக்கக் கண்டால் வருந்துவது இயற்கைதானே.

இராஜமார்த்தாண்டன் சுந்தரசூளாமணியைக் காணல்,

சுகுமாரன் இராஜமார்த்தாண்டனைச் சந்தித்து எங்கள் இளவரசே! தாங்கள், தங்கள் மாமனார் ஊருக்குப்போகும்

வரை சுந்தரசூளாமணி வீட்டிற்குப் போகாதிருத்தல் வேண்டும். இந்த விஷயத்தில் என்சொல்லை மறுக்கமாட்டீர்களென்று கருதுகின்றேனென்றான். அஃதுணர்ந்த இராஜமார்த்தாண்டன் சுகுமாரனை நோக்கி, எனதுகரத்தை யொத்த நண்ப! நீ கூறியவாறே செய்கிறேனென்றான். இளவரசன் கூறியதுகண்ட சுகுமாரன், மிகமகிழ்ந்து தன் னில்லஞ் சேர்ந்தான்.

சுகுமாரன் கேட்டுக்கொண்ட தினமும், திருமணஞ் செய்துகொண்டு திருவாரூரை யடைந்த தினமுமொன்றே. மேற்படிதினம் இரவு பதினைந்து கடிகையளவில் இராஜ மார்த்தாண்டன், தனக்கு அந்தரங்கமுள்ள ஏவலாள் ஒரு வனுடன் மாறுவேடந் தரித்துக்கொண்டு சுந்தரசூளாமணி வீட்டையடைந்தான். சுந்தரசூளாமணி வீட்டின் முகப் புக் கதவு சாத்தப்பட்டிருந்தது. அதுகண்ட மன்னன் தனது கரத்தாற் கதவைத்தட்டினன். பத்து நாழிகை வரையும் அரசகுமரன் வருவானென எதிர்பார்த்திருந்து; அவன் வராமையால் மனமிக வருந்திக் கதவைச்சாத்தித் தாட்போட்டுச் சயன அறையை யடைந்து கட்டிலிற் படுத் துக்கொண்டு பலப்பல விதமாக ஆலோசனை செய்து கொண்டிருந்த சுந்தரசூளாமணி விரைந்தெழுந்து வந்து உட்புறம் கதவின் சமீபத்தில் நின்றுகொண்டு கதவைத் தட்டினது யாரென்றாள்? மாறுவேடம் பூண்டிருந்த மன் னன் குமரன், அவ்வார்த்தையைக்கேட்டு வேற்று மனித ரல்ல கதவைத்திறவென்று தன்குரலை மாற்றிக்கொண்டு சொன்னன். அவ்வார்த்தையைக்கேட்ட சுந்தரசூளாமணி உடனே கதவைத்திறந்தாள். மந்திரியைப்போல மாறு

வேடம் பூண்ட மன்னன் குமாரனைக்கண்டாள். வந்தவர் சோழராஜன் மந்திரிகளிலொருவரென்று கருதினாள். கருதியவுடன், இராசகுமாரனை நோக்கி, ஏன் கதவைத் திறக்கச் சொன்னீர்களென்றாள்? சுந்தரசூளாமணி வார்த்தையைக் கேட்ட இராஜமார்த்தாண்டன் அவளைப்பார்த்து,பெண்ணே! உன்னைக் காதலித்துவந்த என்னைப்பார்த்து இவ்வாறு கேட்கலாமா? இவ்வாறு கேட்பது தாசிகளுடைய வழக்க மல்லவே யென்றான்? இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் சுந்தரசூளாமணி மனதிற் சினந்தோன்றிற்று, சினந் தோன்றப்பெற்ற அவள் உடனே தன்னெதிர்நின்ற இராஜ மார்த்தாண்டனைக் கோபக்குறிப்புடன் நோக்கி, நீர் யார்? என்னவார்த்தை சொன்னீர். நான் இந்நாட்டையாளும் இளவரசருடைய மனைவியென்றுமக்குத் தெரியாதா? சீக்கிரம் இவ்விடத்தைவிட்டுப்போம். இல்லையானால் உமக்குக் கஷ்டமுண்டாகுமென்று கூறினாள். இராஜமார்த்தாண்டன், தன் காதலி கோபத்தோடு கூறிய அவ்வார்த்தைகளைக்கேட்டு உள்ளுக்குள்ளே பெரிதுமகிழ்ந்து புன்முறுவல் தோன்ற அவளைப்பார்த்து, பெண்ணே! உன்னுடைய நாயகன் உன்னைவிடப்பேரழகு வாய்ந்தவோர் பெண்ணை மணஞ்செய்துகொண்டார். இனி உன் வீட்டிற்கு அவர் வரமாட்டார். தாசிகள் ஒருவருக்குச் சொந்தமல்ல? விரும்பிவந்த ஆடவர்களுக்கெல்லாம் சொந்தம். ஆதலாற்றான் தாசிகளுக்குப் பொதுப்பெண்களென்ற பெயரை அறிஞர்கள் சூட்டியிருக்கின்றார்கள். பொதுப்பெண்ணாகிய உன் வீட்டிற்குவந்த என்னை நீ புறக்கணிக்கலாமா? இராஜமார்த்தாண்டனை விடப் பத்துபங்கு மேலாக உன்னை நான் வைத்துக்கொள்ளுகிறேன். நீ, என்னை நாயகனாக

அங்கீகரித்துக் கொள்ளவேண்டுமென்றான். சுந்தர சூளா மணி இவ்வார்த்தையைக் கேட்டவுடன் முன்னையினும் கோப மிகுந்தவளாய், என் நாயகன் வராது போனாற் போகட்டும். நீர் இங்கு நிற்க வேண்டாம் போய் வாருமென்று சொல்லிவிட்டுக் கதவை சாத்தப் போனாள்; அது கண்ட இராஜமார்த்தாண்டன் சரேலென்று வாசற்படியைத் தாண்டிச்சென்று சுந்தரசூளாமணியின் கரத்தைப் பிடித்தான். இளமன்னன் தன் கரத்தைப் பிடித்தவுடன் சுந்தர சூளாமணி அதிக அச்சத்துடன் அம்மா! அம்மாவென்று கூவியலறினாள். அயர்ந்த நித்திரையிலிருந்த பங்கசம் சுந்தர சூளாமணி அலறிய சத்தத்தைக் கேட்டெழுந்து விரைந்தோடி வந்தாள். பங்கசம் ஓடி வருவதைக்கண்ட இராஜமார்த்தாண்டன் தனது சொந்தக் குரல்தோன்ற என்னருமைக் காதலி! நான் பிரிந்து பதினெட்டுத் தினங்கள் தானே ஆகிறது. அதற்குள் என்னை அடையாளங் கண்டுபிடிக்க முடியவில்லையே! அதிக காலமானால் எவ்வாறு என்னை அடையாளங் காணப்போகிறாய்? என்னையன்றி, உன் வீட்டிற்கு எமன்கூட வருவானோ? இதுகூடத் தெரியவில்லையே யுனக்கென்று கூறி, அவளை இறுக ஆலிங்கனஞ் செய்து முத்தமிட்டான். பலநாள் பிரிந்திருந்த சுந்தர சூளாமணியும், ஆர்வத்தால் அரச குமரனை இறுகத்தழுவி முத்தமிட்டாள். இவ்வாறு ஒருவரையொருவர் இறுகக் கட்டித்தழுவி அன்பு ததும்ப முத்தமிட்டுக்கொண்டிருந்த காட்சியைப் பங்கசம் பார்த்துப் பெரிதும் நாணத்துடன் தலைகுனிந்த வண்ணந் தன் படுக்கையறையை அடைந்து பண்டுபோற் படுத்துக் கொண்டாள். பின்னர் அரசகுமாரன் சுந்தர சூளாமணி

யுடன் மேன் மெத்தையிலுள்ள சந்திரகாந்த மண்ட பத்தையடைந்து சயனத்தில் அவளை இறுகத்தழுவிப் படுத்துக்கொண்டு, தான் பிரிந்தது முதலாக நடைபெற்ற சகல காரியத்தையும் அவளறியச் சொல்லிக் கலவிசெய் திருந்து, இரவு இருபத்தைந்து கடிகையளவில் எழுந்து சுந்தர சூளாமணியிடஞ் சொல்லிக்கொண்டு, ஏவலாளன் தொடர்ந்துவர அரண்மனையை யடைந்து படுத்துக் கொண்டான். இராசமார்த்தாண்டன், தனது மாமனார் திருவாரூரிற் றங்கியிருந்தவரையும் பிறரறியாவண்ணம் மாறுவேடம் பூண்டு இராக்காலத்திற் சுந்தர சூளாமணி வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தான்.

மலையாள மன்னன் பரிவாரங்கள் சூழத் தன்னூருக் குச் சென்றபின்னர் இராஜமார்த்தாண்டன், திருமணஞ் செய்வதற்குமுன் சுந்தர சூளாமணி வீட்டிற்குப்போய் வந்ததுபோலவே, சாப்பாட்டு நேரமொழிந்த மற்றநேரங் களிலெல்லாம் சுந்தர சூளாமணி வீட்டையடைந்து அவ ளுடன் கூடிக் கலவியின்பத்தை அநுபவிப்பதிலேயே காலத்தைக் கழித்துவந்தான். திருமணஞ் செய்வதற்கு முன் குதிரைக்கோச்சில் சுந்தர சூளாமணி வீட்டிற்குப் போய் வந்தவன், திருமணஞ் செய்தபின்னர் தன் மாமன் தனக்களித்த பஞ்சகல்யாணிக் குதிரை மீதேறிக்கொண்டு போய் வந்தான். திருமணம் நடைபெற்று வருடம்ஒன்று பூர்த்தியாயிற்று. இந்த ஒரு வருடத்தில் ஓரிரவுகூட அரண்மனையிற் றங்கினானில்லை. மதன கல்யாணியைக் கலியாணஞ் செய்துகொண்ட ஞாபகங்கூட இல்லாதவன் போல இருந்து வந்தான்.

தன் குமரன் றிருமணஞ்செய்துகொண்ட மனைவியைக் கனவினுங்கூட நினையாது தாசிவீடே தனக்கிருப்பிடமாகக் கொண்டு காலங்கழித்து வருதலை விக்கிரமசோழன் அறிந்து மனத்திற் பெருந்துயரமடைந்தான். இராஜ மார்த்தாண்டனையும், மதன கல்யாணியையும் சேர்த்து வைக்க என்ன யுக்தி செய்யலாமென்று இரவு பகலாக ஆலோசிப்பானாயினன். ஆலோசனையில் அவனுக்கு யாதொருமுடிவுமேற்படவில்லை. அதன்மேல் மந்திராலோசனை செய்வதெனக்கருதித் தன் கருத்தைச் சற்கீர்த்தியினிடம் அறிவித்தான். சற்கீர்த்தியும் மந்திராலோசனை செய்துதான் ஓர் மார்க்கத்தைக் கண்டுபிடிக்கவேண்டுமென்றான். அரசனும், சற்கீர்த்தியும் மந்திராலோசனைக் குரிய ஓர் நாளைக்குறிப்பிட்டு, அந்நாளில் மந்திராலோசனை மண்டபத்துக்கு வந்துசேரவேண்டுமென்று சகல மந்திரிகளுக்கும் ஏவலாளரைக் கொண்டறிவித்தார்கள்.

மந்திராலோசனை நடைபெறல்.

மந்திராலோசனைக்குக் குறிப்பிட்ட தினத்தில் அரசன் உத்திரவின்படி சற்கீர்த்தி முதலான சகல மந்திரிகளும் மந்திராலோசனை மண்டபத்தை யடைந்தார்கள். மந்திராலோசனை வெகுநேரம் நடைபெற்றது. கடைசியாகச் சகல மந்திரிகளும் ஒருமுகமாகச்சிறந்தவோர் பங்களாவைக் கட்டிமுடித்து அதில் அரசகுமாரனையும், அவன் மனைவி மதனகல்யாணியையுந் தனித்து வசிக்கும்படி வைப்பதென்றும், மதனகல்யாணிக்குத் துணையாகச் சிலதோழிகளை மட்டும் அங்கு வைப்பதென்றும், சமைத்த உணவுகளை இளவாசனுக்குமதனகல்யாணியையே படைக்கும்படி செய்வதென்

றும், இவ்வாறு செய்தால் பங்களாவிற்குக் குடியேறினசில தினங்களில் இளவேந்தன் இளவரசியின் மீது காதலுற்றுக் கூடி வாழ்வாரென்றும், இவ்வாறு கூடிவாழவே; இராஜ மார்த்தாண்டனுள்ளத்திலுள்ள தாசியின் காதல் மாறிவிடு மென்றும் ஆலோசித்து முடிவு செய்தார்கள். அரசனு மதனை ஒத்துக்கொண்டான்.

விக்கிரம சோழமன்னன் சிறந்த தச்சர்களையும், கொல்லத்துக்காரர்களையுங் கொண்டு மூன்றுமாதங்களில் சிறந்த பங்களாவொன்றைக் கட்டி முடித்தான். பங்களாக் கட்டி முடிந்ததும் மந்திராலோசனையின்படியே மேற்படி பங்களாவில் இராஜமார்த்தாண்டனையும், அவனது மனைவி யான மதனகல்யாணியையும், சுதினத்தில் பிரவேசஞ் செய்துவைத்தான், மதனகல்யாணிக்குத் துணையாகச் சிறந்ததோழிமார் பலர் அப்பங்களாவில் அவளுடன்கூட விருந்துவந்தார்கள். இராஜமார்த்தாண்டனுக்கு உண வளிக்குந்தொழில் மதனகல்யாணிக்கே உரிமையாக்கப் பட்டது.

தனது பட்டத்துத் தேவியான மதனகல்யாணியுடன் தனிப்பங்களாவிற் குடியேறி வசித்துவரும் இராஜமார்த் தாண்டன், சாப்பாட்டுவேளைகளில் பங்களாவில் வந்து சாப்பிடுவதும், மற்ற வேளைகளிலெல்லாம் சுந்தரசூளாமணி வீட்டில் அவளுடன் கூடியிருந்து ஆனந்தத்தையநுபவிப் பதுமாக இருந்துவந்தான். உயர்ந்த படுக்கையறைகளும், சிறந்த படுக்கைகளும் அமைந்துள்ள பங்களாவில், ஒரு இராப்போதிலாவது இராஜமார்த்தாண்டன் தங்கவில்லை. தனக்கு உணவு படைக்கும் தன் பட்டத்துத் தேவி முகத்

தையும் பார்க்கவில்லை. மதனகல்யாணி உணவு படைக்கும்போது தலைகுனிந்தவண்ணமாகவே இருந்து விரைவாகவுண்டு வெளியில் வந்து கையலம்பினவுடன் தயாரிலிருக்கும் பஞ்சகல்யாணிக் குதிரையிலேறிக்கொண்டு தாசி வீட்டுக்குச் சென்றுவிடுவான். இராஜமார்த்தாண்டனுக்குத் திருமணம் நடைபெற்றுப் பதினெட்டுமாதங்களாயின. பதினெட்டுமாத காலமாக இவ்வாறிருந்து வருவதை விக்கிரமசோழனறிந்து; இனிச்செய்வதின்னதெனவறியாது கவலையிலாழ்ந்திருந்தான்.

## மதனகல்யாணியின் நிலைமை.

அழகில் இலட்சுமியையும், கல்வியிற் சரஸ்வதியையும், அறிவில் ஔவைப்பிராட்டியாரையும், பொறுமையில் பூமிதேவியையும் ஒத்த மதனகல்யாணி தன்னை மணந்த இளமன்னன், மணந்த பதினெட்டுமாச காலமாகத் தன் முகத்தைப் பார்த்துத் தன்னுடன் ஒரு வார்த்தைகூடப் பேசாதிருந்து வருவதையும், சாப்பிடும் நேரந்தவிர மற்ற நேரங்களில் தாசிவீட்டிற்குச் சென்று அங்கு வசித்துவருதலையுங் கருதி அளவிலாத் துக்கத்தையடைந்தாள். உயர்ந்த அரசர்குலத்திற்பிறந்து, உயர்ந்த அரசர் குலத்திற் பிறந்த கட்டழகுவாய்ந்த அரசகுமரனைநாயகனாகப்பெற்ற நான்; மணந்த நாயகனுடன் கூடிவாழ்ந்து இன்பத்தையடைதற்குரிய புண்ணியத்தைப் பூர்வசென்மத்தில் செய்யவில்லையா? அன்புடன் கூடிவாழ்ந்த சதிபதிகளை அவ்வாறு வாழவொட்டாது பிரிந்திருக்கும்படி நான் பூர்வத்தில் அவர்களுக்குத் தீங்கு செய்திருக்கவேண்டும். அத்தீங்கின் பலன், இந்த சென்மத்தில் என்னுயகனுடன்

என்னைக் கூடி வாழவொட்டாமல்தடுக்கின்றது. இச்சென் மத்தில் ஒருவர் அநுபவிக்கும இன்பம், துன்பமிரண்டும், பூர்வசென்மத்தில் செய்த நல்வினை, தீவினைகளின் பயனாக அவரைச் சாருகின்றது, இவ்வாறிருக்கும் போது, நான் பிறரை நோவதால் யாது பிரயோசனம். செவ்விசேர் புலமை ஔவைப்பிராட்டியாரும்

> " ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடலி
> னாழி முகவுமோ நானாழி—தோழி
> நிதியுங் கணவனு நேர்படினுந் தத்தம்
> விதியின் பயனே பயன் ".

என்றருளிச் செய்திருக்கிறார். திரிகால ஞானியாகிய ஔவைப்பிராட்டியார், வருங்காலத்தில் ஓர் அரசபுத்திரி மணந்த கணவனுடன் கூடிவாழும் பாக்கிய மில்லாதவளாய் வருந்தப்போகிறாள்; வருந்தும் அவள் உண்மையை உணர்ந்து வருந்தாதிருக்கும்படி நாம் ஒருபாடலைச் சொல்லி வைக்க வேண்டுமென்று தனது திருவுள்ளத்திலுணர்ந்து எனக்கு அறிவுறுத்தும் பொருட்டே இந்த வெண்பாவைக் கூறியிருக்கவேண்டும். இதுதான் உண்மை. ஆதலால் நாம் வருந்துவதாற் பிரயோசனமில்லை. உலக நாயகராகிய புற்றிடங்கொண்ட பெருமானே நமதின்னலை நீக்கிச் சுகமளிக்கும் வல்லமை வாய்ந்தவர். அவரிடமே நாம் நமது குறையைத் தெரிவித்து முறையிடவேண்டும். நம்மைப்போன்ற மனிதர்களிடந் தெரிவிப்பதால் யாதும் பிரயோசனமில்லை யெனக்கருதி; இராப்பகலாக வன்மீக நாதரைத் தன்னுள்ளக் கமலத்தில் எழுந்தருளச்செய்து, தனது குறையை அவரிடம் விண்ணப்பஞ் செய்துகொண்டிருந்தாள்.

## இராஜமார்த்தாண்டன் பஞ்சகல்யாணிக் குதிரையின் பாதங்களைச் சேதித்தல்.

வழக்கம்போல் இராஜமார்த்தாண்டன் ஓர் தினம் பகற்போசனத்தை முடித்துக்கொண்டு பஞ்சகல்யாணிக் குதிரை மீதேறித் தாசி பங்கசத்தின் வீட்டிற்குச்சென்றவன், வேகமாகச் செல்லக்கருதிக் குதிரையை அதட்டினுன். ஓர் தினமாவது தன்னெஜமானின் அதட்டற் சத்தத்தைக் கேட்டிராத வக்குதிரை அதிவேகமாகச் சென்றது. குதிரை பங்கசத்தினது மாளிகையின் சமீபத்திற் சென்றவுடன் இராஜமார்த்தாண்டன் அதனை யடக்கினுன். திடீரென வேகத்தை யடக்கினதும், அக் குதிரை வழக்கத்துக்கு விரோதமாகப் பங்கசத்தினுடைய மாளிகையின் பக்கத்துள்ள தாசி முத்துலெட்சுமியின் வீட்டுவாசலிற் போய்நின்றது. அவ்வாறு நின்ற குதிரையை அரசகுமரன் பங்கசத்தின் மாளிகை வாசலிற்றிருப்பிக் கொண்டுவந்து நிறுத்தி இறங்கிச்சென்றுன். குதிரை எப்போது வருமென்று காத்திருந்த குசினிக்காரன் உடனே குதிரையைப்பிடித்துக் கொண்டுபோய் லாயத்திற்கட்டிப் புல்போட்டான்.

அரசகுமரனை வரவேற்றழைத்துச் செல்ல அவன் வருகையை எதிர்நோக்கித் தன்மாளிகைவாயிற்படியினின்ற சுந்தர சூளாமணி குதிரை அடுத்தவீட்டு வாசலிற் போய் நின்றதையும், அரசகுமரன் அதனைத்திருப்பிக் கொண்டு வந்ததையுங் கண்டாள். கண்ட அவ்வஞ்சகி, குதிரையினின்றும் இறங்கிவந்த தன் காதலனேடுஞ் சந்திரகாந்த மண்டபத்தை யடைந்து; அவனெடுமோராசனத்திருந்

தாள். அவ்வாறிருந்தவப் பாதகி மன்னன் குமரனை நோக்கி, என்மனதுக்கினிய மகிழ்ந! தாங்கள் ஏறிவந்த குதிரையின் செயலைக் கவனித்தீர்களா வென்றாள். மோசக் காரத்தாசி மொழிந்ததைக்கேட்ட மதிகெட்ட மன்னிளங் குமரன் கவர்மனப் பரத்தையைப்பார்த்து, சுந்தரமிக்க பைந்தொடி! குதிரையின் செயலை யான் சிறிதுங் கவனித் தேனில்லை. நீ கண்டதைக் கூறென்றான்.

அரசிளங்குமரன் கூறியவம்மொழி கேட்ட பொய் மொழிமங்கை தன் காதற்கள்ளான் மயங்கிய அவன் முக நோக்கி, பொன்னனிற் சிறந்த நன்மதியாள! என்றங்கை மதனகல்யாணிக்குத் தாங்கள் என்பால் வருவதில் விருப்ப மில்லையென்பதை, அவள் தந்தையளித்த கந்துகம் தங்க ளுக்கறிவிக்கும் பொருட்டே வழக்கத்துக்கு விரோதமாகத் தங்களோடும் அடுத்தவீட்டு வாசலிற்போய் நின்றது. சக் களத்தியாகிய மதனகல்யாணி என்மீது துவேஷங்கொள் வது சகசம். குதிரைக்கு யானென்னசெய்தேன். நான் அதற்குக்குறைவில்லாது தீனிவைத்து வந்தேன். மதன கல்யாணியைவிடக் குறைவில்லாது தீனிவைத்த என்மீது, மேற்படி குதிரைக்குப் பட்சமிருக்க வேண்டியது நியாய மல்லவா? உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைப்பவரை யொத்து மேற்படி குதிரை எனக்கே தீங்குசெய்ய ஆரம் பித்திருக்கிறது. நாளைக்கு ஏறிவரும்போது வழியிற் றங் களைக் கீழேதள்ளவுங்கூடும்? சகலமுமறிந்த தங்களுக்கு நானிதற்குமேற் றெரிவிக்க வேண்டியதில்லை. தங்களிடம் இக்குதிரை இருப்பதைவிட இல்லாதிருப்பதே சர்வசிலாக் கியமென்று கூறினாள்.

சுந்தரசூளாமணி சொல்லிவந்ததைக்கேட்ட அரசகுமரனுக்கு அவள் சொல்வது உண்மையென்றும், குதிரை செய்தது குற்றமெனவுந் தோன்றிற்று. தோன்றவே பக்கத்திலிருந்த வஞ்சகப் பரத்தையைப் பார்த்து, தேனினுமினிய செழுமொழிப்பாவாய்! உனக்குத்தீங்குசெய்த இக்குதிரைக்கு என்னவிதமான தெண்டனை புரிய வேண்டுங் கூறென்றான். போதமிழந்த புரவலன் குமரன் கூறியதுணர்ந்த கொடியாள் அவனைப்பார்த்து, குவலயம்போற்றுங் கொற்றக் குரிசில்! இன்ன குற்றஞ் செய்தார்க்கு இன்னதெண்டனை விதிப்பதென்பது, உலகையொரு குடைநீழலில் அடக்கியாளுந் தங்களுக்குத்தெரியுமேயன்றி எனக்கென்ன தெரியுமென்றாள். மானத்தைவிற்று வயிறு வளர்க்கும் ஈனத்தாசி இயம்பியதையுணர்ந்த இராஜமார்த்தாண்டன் சுந்தரசூளாமணியின் மாளிகைமுகப்புத்திண்ணையின்கண் வந்திருந்துகொண்டு குசினிக்காரனைக் கூப்பிட்டு வரும்படி தோழியொருத்தியை ஏவினான். அரசகுமரன் உத்தரவைத் தோழியாலறிந்த குசினிக்காரன் அரசகுமரனைக்கண்டு வணங்கினான். தன்னைவணங்கிய குசினிக்காரனை அரசகுமரன் நோக்கி, நீ விரைந்துசென்று கொலைபுரியுங்கிங்கரர்களை அழைத்துக்கொண்டுவாவெனக்கட்டளையிட்டான். இராஜகுமரன் கட்டளையைப் பெற்ற குசினிக்காரன், அரசகுமரன் கட்டளையை நிறைவேற்றினான் அரசனுக்கினையைப்பெற்றுக் கொலைபுரிவோர் இருவர்வந்து இராஜமார்த்தாண்டன் முன் வணங்கிக் கைகட்டி வாய்பொத்தி நின்றார்கள். அறிவிழந்த அரசகுமரன் தன் முன்னின்ற கொலைபுரி கிங்கரர்களைநோக்கி, ஏ கிங்கரர்களே! நீங்களிருவரும் அதோவந்த லாயத்திற் கட்டிநிற்குங் குதிரை

யைப்பிடித்து மயானத்துக்குக் கொண்டுபோய்; அம்மயானத்தில், அக்குதிரையை நான்குகால்களையுந் துண்டித்துத் தள்ளிவிட்டு வாருங்களென்று கட்டளையிட்டான். நேசஞ்செய்து மோசஞ்செய்யுந் தாசிதந்த காமக்கள்ளையுண்டு கருத்தழிந்த காவலன் குமரன் கட்டளையையறிந்த கிங்கரர்கள் மனநடுக்கத்தை யடைந்தார்கள். குசினிக்காரன் மூர்ச்சித்துக் கீழேவிழுந்தான். கள்ளப்பரத்தையினுள்ளங் களித்தது. மனநடுக்கத்தையடைந்த கிங்கரர்கள், வஞ்சகப் பரத்தை மாயவலையிற்சிக்கிய மன்னன் புதல்வன் கட்டளையை மறுத்தற்கஞ்சி லாயத்தினின்ற குதிரையைப்பிடித்துக்கொண்டு மயானத்தையடைந்து மதிகெட்ட மன்னிளங்குமாரனுத்தரவை நிறைவேற்றினார்கள். கால்கள் துண்டிக்கப்பட்டுக் கதறிக் கீழேவிழுந்த அசுவத்தினாவி அமரர் நாடுற்றது.

### நகரத்திற் கலக்கம்.

இக்கொடுஞ் சம்பவம் நகரத்தின் நாலாபக்கங்களிலுங் காட்டுத்தீயைப்போற் பரவிற்று. தன்புத்திரன் செயலையறிந்த விக்கிரமசோழன் கடுங்கோபமுற்றான். அவன் கண்கள் சிவந்து சுழன்றன. என்குலத்துக்கு என்றுமில்லாத இழிவைத்தேடிய என் புத்திரன் இராஜமார்த்தாண்டனை இதோ எமபுரத்துக்கு அனுப்புகிறேனென்று மந்திரவாளை உருவிக்கொண்டெழுந்தான். அருகிலிருந்த சற்கீர்த்தி இதோபதேசஞ்செய்து அரசன் கோபத்தை மாற்றினான். இத்தீச்செயலையறிந்த மதனகல்யாணி துன்பக்கடலில் விழுந்து கரைகாணாது தத்தளித்தாள். அவள் கண்களிலிருந்தும் பெருகிய நீர், அவளைக் குளிப்பாட்டிற்று. உயிரனைய தோழிகள் தக்கதேறுதல் மொழிகளைக்கூறி அவ

ளைத் தேற்றினர்கள். குசினிக்காரனுயிர் குதிரையினுயி ருடன் கூடிச்சென்றது. அமைச்சராதி பலருக்கும் அரச குமரன்மீதிருந்த நல்லெண்ணமாறிற்று. பெரியோர்கள், இனியிந்த நாட்டிற்கே அழிவுவந்ததெனக் கருதினர்கள். அரசகுமரன் தன்அரசாட்சியைக் கைக்கொண்டால் நகரத் திற்கு என்னென்ன தீங்குகள் நேருமோவென நகரமாந்தர் கள் கலக்கமடைந்தார்கள்.

## விக்கிரமசோழன் கடவுளிடத்து முறையிடல்.

அமைச்சனல் அகந்தெளிந்த விக்கிரமசோழன் ஸ்ரீ வீதிவிடங்கப்பெருமானுடைய திருச் சந்நிதானத்தை யடைந்து வணங்கி இருகரங்களையுஞ் சிரமேற் கூப்பிநின்று சகல லோகநாயகா! சகலசீவதயாபரா! தரும சொரூபா! உமையொருபாகா! அடியேனுக்குத் தேவரீர் திருவரு ளால் தோன்றிய புத்திரனை இராஜமார்த்தாண்டன் ஓர் பரத்தையின் கண்வலையிற் சிக்கி, அக்கினி முன்னர் வேத விதிப்படி மணம்புரிந்து கொண்ட மனைவியான மதனகல் யாணியுடன் கூடி வாழாது மேற்பரத்தை வீட்டிலேயே காலங்கழித்து வருகிறன். இந்த விஷயம் எள்ளினு ளெண்ணெய்போல எங்கும் நிறைந்த நீயறியாததல்ல. இது மன்றி அக்காதற் பரத்தையின் சொல்லைக்கேட்டு அடாத காரியங்களையுஞ் செய்து வருகின்றன். இதுகாறும் மறு வற்று விளங்கிய எனது சூரியகுலம், என் குமாரனல் மறுவைப்பெறுபோல் காணப்படுகிறது. தேவரீர் திரு வருள்சுரந்து எனது குமரனுள்ளத்தில் நல்லறிதோன்றவும், தாசியை நீத்துச் சொந்த மனைவியுடன் கூடிவாழவும், என் குலம் மறுவற்று விளங்கவும் அனுக்கிரஹஞ் செய்

தருளல் வேண்டும், இவ்வாறு செய்தல் வேண்டும் என்று கூறியிரந்தான். குதிரையிறந்த கவலையினின்றுந் தெளிந்த மதனகல்யாணியும், பண்டுபோல ஸ்ரீபுற்றிடங்கொண்ட புராதனனை இறையளவு மறவாது சிந்தித்து வந்தித்துத் தன்னுடைய குறையைக் கூறி வணங்கிவந்தாள்.

மதனகல்யாணியை அவள் மணாளன் மருவல்.

ஆயிராவணமேறாது ஆனேறேறி அமரர் நாடாளாதே யாரூராண்ட வம்மானாகிய ஸ்ரீவன்மீகநாதருடைய அருட் கண்ணோக்கம் மதனகல்யாணியைச் சார்ந்தது. இந்நாள் காறுந் தீய ஸ்தானங்களினின்று மதனகல்யாணிக்குத் துன் பத்தை யளித்துவந்த தீக்கோள்களெல்லாம் அவளுக்குச் சிறந்த இன்பத்தை யளிக்கத்தக்க நல்ல ஸ்தானங்களை யடைந்துநின்றது. இராஜமார்த்தாண்டனுக்குத் திருமணம் நடைப்பெற்று மூன்றுவருடங்கள்நிறைவேறிற்று. இறை வன்றிருவருளும், நல்லகாலமும் சாரப்பெற்ற மதனகல் யாணி, ஓர்தினம் வழக்கம்போற் றன்னுடைய நாயகனுக்கு உள்ளன்புடன் பகற்போஜனத்தைப் படைத்தாள். என் றும்போல் இராஜமார்த்தாண்டனுந் தலைகுனிந்தவண்ணம் விரைவாக அருந்திக்கொண்டிருந்தான். அன்னம்படைத்த பெண்ணரசி, இளவரசன் உணவருந்தும் இலைமுன்னர்நின்று அவனது பேரழகைக் கண்குளிர நோக்கி, அவனுடன்கூடி இன்பத்தை யனுபவித்து மகிழ்தற்கியலாத தன்னுடைய துர்ப்பாக்கியத்தை மனதிலெண்ணினாள். அவள் மனம் அனலைச்சார்ந்த வெண்ணெய்போலுருகிற்று. கண்களில் நீர் பெருகிற்று. பெருகியவந்நீர், இளமன்னன் உணவருந்து மிலையிற்றுளிற்றுளியாகச் சொட்டிற்று. குனிந்தவண்ண மிருந்து உணவருந்தியதால் மதனகல்யாணி தன் முன்னர்

நிற்பதை ஒரு சிறிதுமறியாத இராஜமார்த்தாண்டன், இல்லையில் நீர் சொட்டுவதைக்கண்டு இந்நீர் எவ்வகைநீர்? எங்கிருந்து சொட்டுகிறது? என்றறியும்பொருட்டுத் தலையை நிமிர்ந்து மேலே நோக்கினான். பொற்பினால் பொன்னை வென்ற கற்புக்கரசியாம் பூங்கொடியின் பூரணமதியை யொத்த வதநத்தையும், அவ்வதநத்தின்கண் தாரை தாரையாக நீரைச் சொரிந்துகொண்டிருக்கும் நீலோற்பல மலரையும், வடித்த வேலையும், கயலையும்வென்று காதளவு நீண்ட கண்களையுங் கண்டான். மனம் விண்டான். இரக்கங்கொண்டான். அவன் வாயினின்றும்; ஆ பெண்கள் நாயகமே! உன்னைப் பன்னெடுநாளாக இவ்வின்னலுக்காளாக்கிய யானோ மனிதன்? யானோ மனிதன்? யானே அரக்கன்! யானே அரக்கன்! என்ற சொற்கள் தோன்றின. அவன் கால்கள் பொருக்கென எழுந்து நின்றன. அவனது வலதுகரம் மதனகல்யாணியின் முதுகைச்சார்ந்து வலது தோளின்மீது எச்சற்படாமலேறிநின் றணைத்தது. இடது கரம், அவன் இடையுடைமீதணிந்துள்ள விலையுயர்ந்த உத்தரீய வஸ்திரத்தை அவிழ்த்தெடுத்துப் பொச்சமில்லவன் புடைப்பூவையின்கண்பொழிநீரைத் துடைத்தது. இவ்வாறு இராஜமார்த்தாண்டன் அவயவங்கள் செய்த பணியைப் பெற்ற அந்நங்கை, இந்நாள்காறும் இப்பணியைப் பெற்றிலோமேயென வெண்ணினாள். உடனே விம்மினாள். விம்மியவச்செம்மலர்க் கோதை தன்னுருயிர்க் காதலனை நோக்கி, குழலினும் யாழினுமினிய தனது மதுரமொழி இளமன்னன் செவிகளைச் சார்ந்தின்பம் விளைக்க, அழகால் மன்மதனே! உனதுள்ளத்தைக் கொள்ளைகொண்ட கயல் போலுங் கண்களையுடைய நின் காதற்கணிகை இதுபோது

இங்கு நடைபெறும் நின் செயலைக் கண்டால் அவளுள்ளத்திற் கோபந்தோன்றும். அக்கோபமவளால் பொறுக்கமுடியாத தன்மையையுடையதாகயிருக்கும். என்னுடைய கண்கள் சொரியும் குளிர்ந்த நீர், செல்வத்தாற் சிறந்த சீமானாகிய நின்கரத்தாற் றுடைத்தற்குரிய அருமையையுடையதோ? சோழநாட்டையாளும் மன்னவா! மலைநாட்டு மன்னனும், உன் மாமனுமான குகன் சிலைராயன் உனக்களித்த உலகமேழு மெச்சும் பெருமை வாய்ந்த பஞ்சகல்யாணிக் குதிரையின் கால்கள் நின் காதற்கணிகைக்கு அன்று செய்த குற்றத்தைப்போன்ற கொடிய குற்றத்தை, செந்தாமரை மலர்போலும் நின்னுடைய இடதுகை, என் கண்கள் சொரிந்த நீரைத் துடைத்து இன்று செய்யவில்லையா? அன்று அக்குதிரையின் கால்களடைந்த தெண்டனையை, இன்று உன் கையும் அடையப்போகிறதல்லவா? என்னும் விரிந்தபொருள் இளவரசனுள்ளத்தில் பசுமரத்தாணி போற் பதியும் வண்ணம்,

காமா கயற்கண்ணி கோபம்பொ றுளென்றன் கண்பனிநீர்
சீமான் கரத்தாற் றுடைக்கரி தோசெக மேழுமெச்சுங்
கோமான் சிலம்பன் குகன்சிலை ராயன் கொடுத்தருளு
மாமாவின் காலல்ல வேமன்ன வாநின் மலர்க்கரமே.

என்னுங்

கட்டளைக் கலித்துறையைக் கூறினாள். செந்தமிழ் மொழியை ஐந்திலக்கணங்களும் அமைவுறக்கற்ற இராஜமார்த்தாண்டன், மேற்படி பாவினழகையும், அப்பாவினுள்ளடங்கிய பரந்த பொருளின் சிறப்பையும் உய்த்துணர்ந்தான். பக்கத்துள்ள நீர்நிறைந்த சொம்பையெடுத்துக் கையையலம்பித் துடைத்துக்கொண்டு தன்னுடைய பட்டமகிஷியைக் கட்டியணைத்துக் "காமாவென்னும்"

பாடலைக்கூறிய கனிவாயில் முத்தமிட்டான். உள்ளத் துவகை பூத்தான். அரசகுமரன் அப்பொழுதடைந்த வானந்தத்துக்கோரளவில்லை.

இவ்வாறு அளவிலானந்தமடைந்த இளமன்னன், பட்டமகிஷியான மதனகல்யாணியின் றிருவுருவப் படத் தில் அவளது இடதுகண் கருமணியைச் சுறண்டியெடுத் துக் கண்பொட்டையெனத் தனக்குக் காட்டித் தன்னைத் தன்மனைவியுடன் சேர்ந்து வாழாதவண்ணஞ் செய்த தாசிகளின் மோசத்தையும், சுந்தர சூளாமணியின் சொல் லைக்கேட்டுக் கிடைத்தற்கரிய பஞ்சகல்யாணிக் குதிரையின் கால்களை வெட்டி அதனைக் கொன்றதையும் நினைத்தான். நெஞ்சம் பதைத்தான். மதனகல்யாணியைப் பார்த்தான். பெண்கள் நாயகமே! நானுனக்குச் செய்த குற்றத்தை மன்னிக்கவேண்டும். மன்னிக்கவேண்டும். இனி உன்னை விட்டொருகணமும் பிரியேன். உனக்கு அணுத்துணையுங் குற்றஞ் செய்யேனென்று மதனகல்யாணியினுள்ளத்தில் அன்புபெருகித் ததும்பக்கூறி, மீண்டு முத்தமிட்டுக் கற் பகக் பூங்கொம்பே! இதோ வந்துவிட்டேன். நில் லென்று கூறி வெளியில் வந்துநின்று பங்களாவின் வாயில் காப்பாளனை அழைத்தான். அரசகுமரனழைத்த சத்தங் கேட்ட வாயில் காப்பாளன் விரைந்தோடிவந்து அரசகும ரனை வணங்கி வாய்பொத்தி நின்றான். இராஜமார்த்தாண் டன் தன்முன்னின்ற வாயில்காப்பாளனை நோக்கி, அடே காவற்காரா! உனக்குத் துணையாக இன்னும் ஒருவர் இருவரை அழைத்துக்கொண்டு விரைந்துசென்று தாசி பங்கசத்தையும், அவள் மகள் சுந்தர சூளாமணியையும் பிடித்து இருவர் தலைமயிரையும் ஒன்றாகப்பிணைத்து

இழுத்துக்கொண்டு வாருங்களென்று உத்தரவு செய்தனுப்பிவிட்டுத் திரும்ப பங்களாவினுட்சென்று மதன கல்யாணியைத் தோளிற்கைபோட்டு அணைத்தழைத்துச் சென்றோர் சோபாவில் அவளுடனிருந்து, அவளுள்ளங் களிக்க இங்கிதவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தான்

அரசன் உத்தரவைக்கேட்டு அகமகிழ்ந்த வாயில் காப்போன், தனக்குத் துணையாக இரண்டு சேவகர்களை அழைத்துக்கொண்டு தாசி பங்கசத்தின் மாளிகையை யடைந்தான். அதுசமயம் வழக்கம்போல் இராஜமார்த்தாண்டனை உபசரித்தழைத்துச் செல்லக்கருதிச் சுந்தர சூளாமணி மாளிகையின் முகப்பு வாயிற்படியில் வந்தாள். வாயில்காப்போன் விரைந்து சென்று அவளுடைய தலை மயிரை இடதுகையாற் பிடித்துக்கொண்டு வலதுகையால் அவளது இடது கன்னத்தில் தன்னுத்திரந்தீர இரண்டறை கொடுத்தான். வாயில் காப்பாளன் தன்றலைமயிரைப் பிடித்தவுடன் சுந்தரசூளாமணி அம்மா! அம்மாவென்று பெருஞ்சத்தமிட்டலறினாள். தன் புத்திரி அலறுவதை யுணர்ந்த பங்கசமும், தோழிமார்களும் ஓடி வந்தார்கள். தோழிகளுக்கு முன்னோடிவந்த பங்கசத்தின் றலைமயிரை மற்றொருவன் எட்டிப்பிடித்துக்கொண்டு இரண்டறை அவள் கன்னத்திற் கொடுத்தான். பங்கசமும் தன் மகளைப்போல் அம்மாடி அம்மாடியென்று அலறினாள். இதனைக்கண்ட தோழிமார்கள் நமக்கும் அடிவிழுமோ வென்று வீட்டினுட்சென்று ஒளிந்து கொண்டார்கள். வாயில்காப்பாளன் முதலிய மூவரும் தாசி இருவருடைய தலைமயிரையும் ஒன்றாக முடிந்து அவர்கள் கரத்தைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தார்கள். ஊர்ச் சனங்கள்

திரள் திரளாகக்கூடி வேடிக்கை பார்த்தார்கள். பார்த்த வரிற்பலர், இளவரசியுடன் சேர்ந்து வாழாதபடி இளவரசனை வஞ்சித்து மயக்கிய தாசிகளுக்கு இத்தண்டனை போதாது; இன்னுங் கடுமையாகத் தண்டிக்கவேண்டுமென அத்தாசிகள் காதுகளிற் கேட்கும்படி ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டார்கள். கண்டாரிவ்வாறு பேசிக்கொள்ளும்படி இழுத்துச்சென்ற ஏவலாளர்கள் தாசிகளிருவரையும் இளவரசன் பங்களாவின் வாசலிற் கொண்டுபோய் நிறுத்தினார்கள்.

இதற்கு முன்னமே இத்தாசிகளைத் தண்டனை புரிவதற்காக இளவரசனால் அழைக்கப்பட்டு பங்களாவாசலில் வந்து காத்துநின்ற கிங்கார்களில் ஒருவன் ஏவலாளர்களால் இழுத்துக்கொண்டு வந்து நிறுத்திய பங்கசத்தையும், அவள் மகள் சுந்தர சூளாமணியையும் பார்த்து, ஏ மோசக்காரத் தாசிகளே! இன்றுதான் உங்களுக்குச் சனியன்பிடித்ததுபோலும். உங்களிருவரையும் என் கைவாளுக்கு இறை கொடுக்கிறேனென்று கூறிக் கர்ச்சித்து மீசையை முறுக்கினான்.

இளமன்னன், தன்னை வஞ்சித்த தாசிகளிருவரையும் இழுத்துவரச் சொன்னதையும், ஏவலாளர்கள் இழுத்துக் கொண்டுபோவதையும் அரண்மனையிலுள்ள அரசன் அவனது மந்திரி, பிரதானி முதலிய சகலரும் அறிந்து ஆனந்தமடைந்தார்கள்.

மதனகல்யாணியின் பேரழகையும், அமிர்தமன்ன மொழியையும் கண்களுக்கும், செவிகளுக்கும் பருகிருந்தாக வளித்துக்கொண்டு பங்களாவினுள்ளிருந்த இளங்கோ தாசிகளிருவரையும் பங்களாவாசலில் ஏவலாளர்கள்

காண்டுவந்து நிறுத்தியிருப்பதை யுணர்ந்து வெளியில் ந்தான். வெளியில் வந்த தம்முடைய இளமன்னனை வலாளர்களும், கிங்கரர்களும், வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றவர்களும் வணங்கினார்கள். இளமன்னனைக் கண்ட தாசிகளிருவரும் ஓவென வாய்விட்டு அலறியழு தார்கள். இளவரசியார் பங்களாவினுட் பலகணியோரமாக ன்று இக்காட்சியைப் பார்த்தார். பார்த்த அரசியினுள் த்தில் தாசிகளின் மீது இரக்கந்தோன்றிற்று.

தாசிகளிருவரும் அலறியழுவதைக்கண்ட இளம்வேந் தன் அத்தாசிகள்மீது சிறிதும் இரக்கமின்றி, மற்றொரு பக்கத்து நிற்கும் கிங்கரர்களைப்பார்த்து, ஏ கிங்கரர்களே! இத்தாசிகளிருவரையும், இருப்பூசிகொண்டு அவர்கள் கண்களைக்குத்திப் பொட்டையாக்கிப் புலி, கரடி, யானை முதலிய துஷ்டமிருகங்கள் வாழும் அடர்ந்த ஆரண்ணி யத்திற் கொண்டுபோய் விட்டு வாருங்களென்று கட்டளை யிட்டான். அதனைக்கேட்ட கிங்கரர்கள் அப்படியே செய் கிறோமென்று கூறி அரசனை வணங்கினார்கள்.

அரசன் உத்தரவைக்கேட்ட தாசியும், மகளும் இடியேறுண்ட சர்ப்பம்போல் மனம்பதற, உடல்நடுங்கப் பூமியில் விழுந்து புரண்டு புலம்பியழுதார்கள்.

பிறரின்னலை இந்நாள்காறும் ஒரு சிறிதுமறியாத இள ரசியார், தாசிகளின் துக்கத்தைக்கண்டு சகியாதவராய் ரெலென வெளியில் வந்து தன்நாயகன் பாதங்களில் விழுந்து வணங்கி, எனது உடல் பொருள் ஆவி மூன்று மாகவுள்ள துணைவரே! அபலைகளான தாசிகளுக்கு இக் கொடிய தண்டனை விதிக்கக்கூடாது. மோசஞ் செய்தல் தாசிகளின் குலத்தொழில். குலத்தொழிலைப் புரிந்த இவர்களைத் தண்டிப்பது நியாயமல்ல. இவர்களை விட்டு விடவேண்டுமென்று கூறிப் பிரார்த்தித்தார். இராஜமார்த் தாண்டன் றனது ஆருயிரன்ன பெண்ணரசியின் இரக்கத் தையும், மாண்பையுங்கண்டு பெரிது மகிழ்ந்து மதனகல் யாணியை நோக்கி, பெண்கள் நாயகமே! உன் விருப்பப்படி

செய்கிறேனென்று கூறித் தன்னுயகியை மகிழச்செய்து, பின்னர் கீழே விழுந்து புரண்டழுத தாசிகளை நோக்கி, இரக்கமோரணுவுமில்லா மனத்தினையுடைய தாசிகளே! நீங்கள் எழுந்து உங்கள் வீட்டிற்குச் சென்று உங்களுக்கு வேண்டிய பொருள்களை யெடுத்துக்கொண்டு இன்றே இந்த இராஜ்ஜியத்தைத் துறந்து வேறு இராஜ்ஜியத்திற் குப் போய்விடவேண்டும். நாளைக்காலையில் இந்த இராஜ்ஜி யத்தில் இருப்பீர்களேயானல் உங்களைப்பிடித்துவர சொல்லி சித்திரவதை செய்வேன். உங்கள் வஞ்சகத் தாலும், மோசத்தாலும் உலகசுகத்தை இழந்திருந்த இளவரசியாரின் உள்ளக்கருணையால் நீங்கள் இன்று என் னுடைய தெண்டனையிலிருந்தும் தவறினீர்களென்று கூறி அருகில் நின்ற மதனகல்யாணியுடன் அரசகுமாரன்பங்களா விற்குள் சென்றான். இளவரசியின் தயாளசிந்தையை யறிந்தபலரும் இளவரசியை வாயார வாழ்த்தினார்கள். கொடிய தாசிகளும் வாழ்த்தினார்கள்.

அரச தெண்டனையிலிருந்தும் விடுதலை பெற்ற தாசி கள் தமது வீட்டையடைந்து நகைகளையும், ரொக்கங்களை யும், வஸ்திரங்களையும், வெள்ளி பொன் முதலியவற்றாலாகு சில பாத்திரங்களையும் எடுத்துக்கொண்டு அன்றே பிர யாணமாகிச் சேரநாட்டிலுள்ள ஓர் நகரத்தையடைந்து வாழ்ந்து வந்தார்கள். எடுத்துக்கொண்டு போனவை நீங்கலாக மற்றுள்ள தாசிகளின் சொத்துக்கள் அரச குமாரனைச் சேர்ந்துவிட்டன.

இராஜமார்த்தாண்டன் நிலையையறிந்த அரசன், அவனுடைய மந்திரி, பிரதானி முதலிய சகலரும் மிகு சந்தோஷத்தை யடைந்தார்கள். எல்லாரையும் வி சுகுமாரன் அதிக சந்தோஷத்தையடைந்தான்.

இராஜமார்த்தாண்டனும், மதன கல்யாணியும் புஷ் பத்தையும், அதன் மணத்தையும் போல மனக்கலப்புற்று நாடொறும் இன்பமும் மகிழ்ச்சியும் வளர்ந்தோங்க வாழ்ந்து வந்தார்கள். சுபம்! சுபம்!! சுபம்!!!

செய்கிறேனென்
பின்னர் கிழே
இரக்கமோர
நீங்கள் எழுர்
வேண்டிய
இந்த இர
குப் போ
யத்தில்
சொல்
தாலு
இள

உ

# விசேஷ அறிவிப்பு.

---

ப்புத்தக விலையால் வரும் ஊதியம் சிறந்த ருமத்துக்குச் செலவிடப்படும். ஆதலால், து தமிழ்நாட்டு அன்பர்கள் தடை சொல் து ஒவ்வொரு புத்தகம் வாங்கிக்கொண்டு விலைப்பொருளைக் கொடுத் துதவிபுரிதல் வேண் டும். ஒரு புத்தகம் வாங்குவோருக்கு ஒரு அஸ்வமேதயாகப்பலன் கிடைக்கும். இதில்யாதுஞ் சந்தேகமில்லை.

ஆ. ச.

---

இப்புஸ்தகம் வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத் திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

மானேஜர்,
ஹரிஸமய திவாகரம் பிரஸ்,
3, மஞ்சணக்காரத் தெரு,
மதுரை.